# காயத்ரியின் மகிமையும் தெய்வீகமும்




தொகுப்பு

நாச்சியார்கோவில்

கி. இராமதுரை

# காயத்ரியின்
# மகிமையும் தெய்வீகமும்



தொகுப்பு

நாச்சியார்கோவில்

**கி. இராமதுரை**

Phone : (04112) 222115 Email : skmkanci@md3.vsnl.net.in.
Fax : 224305

உ

Sri Chandramouleeswaraya Namaha:

Sri Sankara Bhaghavadpadacharya Paramparagatha Moolamnaya Sarvagnapeeta

**His Holiness Sri Kanchi Kamakoti Peetadhipathi**

**JAGADGURU SRI SANKARACHARYA SWAMIGAL**

**Srimatam Samsthanam**

**No.1, Salai Street, Kancheepuram - 631 502.**

---

Date : 3-11-2003

புனித பாரத பூமி நாச்சியார் கோயிலில் பிறந்து சென்னை வேளச்சேரியில் வஸிக்கும் நமது ப்ரிய சிஷ்யரான இராமதுரை அவர்கள் நமது ஸனாதன தர்மங்களையும், உயர்ந்த கலாசாரங் களையும் மக்களிடையே பரப்பும் பொருட்டு "தெய்வீக திரட்டு" என்னும் நூலையும், தேவாரம், திருவாசகம் முதலான பக்தி பாடல்கள், ஸ்தோத்ரங்களையும் தொகுத்து "தெய்வீக கதம்பம்" என்னும் நூலையும் எழுதி வெளி யிட்டுள்ளார். இப்பொழுது "காயத்ரியின் மகிமையும், தெய்வீகமும்" என்னும் நூலை வெளியிட்டிருப்பதை யறிந்து மிக்க ஸந்தோஷம் அடைகிறோம்.

நமது அனாதியான ஸனாதன தர்மங்களுக்கு ஆணிவேராக உள்ள வேதங்கள் அனைத்துக்கும் தாயாக உள்ள காயத்ரீ மஹாமந்தரம் 24 அக்ஷரங்களை உடையது. கோடிக்கணக்கான மந்தரங்கள் இருப்பினும் காயத்ரீ மந்தரம் ஒன்றுக்குத்தான் மஹாமந்தரம் என்று பெயர். அப்படிப்பட்ட உயர்ந்த மஹாமந்தரத்தின் பெருமைகளையும் அதனை ஜபிக்க வேண்டிய முறைகளையும் அதனை ஜபிப்பதால் ஏற்படும் நற்பயன்களையும் ஆசிரியர் மிக தெளிவாக விளக்கி யிருக்கிறார். இந்நூலின் உதவியால் உபதேசம் ஆனவர்கள் (உரியவர்கள் அனைவரும் ஜபம் செய்து நற்பயனையடையவும் நூலாசிரியரும் இம்மாதிரி அனேக நூல்களை எழுதி மக்களுக்கு ஸேவை செய்து கொண்டு இருக்கவும் வேத மாதாவான காயத்ரீ தேவியின் அருளால் உலக மனைத்தும் இஹ, பர, ஸகல மங்களங்களையும் அடைந்து பரம க்ஷேமமாக வாழவேண்டும் என்று ஆசீர்வதிக்கிறோம்.

நாராயணஸ்மிருதி.

"அபிராமி என்றன் விழுத்துணையே"

# அணிந்துரை

'செந்தமிழ்ச் செம்மல்', இலக்கியப் பேரொளி, செஞ்சொல்மணி,
செந்தமிழ் நாவரசு, அருள்மொழி அழகர், வியன்கலைஅரசு,
தண்டமிழ்த் தேனருவி, இறைபணிச்செம்மல், புலவர் திலகம்
**சி. வித்யாசாகர்,**
தமிழ்த்துறைத் தலைவர், வனவாணி, ஐ.ஐ.டி. சென்னை – 36.
ஸ்ரீ சுந்தரவிநாயகர் திருக்கோவில் தெய்வத்தானப் புலவர்,
மடிப்பாக்கம், சென்னை – 91

'அரிது அரிது மானிடராதல் அரிது' என்ற அவ்வை அமுதமொழி சிந்திக்கப்பாலது. அன்பு, கருணை, பாசம், நேசம், ஒழுக்கம், இறை பற்று இவை போன்ற உத்தம குணங்களாலேயே மனித வாழ்வு தேன்மலர் வாழ்வாய்த் திகழ்கிறது. சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் படிநிலை மூலம் பக்தியால், நேயத்தால் சிறந்த நம் நல்லோர்களின் வழிகாட்டு நெறிகளே நமக்கு கலங்கரை விளக்கு. நம்மை உயர்த்தும் கோபுரங்கள்.

எண்ணங்களில், வார்த்தைகளில், செயல்களில், பழக்கங்களில், ஒழுக்கத்தில், நேர்மையில் கவனமாய் இருக்க வேண்டிய நம்மின் தலையாய கடமை குருவருளும் திருவருளும் பெற நாளும் இறைவனைப் போற்றுதலும், நற்கதை கேட்டலும், நற்செயலாற்றலுமேயாம்.

**'என்கடன் ஆன்மிக அரிய தகவல்களைத் தொகுத்தளித்தலே'** எனும் தொடரை தம் உயிர் மூச்சாகக் கொண்ட அருட் தொண்டர் நாச்சியார் கோவில் K. இராமதுரை 1997-ல் தெய்வீகத் திரட்டு (முதல் பகுதி) 1999-ல் தெய்வீகத் திரட்டு (இரண்டாம் பகுதி) 2001-ல் தெய்வீகக் கதம்பம் எனும் வரிசையில் **'வேதம் நான்கின் மெய்ப்பொருளாத் திகழும்'** காயத்ரி மகிமையும் தெய்வீகமும் எனும் நான்காவது நன்னூலை 2004-ல் நமது கரங்களில் தவழ விட்டுள்ளார்.

**இப்புனிதப் பனுவலில்** மூலாதார மூர்த்தியாய் கணபதி ஸ்லோகம் சின்முத்திரை தத்துவம் காட்டிய ஸ்ரீ தட்சிணா மூர்த்தம் தகவல் அகர, உகர, மகரங்களின் கூட்டொலியாய்த் திகழும் **'ஓம்'** எழுத்தின் சிறப்பு, நற்றுணையாகும் 'நமசிவாய' மந்திர வலிமை, சதுர் வேதம் பூஜித்த வேதஸ்ரேணீ என்ற பெயர்

மருவி வேளச்சேரியாய் மாறிய திருத்தல வரலாறு, 'காயத்ரி மந்திரம் எல்லா மந்திரங்களுக்கும் தாய், தன்னை யார் அனுதினமும் ஜபிக்கிறார்களோ, அவர்களை தம் கண்ணெனக் காக்கும் ஸ்ரீ காயத்ரிதேவி மஹிமை, அனைத்துத் தெய்வங் களையும், உள்ளத்தின் உள்ளொலியால் மானசீகமாக வழிபட மந்திர காயத்ரி உண்டு. அவை அனைத்தையும் ஒருங்கே இணைத்த **"தேவதா காயத்ரி பொக்கிஷம்" "ஆசறு நல்ல நல்ல அவை நல்ல நல்ல** என்று ஆணித்தரமாய் தம்முள்ளத்தில் அம்மையப்பன் பெருந்துணையாய் உள்ளதால் திருஞான சம்பந்தப் பெருமான் நாவார மொழிந்த 'கோளறு பதிகமும் உரையும்', **'கோள் என் செயும், கொடுங்கூற்று என் செயும்'** என்று உறுதிபட வாக்கால் உயர்ந்த அருணகிரியாரின் அடியொற்றி **கிரஹமாவது யாது?** எனும் கட்டுரையும், எமனிடம் ஆத்ம தத்துவ விசாரம் பற்றி விவாதித்த நசிகேதன் வரலாறு, நவக்கிரகப் பாடல்கள், பண்டைய காலத்தில் சாதுக்கள் உஞ்சவிருத்தி எடுத்து வாழ்ந்தமையும், கால மாற்றத்தில் திருக்கோவில் அன்றாட பூஜை செலவினத்திற்கும் வளர்ச்சிக்கும் கூட 'உஞ்சவிருத்தி' மாற்றியமைக்கப்பட்டது பற்றிய விளக்கவுரை, வேதம் அனைத்திற்கும் வித்தாகும் திருப்பாவை அருளிய ஆண்டாள் அரங்கனோடு இரண்டறக் கலந்தாலும், கோவிந்தனைப் புகழும்போது' குறையொன்றுமில்லா' என்ற அரிய சொல்லை அடியொற்றி மூதறிஞர் இராஜாஜி அவர்களால் இயற்றப்பட்ட 'குறையொன்றுமில்லை மறை மூர்த்தி கண்ணா' ஞானப் பாடல் இணைப்பு, அறத்தின் நாயகன் இராமபிரானே பாராயணம் செய்த ஆதித்ய ஹ்ருதய சுருக்கம் (சூரிய நமஸ்காரச் சுருக்கம்), ஊர் தோறும் அருள் வழங்கிடும் விநாயகர், முருகர் (வடிவங்கள்) பற்றிய செய்தித் துளிகள், இவையனைத்திற்கும் முத்தாய்ப்பாய் ஸ்ரீ ஆதிசங்கரர் பலமுறை லலிதா சகஸ்ர நாமத்திற்கு உரை எழுத முனைந்தும், அருள்தரும் அம்பிகை தம் திருக்கரத்தால் உரை எழுத எடுத்துக் கொடுத்த ஞான நூலாம் "ஸ்ரீ விஷ்ணு ஸகஸ்ர நாமம்" **இணைப்பு இவை அனைத்தும் இணைந்த "ஞானக் குவியலே" இத்திருநூல்.**

இத்தகைய புனிதப் பணியை பொறுப்புடனும் பொறுப் புடனும் செய்பவர் யார்? **அரும்பு கோணிடில் மணம் குன்றா, கரும்பு கோணிடில் சுவை குறையா, இரும்பு கோணிடில் யானை வெல்ல –**

**ஆனால் நரம்பு கோணிடில் நாம் என் செய்வோம்?** - என்ற பழம் பாடலைத் தூக்கியெறிந்த தூயவர், புண்ணியசீலர் நாச்சியார் கோவில் K. இராமதுரை அவர்கள் 'யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' எனும் உயரிய நோக்கோடு, கங்கைபோல் , காவிரிபோல் நம் இந்து மதத்தில் திரண்டுள்ள ஆன்மிக கருவூலங்களைத் தொகுத்து, தமது பொறுப்பில் பக்தி நூலாய் வழங்கும் "வித்யாதான அருள்வள்ளல் இராமதுரை **"வாழிய நூறாண்டு வளம் பல பெற்றே!"**

இப்பக்திவழி சாரத்தின் ஞான மலருக்கு, ஞால குருவாகவும், ஞான குருவாகத் திகழும் ஸ்ரீ காஞ்சி மாமுனிவரின் ஸ்ரீமுகம் அம்பிகை அருள்முகமெனப் பிரகாசிக்கிறது. ஜகமே போற்றும் ஜகத்குருவின் பாத மலருக்கு நம்மின் நன்றி மலர்கள். மனம், மொழி, மெய்யால் போற்றி வணங்குவோமாக!

"உலகமெலாம் பக்தி நெறி ஓங்க வேண்டும்"

"ஒவ்வொருவர் மனக்குறையும் நீங்க வேண்டும்"

இவ்வருள் நூலை வெளியிட்டு வாழ்த்துரை வழங்கும் மடிப்பாக்கம் **ஸ்ரீ சுந்தரவிநாயகர் பக்தஜன சபாவிற்கு** நெஞ்சார்ந்த நன்றிமலர்கள் நம் காணிக்கை.

அன்பன்,

சி. வித்யாசாகர்

23-11-2003

**'அபிசாய்' அருளகம்**
**சதாசிவம் நகர்,**
**மடிப்பாக்கம், சென்னை – 91**
**தொலைபேசி எண்: 22471107**

# முன்னுரை

ஆன்மீக எண்ணம் மனதில் தோன்றினாலே அவன் தெய்வ தரிசனம், நல்லோர் சேர்க்கை இறை அருளால் நல்ல தெய்வீக தன்மையை பெறுகிறான். "சேரிடம் அறிந்து சேர்" என்பது முதுமொழி நல்லோரோடு இணங்கு மூத்தோர் சொல் வார்த்தை அமிர்தம் இவைகள் எல்லாம் நாம் ஒவ்வொருவரும் மனதில் நிலை நிறுத்திக் கொள்ள வேண்டும். நம் நாட்டுக் கலாசாரம் மிகவும் பழமைவாய்ந்ததோடு அல்லாமல் விஞ்ஞான பக்தி முதலிய்வற்றில் நாம் அறியாமலேயே பின்னிப் பிணைந்து உள்ள ஒன்றாகும்.

"ஆற்றுப் பெருக்கற்று அடி சுடு நாளுமவ்வாறு
ஊற்றுப் பெருக்கால் உலகூட்டும்"

என்பது போல் நல்ல பழக்க வழக்கங்கள் தெய்வ தரிசனத்தால் தெய்வீகம் கூடும். நம் நாட்டின் தட்பவெட்ப நிலைக்கு ஏற்றவாறு முன்பு பெரியோர்களாலும் எல்லா இனத்தாராலும் நமது உடலுக்கு கெடுதல் ஏற்படாதவாறு சிகையை அலங்கரித்து வந்திருந்தனர்.

சீக்கியர்கள் தலை முடி தாடியுடன் டர்பனுடன் இன்றும் உள்ளார்கள். சிலர் டர்பன் மாதிரி தலையை மூடிக் கொண்டார்கள். சிலர் குல்லாய் அணிந்திருந்தார்கள். தமிழ்நாட்டில் பொதுவாக தென்னகத்தில் வெட்பநிலைக்கு ஏற்ப முண்டாசு என்று சொல்லக்கூடிய முறையில் தலையில் துணியால் சிலர் அலங்கரித்து இருந்தார்கள். வேறுபலர் தலையில் முடியை பின்புரம் கொண்டை மாதிரி செய்து கொண்டும் முன்புரம் சிறிது முடியை வழித்துக் கொண்டும் கடைபிடித்தார்கள். இம்முறை குறிப்பாக தமிழகத்தில் எல்லா இனத்தாராலும் ஒரு காலத்தில் கடைபிடிக்கப்பட்டது. பின்புறம் இருக்கும் கொண்டைமுடி பெருமூளையைப் பாதிக்காமலிருக்கவும் மின்புரம் உடலில் உள்ள உஷ்ணத்தை வெளியேற்றவும்தான். இவைகள் யாவும் விஞ்ஞான ரீதியாக நமது அங்கங்களை காக்கவே எளிமையாக பெரியோர்கள் கடைபிடித்தார்கள். பெண்கள் நுண்ணறிவு படைத்தவர்கள் என்பார்கள். அவற்றுடன் அவர்கள் தலையில் உள்ள முடியானது பெருமூளை போன்ற பாகங்களை காத்து சிந்தனா சக்தியுடன் கூடிய நுண்ணறிவைக் கொடுக்கிறது என்கிறார்கள்.

காலப்போக்கில் வெளிநாட்டினரின் படையெடுப்பால நமது பழக்கவழக்கங்கள் சூழ்நிலையின் காரணமாக மாறி தற்போதைய நிலையில் உள்ளோம். இல்லாவிட்டால் எந்தக் காரணமாக இருந்தாலும் கீழ்க்கண்ட திருக்குறளைப் பேணியும் மாற்றம் அடைந்துள்ளோம் எனவும் பெருமை கொள்ளலாம்.

"மழித்தலும் நீட்டலும் வேண்டா இவ்வியநுலகம்
பழித்தது ஒழித்துவிடின்"

நம் நாட்டில் எல்லா இனத்தாறும் இறைவணக்கம் செய்யாமல் இருந்ததில்லை. சூரியோதயம், சூரியன் தலைக்கு நேராக இருக்கும் போது; சூரியன் மலைவாயிலில் இருக்கும் போது (மறையும் போது) பக்தி பெருக்கினை கடைபிடித்தனர் சந்தியா வந்தனம் என்று சொல்லக்கூடிய வழிபாட்டில் நமக்கு முன்னோகள் காட்டிய வழி சாலச்சிறந்தது. அந்தணர்கள், வைசியர்கள் க்ஷத்ரியர்கள் யாவரும் மேற்கூறிய சந்தியாவந்தனம் இறைவணக்கத்தை கடைபிடித்து வந்தார்கள் என்பதற்கு "மகாபாரதம் ஓர் எடுத்துக் காட்டு. குருக்ஷேத்திரப் போரின் போது அர்க்யம் விட தண்ணீர் கிடைக்காத போதும் சண்டையில் கிளம்பிய புழுதியைக் கொண்டு காலம் தவறாமல் சேனா வீரர்கள் அர்க்கியம் கொடுத்தார்கள் என்று சொல்லப்படுகிறது. அந்த அளவுக்கு இறை உணர்வு இருந்த நம் நாட்டில் ஏதோ அந்தணர்களில் சிலரும் மற்றோரில் சிலரும்தான் கடைபிடிக்கிறார்கள் என்பதை நினைக்கும் போது நம் பண்பாட்டுக்கு மேலைநாட்டு மோகத்தாலும் (பிழைக்கும் வழிமுறையாலும்) ஆர்வம் இல்லாமல் சிதறும் நிலைக்குப் போய்விடப் போகிறதே என்பதை மனக்கண்ணால் திரும்பத் திரும்ப நினைக்கும்போது "நெஞ்சு பொறுக்குதில்லையே" என வேதனைப்பட வேண்டியுள்ளது.

இடைக்காட்டுச் சித்தர் வினோதமான காரியங்களைச் செய்பவர். இவர் ஆடு மேய்த்தார். "காணாமல் கோணாமல் கண்டுகொடு". 'ஆடுகாண் போகுதுபார் என்று சொல்லி யிக்கிறார். சூரியோதயம், சூரியன் தனக்கு நேராக இருக்கும் போதும் மலைவாயில் இருக்கும் போதும் அதாவது மறையும் தருவாயில் அர்க்யம் கொடுக்க வேண்டுமென்றார்.

(கங்கையில்) நீராடினாலும் (சேது) தரிசனத்தாலும் நம் பாபம் போகும் என்று மிக லேசாக சொல்லி இருக்கிறார்கள். இந்த மாதிரியான வழிபாட்டில் (சந்தியாவந்தனத்தின்) ஓர்

அங்கம் காயத்திரி ஜெபம். இதனை தாய் வடிவமாக உபாசிக்க வேண்டும். இந்த மாதிரியான நித்ய கர்மானுஷ்டங்களை கடைபிடிப்பவர்கள் முகத்தில் தேஜஸ் எனக் கூடிய நல்ல கலை ஏற்படுகிறது மேற்கண்டவற்றுடன் வீட்டில் பெரியோர்களால் ஆராதிக்கப்பட்ட பூஜைகளைச் செய்தல். கோயில்களில் இறைவழிபாடு செய்தல் முதலியன தெய்வத் தன்மைக்கு ஊன்றுகோலாக உள்ளது. பெண்டிர்களும் தங்கள் பங்கிற்கு பலவித விரத பூஜைகளில் ஈடுபட்டு தாம் வசிக்கும் வீட்டிலும் அக்கம் பக்கத்திலும் தெய்வமணம் கமழும் படி செய்வார்கள். குழந்தைகளுக்கு கதை சொல்லும் போதும் தெய்வ சம்பந்தப் பட்டதாகவே சொல்வார்கள்.

தற்கால நாகரிக உலகில் ஏதோ பத்தாம் பசலித்தனமான விஷயத்தை விளக்கி நேரத்தை வீணாக்குவதாக எண்ணாமல் நம் பெரியோர்களுடைய விஞ்ஞான பூர்வமான வாழ்க்கை முறையை நினைவு கூர்ந்தோமே தவிர வேறொன்றுமில்லை.

பிராணாயாமம் என்ற முறை: நுரையீரலுக்கும் இரத்த சுத்திகரிப்புக்கும் சிறந்தது.

இம்மாதிரி பலமுறைகளை ஆராயலாம்.

கோயில்களைப் பற்றி நினைக்கும்போது இடிந்தும், சிதலமாயும் இருக்கும் ஆலயங்கள் நம்நாட்டுச் சொத்து. அவற்றைப் புதுப்பித்து நித்ய பூஜைகள் குறைவின்றி நடக்கும்படி செய்ய வேண்டியது நம்முடைய முக்யமான கடமையாகும். கோயிலுக்கு வரும் அன்பர்கள் திருப்தியடையும்படி பூஜை செய்வது அர்ச்சகர்களுடைய கடமை. மக்களுடைய மனத்தையும் பகவான் பால் ஈர்த்து நாட்டில் நன்னெறியும் இறை உணர்வும் தழைக்கச் செய்யும் சமூக சேவையைச் செய்யும் தொண்டர்கள் ஈசனுக்குப் பணி செய்வதை ஒரு பேறாகக் கருதி வறுமையோடு போராடிக் கொண்டு கடமையை செய்வனே செய்து வருகிறார்கள். இதற்காக நாம் அர்ச்சகர்களை போற்றிக் கொண்டாடக் கடமைப்பட்டுள்ளோம். பரம்பரை பரம் பரையாக இருக்கும் அர்ச்சகர்கள் ஒவ்வொரு சந்நிதியைப் பற்றியும் விளக்கிக் கூறும் ஆற்றல் உள்ளவர்களாக இருக்கிறார்கள். பிழைப்பின் காரணமாக அவர்கள் பிழைப்பைத் தேடி வெளியிடம் வருவதால் புதியதாக வருபவர்களுக்கு சரித்திரங்களை அறிந்து கூறும் வாய்ப்பு ஏற்படவில்லை. சரித்திர முக்யத்வம் வாய்ந்த கோயில்களை வருங்கால சந்ததியினருக்காக

பராமரிப்பது ஒரு பெரிய பொறுப்பு. புல் மண்டியும், புதர்கள் வளர்ந்தும் பரிதாபமாகக் காட்சி தரும் கோயில்களைப் பார்க்கும் போது "அப்பர் சுவாமிகள்" மறுபடியும் இப்புவியில் வந்து உதவ நேருமோ என ஏக்கம் ஏற்படும்.

ஆதிசங்கர பகவத் பாதாள் திருக்கைலாயம் சென்று ஈசுவரனிடம் பெற்ற ஸ்படிகலிங்கங்களை அவரால் ஸ்தாபிக்கப்பட்ட மடங்களில் அத்வத சித்தாந்தத்தை அடைய பெரும் உதவி செய்ததோடு அல்லாமல் காஞ்சியில் யோகலிங்கமான சந்திர மௌலீஸ்வரரை பூஜித்து மூலமடமான ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடத்தை நமக்கு நல்வழிகாட்ட அருளினார். அவருடைய அடிச்சுவட்டில் தற்போதைய பீடாதிபதியான ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகளும் திருக்கைலாயம் சென்று "ஸர்வே ஜனா சுகினோ பவந்து" என்கிற அடிப்படையில் சிரமத்தையும் பாராட்டாமல் ஈசனைப் பிரார்த்தித்து வந்தவர் என்பதை நாம் அறிவோம்.

அப்பேர்பட்ட பீடாதிபதிகளான ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள், ஸ்ரீ விஜயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகளின் பாதார விந்தங்களில் இந்த தொகுப்பு மலரைச் சமர்பிக்கிறேன்.

பிழை திருத்தம் செய்த புலவர் திலகத்திற்கும் இதனைப் பிரசுரிக்க உதவிய அச்சகத்தாருக்கும் நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.

**பிறவாமை வேண்டும் மீண்டும் பிறப்பு உண்டேல் உன்னை என்றும் மறவாமை வேண்டும், அரவா! நீ ஆடும் போது இன்னும் நான் மகிழ்ந்து பாடி உன் அடியின் கீழ் இருக்க வேண்டும்.**

நாச்சியார் கோவில்
**கி. இராமதுரை**

**திருவோகம்**
**ப.எண். 9, புதிய எண் 10**
**பதினோராவது மெயின்ரோடு,**
**விஜயநகர்,**
**வேளச்சேரி,**
**சென்னை - 42.**
**தேதி : 2-11-2003**



கஜாநநம் பூதகணாதி ஸேவிதம்
கபித்த ஜம்பூ பல ஸார பக்ஷிதம்
உமாஸுதம் ஸோக விநாசகாரணம்
நமாமி விக்நேஸ்வர பாத பங்கஜம்

## ஸ்ரீ குருவந்தனம்

ஓம் ஸ்ரீ குருப்யோநம: ஹரி: ஓம்
குருர் ப்ரஹ்மா குருர்விஷ்ணு: குருர் தேவோ மஹேஸ்வர
குருஸ் ஸாக்ஷாத் ப்ரப்ரஹ்ம தஸ்மை ஸ்ரீகுரவேநம:
குரவே ஸர்வலோகானாம் பிஷஜே பவரோகினாம்!
நிதயே ஸர்வ வித்யானாம் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்த யேநம:

ஸதா சிவ–ஸமாரம்பாம் சங்கராசார்ய மத்யமாம்
அஸ்மத் – ஆசார்ய – பர்யந்தாம் வந்தே குருபரம்பராம்
குரு சரணார விந்தாப்யாம் நமோ நம.

# பொருளடக்கம்



ஜகத்குரு ஸ்ரீ சந்திரசேகரேந்திர
சரஸ்வதி சுவாமிகள்

Sri Kanc̣hi Kama Koti Peetam

உ

ஸ்ரீ காஞ்சிகாமகோடி பீடாதிபதி ஜகத்குரு
பூஜ்யஸ்ரீ சந்த்ரசேகரேந்த்ர சரஸ்வதீ மஹாஸ்வாமிகளின்

## அருள்வாக்கு

# பிள்ளையார் சுழி

---

எதை எழுத ஆரம்பித்தாலும் முதலில் பிள்ளையார் சுழி போட்டுவிட்டுத்தான் ஆரம்பிக்கின்றோம். பெரிய காவியமாகத் தான் இருக்க வேண்டும் என்றில்லை. ஒரு போஸ்ட கார்டானாலும் ஸரி, கடை ஸாமான் லிஸ்டானாலும் ஸரி முதலில் பிள்ளையார் சுழி போட்டுவிட்டுத்தான் எழுத ஆரம்பிக்கின்றோம். எழுதுவது மட்டுமில்லாமல், எந்தக் கார்யமானாலும், ஆரம்பிக்கும் போது அது விக்னமில்லாமல் பூர்த்தியாவதற்கு, மஹா கணபதியயைப் பூஜித்துத்தானாக வேண்டும். அவரை ஸ்மரிக்காமல் எந்தக் கார்யமுமில்லை யானாலும், இந்த எழுத்துப் பணியில் அவரை ஸ்மரிக்கின்றோம் என்பது எழுத்து மூல நிரூபணமாகவே பிள்ளையார் சுழியில் தெரிகின்றது. பின்னாடி நாம் எழுதப்போகும் விஷயம் சுழித்துப் போகாமலிருக்கப் பிள்ளையார் சுழி போடுகிறோம்.

பிள்ளையார் சுழி போடாமல் “ஓம்”, போடுகின்றவர்களும், கிரந்தம், தமிழ் இரண்டிலுமே அந்த ஓமுக்கம் சுழித்தே ஆரம்பிக்க வேண்டியுள்ளது. அது மட்டுமில்லை; இந்த ப்ரணவஸ்வரூபமும் (ஓமும்) பிள்ளையார் தானே!

நாம் போடும் பிள்ளையார் சுழி ஒரு சின்ன எழுத்தின் மூலம் விக்னேச்வரரை ஸங்கேதமாகத்தான் காட்டுகின்றது; வெளிப்படையாகப் பிள்ளையாரின் பெயரைத் தெரிவிக்க வில்லை. ஆனால் பழங்காலச் சுவடிகளைப் பார்த்தால், அவற்றின் ஆரம்பத்தில் வெளிப்படையாகவே –

“ஸ்ரீ கணாதிபதியே நம:” என்று போட்டிருக்கும்

ஸ்ரீ காஞ்சி மகா சுவாமிகள் அருள்வாக்கு

# ஆடி வெள்ளியில் அம்மனை வணங்குவோம்

இன்று ஆடிவெள்ளி. இந்த நன்னாளில் அன்னை காமாட்சியின் மகிமையை தெரிந்து கொள்ள வேண்டும். காஞ்சி மகா சுவாமிகள் அன்னையைப் பற்றி சொல்வதை கேளுங்கள்.

அம்பிகையை மாயை என்றே பொதுவாக சொல்வார்கள். நாம் உண்டாக்கிக் கொள்ளும் கஷ்டங்களுக்கும், துக்கங் களுக்கும் காரணம் நம்முடைய இந்திரியங்களும், மனசும்தான். இந்திரிய சுகங்களின் வழியிலேயே மனதை செலுத்தி, நம்முடைய சுபாவமான ஆத்மசுகத்தை மறந் திருக்கிறோம். ஐம்புலன்களும் மனசும் நம்மை ஆட்டிப் படைக்கின்றன. இவற்றை செய்தவள் மாயை. அவளே இவற்றை சுத்தப்படுத்தி, இந்திரிய விவகாரங்களிலிருந்தும், ஓயாத சஞ்சலங்களிலிருந்தும் ஜீவனை விடுவிப்பதற்காக சாட்ஷாத் காமாட்சியாகவே வருகிறாள்.

அவள் கருணையின் வர்ணம். நம்முடைய மனோ விருத்தியும், இந்திரிய விவகாரங்களும் அடங்குவதற்கு பராசக்தி யானவள் காமாட்சியாகி, கரும்பு வில்லும், மலர்பாணமும் தாங்கி வந்திருக்கிறாள். அவளது நான்கு கைகளில் ஒன்றில் ஒரு வில்லும், இன்னொன்றில் ஐந்து அம்புகளும் இருக்கும். அந்த வில், கரும்பினால் ஆனது. அம்புகள் புஷ்பங்களால் ஆனது. சாதாரணமாக கெட்டியான இரும்பினால் வில் அமைந் திருக்கும். இங்கோ மதுரமான கரும்பு அம்பாளுக்கு வில்லாக இருக்கிறது. கூரான அம்புகளுக்கு பதில் மிகவும் மிருதிவான மலர்களை பாணங்களாக வைத்திருக் கிறார்கள். அம்பாள் நம் மனங்களை எல்லாம் இந்த வில்லைக் காட்டி வசப்படுத்திக் கொண்டுவிடுகிறாள். அவளது ஐந்து புஷ்ப பானங்களும் நம் ஐம்புலன்களை அடக்கி செயலற்றுப் போகும்படி செய்வதற்காக ஏற்பட்டது. அவள் கையிலுள்ள பாசம் அவளோடு நம்மை கட்டிப்போடும் கயிறு. கையில் உள்ள அங்குசம் நாம் கோபிக்கும் போது நம்மைக் குத்தி அடக்குவதற்காக.

இன்று அம்பிகையை வணங்கி அவள் அருள் பெறுவோம்.

தகவல் : தினமலர், 25-7-2003

# ஓம்

"எட்டும் இரண்டும் அறியாத பேதை" என சித்தர் பாடல் கூறுகிறது. 8 என்பதன் தமிழ் வரிவடிவம் 'அ' '2' என்பது "உ" இங்கு எட்டும் இரண்டும் என்பது ஓம் என்னும் மந்திரத்தின் அ+உ+ம = ஓம் என்பதன் முதல் இரு எழுத்துக்களைக் குறிக்கும்.

அ = பிரம்மா

உ = விஷ்ணு

ம = மகேஸ்வரன்

சகுண பிரம்மம் : பிரம்மா, விஷ்ணு, மகேஸ்வரன் மூவரும் சேர்ந்த கூட்டுப் பெயர்தான் 'சகுண பிரம்மம்'.

பரமேஸ்வரனிடமிருந்து சர்வேஸ்வரி ஓங்கார தத்துவத்தை உபதேசமாகப் பெற்ற இடம் சிதம்பரத்திற்கு அருகில் உள்ள ஓமாம்புலியூர் என்னும் ஊர்.

இந்த இடத்தில் சிவபெருமான் பக்தி சிரத்தையுடன் கேட்பவர்களுக்கெல்லாம் ஓங்காரத் தத்துவத்தை உபதேசித்துக் கொண்டிருக்கிறார்.

எப்படி ஒரு சிறிய ஆல விதையில் மிகப்பெரிய ஆலமரமே அடங்கியுள்ளதோ அது போன்றே ஆத்ம ஞானம் என்பது ஒரு மந்திரத்தில் சூட்சுமமாகப் படிந்திருக்கிறது. கணிதத்திலோ அல்லது பௌதீகத்திலோ உள்ள சூத்திரங்கள் அதில் பழக்கப்படாதவனுக்கு ஒன்றும் புரியாது. அது போலவே சாதாரண மனிதர்களுக்கு 'ஓம்', 'ஹ்ரீம்' போன்ற சக்தி வாய்ந்த மந்திரங்கள் பொருளற்ற வெறும் சொற்களாகவே தோன்றும். கலிபோர்னியாவில் 'ஸ்டேண்ட் போர்ட்' பல்கலைக்கழகம் உள்ளது. இதன் ஆதரவுடன் புதுவையில் ஒரு குழுவினர் சில ஆராய்ச்சிகள் செய்தனர். "ஓம்" என்ற பிரணவ மந்திரத்தையும், காயத்ரி மந்திரத்தையும் பலமுறை ஜபம் செய்வதால் நரம்பு மண்டலம் உறுதியாகிறது என்றும் கொடிய நோய்களும் தவிர்க்கப்படுகின்றன என்று கண்டுபிடித்துள்ளார்கள்.

மந்திரம் என்பது வெறும் வாய்ச்சொல் அல்ல அது எண்ணங்களை வலுப்படுத்தும் வீரியம் கொண்டது. ஆழ்ந்து சிந்திக்க சிந்திக்க அதன் வீரியமும் அதிகமாகும். அது வாழ்க்கையில் நிலையான பேருண்மையை நமக்கு காட்டியும் அதனை அடைய வழியையும் உணர்த்துகிறது. ஓம் என்பது நாம்

அடைய வேண்டிய இறுதியான பொருள். 'நமஹ' என்பது அதற்கான மனப் பணிவைக் காட்டும் சரணடையும் வழியைக் காட்டுவது. நமக்குள் இருக்கும் பிரம்மனை நாம் உணர அது வரை எல்லாம் நாமே என்று தவறாக எண்ணியிருந்த அகந்தை அகல உள்ளிருக்கும் நாதனை உணர்ந்து ஒன்றிட மந்திரம் நமது சிந்தனைக்கு சுருதி சேர்த்துக் கொடுக்கிறது. சாதாரண மானுட உயிரையும் மிக உயர்ந்த நிலைக்கு கொண்டு செல்லக்கூடிய அபூர்வமான மார்க்கத்தைக் காட்டும் வழிகாட்டியே ஜபம் அதற்குப் பயன்படும் வாகனமே மந்திரம்.

சுவாமி சின்மையாநந்தா –
A MANUAL OF SELF UNFOLDMENT என்ற நூலிலிருந்து.

மந்திரங்களை சரியாக உச்சாடனம் செய்ய வேண்டியது முக்யம். இல்லாவிட்டால் அதன் பலன்கள் வேறு விதமாய்ப் போய்விடும். ஆகையால் சரியான உச்சரிப்புடனும் சப்தத்துடனும் சொல்வது முக்யம். இயற்கையானது சலனமின்றி அமைதியாய் இருக்கும் மதுரமான விடியற்காலை, நண்பகல், சந்தியாகாலம் முதலியன ஜபம் செய்ய உகந்த காலம். மந்திரத்தில் சக்தி அதன் ஒலியிலேயே இருப்பதால் சரியாக உச்சரிக்கப்பட வேண்டும். மந்திர ஜபம் செய்வதால் மற்ற நினைவுகள் நீங்கி நாம் ஏகாகாரமாகிய ஆத்மாவே என்பதை அறிவோம். ஜபம் செய்யச்செய்ய நம்முள் மனத்தெளிவு ஏற்பட்டு தெய்வீக சக்தியோடு கூடிய அலைகள் எழும்புகின்றன. அவை யாவும் இறை சக்தியே. "ஓம்" என்ற மந்திரத்தை ஜபம் செய்தால் எல்லா ஆன்மீகத் தடைகளும் நீங்கி ஆன்மா விழிப்படையும் என பதஞ்சலி தமது யோக சூத்திரத்தில் கூறுகிறார்.

எந்தப் பொருளைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டுமானாலும் அந்தப் பொருளுக்கு உரிய பெயரின் மூலமாகத்தான் அதைப்பற்றி தெரிந்து கொள்ள முடியும். ஓர் உருவமும், ஒரு பெயரும் இல்லாதவராக இறைவன் இருந்தாலும் அவருக்கு ஒரு பெயர் மிகவும் அவசியமாகும். எல்லா உயிர்களுக்கும் தலைவனாக விளங்கும் இறைவனைத் தெரிந்து கொள்வதற்கும் அவருக்கு ஒரு பெயர் வேண்டும் என்று பதஞ்சலி முனிவர் கூறுகிறார். இறைவன் எங்கும் நிறைந்தவர். இவர் இல்லாத இடமே இல்லை. இப்படி அகண்டாகா[illegible]

விரிந்து பரந்துள்ள இறைவனுக்கு அகண்டமான பெயரே இருக்க வேண்டும் என்று எண்ணுகிறார் பதஞ்சலி முனிவர்.

எனவே இறைவன் நாமாவை ம்ம்ம் என்கிறார். ம்ம்ம் என்று சொல்வது சுலபமில்லை. இது மெய் ஒலி - அதை வாய் திறந்து சொல்ல அதனுடன் உயிர் ஒலியும் சேர வேண்டும். அப்போதுதான் வாய் திறந்து இறைவனை அழைக்கலாம். அதனால் இறைவனை 'ஓம்' என்று சொல்லியும் எழுதியும் வருகின்றார்கள். இதைத்தான் 'சேர்தனி உகரமும் அகரமும் ஆகிய அருட்பெரும் ஜோதி என்று ஓம் என்ற பிரணவத்திற்கு விளக்கம் தருகிறார் அருட்பிரகாச வள்ளலார்.

கண்ணையும், காதையும் மூடிக்கொண்டு அதாவது அதைச் செயல்படாமல் செய்து கொண்டு அமைதியாக ஓர் இடத்தில் அமர வேண்டும். இதை இந்திரிய ஒழுக்கம் என்கிறார் வள்ளலார். மனதையும் எங்கும் அலையவிடாமல் அதை நம் உள்ளேயே சும்மா இருக்கும்படி செய்ய வேண்டும். இதைத்தான் கரண ஒழுக்கம் என்று சொல்கிறார் வள்ளலார். இப்படி இந்திரிய ஒழுக்கமும், கரண ஒழுக்கமும் கைகூடிய செயல்பட்டவுடன் நம் உள் இருந்து தாமே எழும் ஒலியை ஆழ்ந்து கேட்கவேண்டும். அதுதான் இறை ஒலி. இந்த ஒலி இரண்டு காதுக்குள்ளும் கேட்கும். நாம் நம் உள் இருக்கும் இறைவனின் பேச்சைக் கேட்க முடியாமலும் அவர் காட்டும் வழியில் செல்ல முடியாமலும் போலியாக வாழ்கிறோம். அதற்குரிய பயிற்சியினை இடைவிடா சிந்தனையுடன் செய்தால் நன்மை பெறலாம். ஆகவே எடுத்த காரியம் யாவிலும் வெற்றி கிட்ட இறை அருள் பெற சொல்லிக்கொண்டே இருப்போம் ஓம் ஓம் ஓம் என்று பிரணவ மந்திரத்தை.

ஓம் என்ற பிரணவ மந்திரத்தை ஈசனுக்கு ஓதிய சுவாமிநாதனையும் வணங்குவோம்.



# விநாயகரும், திருமுருகனும் (வடிவங்கள்)

### சித்தி விநாயகர், விநாயகர், நர்த்தன விநாயகர்

விஜய நகர் வேளச்சேரியில் அமைந்துள்ள சிவ விஷ்ணு ஆலயத்தில் சித்தி விநாயகர் "ஈசனை நோக்கி தனிச்சந்நதியில் வீற்றுள்ளார். முழுமுதற் கடவுளாகிய விநாயகரை நாம் மறந்தாலும் தரிசிக்கும் வகையில் அம்மையும் அப்பனையும் தரிசிக்கும் போது தரிசிக்கும்படி விநாயகரும், பாலமுருகனும் உள்ளார்கள். கோயிலில் முழங்கும் வேத கோஷங்கள், நித்ய பூஜைகள், தினமும் மங்கையர்கள் ஓதும் லலிதா சகஸ்ரநாம ஒலி, சனிக்கிழமை தோறும் அரும்பெரும் புலவராலும் மங்கையர் களாலும், மழலையர்களாலும் பாடப்படும் தேவார - திருவாசக இசை ஒலி மற்றும் யாவற்றிற்கும் மேலாக மக்களின் பக்திப் பெருக்கினையும் கண்டு ஆனந்த நடனத்துடன் அருள்பாலிக் கிறார் நர்த்தன விநாயகர். இதே கோயிலில் ஆஞ்சநேயர் கோதண்டராமரை நோக்கிய வண்ணம் விநயத்துடன் காட்சி யளிக்கிறார்.

### ஆண்ட விநாயகர்

திருநறையூர் (நாச்சியார் கோவில்) அருள்மிகு அழகம்மை உடனுறை அருள்மிகு சித்தநாத சுவாமி திருக்கோவிலில் விநாயகர் ஆண்ட விநாயகர் என்றழைக்கப்படுகிறார்.

### ஸ்ரீ சுந்தர விநாயகர்

மடிப்பாக்கத்தில் விநாயகர் அருள்தரும் ஸ்ரீ சுந்தர விநாயகராக அருள்பாலிக்கிறார்.

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ ஜெயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகளின் மணி விழாவின்போது சமயப் பிரச்சார நிலையத்தார் வெளியிட்ட வெளியீட்டையும் இத்துடன் நன்றியுடன் சேர்த்துள்ளோம்.

## விநாயகர் வடிவங்கள்

### வெள்ளை விநாயகர்

விநாயகரை மக்கள் மாவு வெல்லத்தில் பிடித்து வழிபடுவது போல தேவர்கள் கடல் நுரையினால் உருவாக்கிய

விநாயகரே திருவலஞ்சுழி விநாயகர். இவருக்கு பச்சைக் கற்பூரம் தூவுவதை தவிர வேறு அபிஷேகம் கிடையாது. இக்கோயில் திருவலஞ்சுழியில் உள்ளது.

## ஆழத்துப் பிள்ளையார்

விருத்தாசலம் கோயிலில் பூமிக்கடியில் 18 அடி அழத்திற்கும் கீழே காணப்படுபவர் ஆழத்துப் பிள்ளையார்.

## பிள்ளையார்பட்டி விநாயகர்

ஐந்து கரத்தான் எனப்படும் விநாயகர் பிள்ளையார் பட்டியில் இரண்டு திருக்கரங்களுடன் அங்குச பாசம் இல்லாமல் துதிக்கை வலம்புரியாக அர்த்த பத்ம ஆசனத்தில் கால்களை மடித்து இருக்கிறார். வலக்கரத்தில் மோதகம் தாங்கி இடக்கரத்தை இடையில் பொருந்திய பெருமிதத்தோடு காட்சி தருகிறார்.

## கறுப்பு வெள்ளை விநாயகர்

கன்னியாகுமரி மாவட்டம் பத்மநாபபுரம் ஊருக்கருகில் கேரளபுரம் எனும் ஊரில் ஆலமரத்தடியில ஒரு விநாயகர் இருக்கிறார். இவர் சந்திரக் காந்தக் கல்லால் ஆனவர். இவர் ஆவணி மாதம் முதல் தை மாதம் முடிய வெண்மையாகவும் மாசி முதல் ஆடி மாதம் முடிய கறுப்பாகவும் காட்சி தருகிறார்.

## ஞானசம்பந்த விநாயகர்

திருஞானசம்பந்தப் பெருமான் தேரமுந்தூருக்கு எழுந்தருளியபோது எது திருமால் கோயில், எது சிவன் கோயில் என்று புரியாமல் திகைக்க சாலையின் அருகே கோயில் கொண்டிருந்த சாலை விநாயகர், "அதோ ஈஸ்வரன் கோயில்" எனக் கிழக்குத் திசையைச் சுட்டிக்காட்டினார். அன்று முதல் சாலை விநாயகர் ஞானசம்பந்த விநாயகர் ஆனார்.

## ஆயிரமும் விநாயகரும்

கும்பகோணத்தில் உள்ள விநாயகருக்கு கரும்பாயிரம் கொண்ட விநாயகர் என்றும் திருவண்ணாமலை ஆலயச் சுவரில் ஒரு சாண் உயரமே கொண்ட விநாயகருக்கு ஆயிரம்

யானை திறை கொண்ட விநாயகர் என்றும் திருநெல்வேலி நகரில் எண்ணாயிரம் பிள்ளையார் என்றும் ஆறுமுக மங்கலம் கினாக்குளம் ஆகிய ஊர்களில் ஆயிரத்தெண் விநாயகர் என்னும் பெயர்களில் வழிபடப் பெறுகிறார்.

## நாலாயிரத்தொரு விநாயகர்

ஸ்ரீராமபிரான் தலைமையில் 4,000 முனிவர்கள் அசுவமேத யாகம் செய்தனர். விநாயகரை வழிபட மறந்ததால் முனிவர் களுக்கு மந்திரம் மறந்து யாகம் தடைபட்டது. நாரதர் வாக்குப்படி விநாயகரை வழிபட்டு யாகம் பூர்த்தியாகியது. விநாயகரும் யாகத்தில் கலந்துகொண்டார். அவரே நாலாயிரத் தொரு விநாயகர். சீர்காழிக்கு கிழக்கே எட்டு கிலோமீட்டர் தொலைவில் உள்ள திருநாங்கூர் செல்லும் வழியில் திருமணிக் கூடம் வைணவத் திருப்பதியில் உள்ள சுயம்பு மூர்த்தி இவர். தெற்கு நோக்கிய சந்நிதி. அபிஷேகம் செய்யும் நீர் நிலையில் உள்ளே சென்று விடுமாம்.

## தனி விநாயகர் தலம்

தென்னாட்டில் விநாயகருக்கென்று தனித்தலம் உள்ள இடம் பிள்ளையார்பட்டி. வடநாட்டில் விநாயகருக்கு என்று தனித்தலம் உள்ள இடம் மகாராஷ்டிரத்தில் உள்ள கணேஷ் கிண்ட்.

## ஷோடச கணபதி

இராமேஸ்வரம் ஸ்ரீசங்கர மடத்தில் சிலை வடிவில ஒரே தூணில் பதினாறு வகையான கணபதி திருமேனிகளை - ஷோடச கணபதி - காணலாம்.

## கணேசாயினி

சுசீந்திரம் தாணுமாலயப் பெருமாள் கோயிலில் விநாயகரின் பெண்மைத் திருவுருவம் (கணேசாயினி) உள்ளது. ஒரு காலை மடித்து மற்றொரு காலை தரையில் ஊன்றிக் கொண்டு சுகாசன நிலையில் பாசம் அங்குசம் ஏந்தி அபயவரத முத்திரைகளுடன் நான்கு கரங்களுடன் விளங்குகிறது.

## புலிப்பாதகணேசர்

மதுரை கோயிலில் துவாரபாலகருக்கு அருகே கம்பத்தடி மண்டபத்தில் வியாக்கிரபாத கணேசனி என்னும் திருவுருவம்

இரண்டு கைகளுடன் ஒரு கையில் தாமரை மலர் ஏந்திக் கொண்டு மற்றொரு கையை தொங்கவிட்டுக் கொண்டு உள்ளது.

### பாலகணபதி

வேலூர்க் கோட்டையில் சிற்பக்கலை செறிந்த திருக் கல்யாண மண்டபத்தில் நவநீத கிருஷ்ணரைப் போல அழகிய குழந்தை வடிவத்தில் விநாயகர் விளங்குகிறார்.

### பஞ்சமுக விநாயகர்

திருவொற்றியூர் தியாகேசுவரர் கோயிலில் சிங்க வாகனத்துடன் ஐந்து தலைகளும் ஒரே வரிசையில் கொண்ட பஞ்சமுக விநாயகர் உள்ளார்.

### பஞ்சமுகர்

நாகப்பட்டினம் காயாரோகணேஸ்வரர் கோயிலில் சிங்கவாகனத்துடன் ஐந்து தலைகளும் நான்கு திசையில் நான்கும் மேலே ஒரு தலையுமாக பஞ்சமுக விநாயகர் அமர்ந்த நிலையில் காட்சி தருகிறார்.

### பதினாறு அடிபஞ்சமுகர்

சேலம் கந்தாஸ்ரமத்தில் நான்கு திசையில் நான்கு தலைகளும் மேலே ஒரு தலையுமாக பஞ்சமுக விநாயகர் மிகப்பெரிய அளவில் 16 அடி உயரத்தில் நின்ற கோலத்தில் சிங்க வாகனத்துடன் காட்சி தருகிறார். அவருக்கு எதிரே 16 அடி உயர பஞ்சமுக ஆஞ்சநேயர் மிகப் பெரிய உருவத்தில் நின்று சேவை சாதிக்கிறார்.

### முக்குறுணி விநாயகர்

மதுரை, திருச்செந்தூர், சிதம்பரம், குமர கோட்டம் முதலிய திருத்தலங்களில் முக்குறுணி விநாயகர் மிகப்பெரிய திருவுருவம் கொண்டு விளங்குகிறார்.

### குழல் ஊதும் விநாயகர்

ஆந்திர மாநிலம் ஸ்ரீ சைலத்தில் விநாயகரின் அழகிய திருவுருவம் கண்ணபிரானைப் போல வேய்ங்குழல் ஊதும் நிலையில் அமைந்து திகழ்கிறது.

## வீணைநாதர் விநாயகர்

தமிழ்நாட்டில் பவானி எனும் திருநணாவில் விநாயகரின் வீணை ஏந்திய திருவுருவம் காணப்படுகிறது.

## ஒலிதரும் விநாயகர்

காஞ்சிபுரம் திருவோணகாந்தன் தனியில் கருவறை மண்டபத்தின் நுழைவாயிலில் சுவரின் முகப்பில் விநாயகர் திருவுருவம் உள்ளது. அவரது அருகில் சென்று நம் செவியை அணுக வைத்து நிற்பின் ஒருவகை ஓங்கார ஒலி ஒலித்துக் கொண்டிருக்கும். பல்லாண்டு காலமாக பல்லாயிரம் மக்கள் கேட்டு மகிழ்ந்து வியந்த வண்ணம் உள்ளனர்.

## பாசம் அங்குசம் இல்லா பரமன்

திருப்பாதிரிப்புலியூர் திருத்தலத்தில் விநாயகர் பாசம் அங்குசத்திற்கு பதிலாக பாதிரிமலர்களை தம் இரு கரங்களிலும் ஏந்தி உள்ளார். நெல்லை மாவட்டம் சங்கரன் கோயிலில் விநாயகர் பாச அங்குசங்களுக்குப் பதிலாக இரு கைகளில் சர்ப்பங்களை ஏந்தி சர்ப்ப கணபதியாக திகழ்கிறார்.

## தேன் அபிஷேக விநாயகர்

தஞ்சை மாவட்டம் திருப்புறம்பயம் திருத்தலத்தில் பிரளயம் காத்த விநாயகர் உள்ளார். இவருக்கு விநாயக சதுர்த்தியன்று ஒரு குடம் தேன் அபிஷேகம் செய்யப்படுகின்றது. மற்ற நாட்களில் அபிஷேகம் கிடையாது.

## இரட்டை எலி வாகனம்

சுசீந்திரம் திருக்கோயிலில் இரட்டை எலிகளை வாகன மாகக் கொண்டு நீலகண்ட விநாயகர் எனும் பெயரில் விநாயகர் காட்சி தருகிறார்.

## இரண்டே கரம்

கர்நாடக மாநிலத்தில் கோகர்ணம் திருத்தலத்தில் உள்ள விநாயகருக்கு இரண்டு திருக்கரங்கள் மட்டும்தான் உண்டு.

## உச்சிப்பிள்ளையார்

குன்று இருக்கும் இடத்தில் குமரன் இருக்கும் வழக்கத்திற்கு மாறாக திருச்சி மலையில் உச்சிப்பிள்ளையார் உள்ளார்.

## கள்ளப் பிள்ளையார்

திருக்கடவூரில் உள்ள விநாயகர் திருநாமம் கள்ளப் பிள்ளையார். சோர வாரணப் பிள்ளையார் எனவும் வழங்கப் படுவார். பாற்கடலில் இருந்து பெற்ற அமுத கலசத்தைக் கொண்டுவந்து மறைவிடத்தில் வைத்தவர் இவர். கள்ளத்தனம் செய்தவராகையால் திருக்கோயிலில் விநாயகருக்குரிய யதா ஸ்தானத்தில் இராமல் ஓரிடத்தில் மறைவாக இருந்தருளுகிறார்.

## சாலிக்கிராம விநாயகர்

தஞ்சைவட்டம் திருநல்லூர் திருக்கோயிலில் சாலிக் கிராமத்தில் செய்யப்பட்ட அழகிய விநாயகர் திருமேனி உள்ளது.

## தஸ ஹஸ்தம்

கொல்லூர் மூகாம்பிகை கோயிலில் பிரகாரத்தில் பத்து கைகளுடன் ஹஸ்த கணபதி வீற்றிருந்தருளுகிறார்.

## யானை உண்ட விளாம்பழம்

யானை தான் விழுங்கும் விளாம்பழத்தின் உள்ளே இருக்கும் சத்துக்களை மட்டும் எடுத்து ஜீரணித்துக் கொண்டு வெளிஓட்டினை வெளியேற்றிவிடும் அபூர்வ ஆற்றல் பெற்றது. அதுபோல ஆனைமுகனும் உயிர்களை தன்மயமாக்கி கூட்டினை விலக்கி வேறாக்கிவிடுவார்.

## பாதாள விநாயகர்

திருக்காளத்தியில் பாதாள விநாயகர் எழுந்தருளி திகழ்கிறார். 35 அடி ஆழத்தில் நில அறைக்கு கீழ் காட்சி தருகிறார். செல்வதற்கு படிகள் உண்டு.

## கணபதி சபை

திருவள்ளூருக்கு அருகில் உள்ள பாவூர் திருக்கோயிலில் நடராஜர் சந்நிதி போகும் வழியில் ஏகாதச கணபதியைத் தரிசிக்கலாம். கணபதி சபை எனும் வகையில் 11 கணபதிகளை ஒருசேர தரிசிக்கும் வாய்ப்பு பிறிதெங்கும் கிடையாது. வலம்புரி விநாயகர் பிரதானமாக உள்ளார்.

## குளம் வெட்டிய விநாயகர்

திருப்புன்கூரில் நந்தி விலக தரிசித்த நந்தனார் கோயிலிலுள்ள குளத்தை வெட்டிச் சீர்படுத்த துணை வேண்டி இறைவனை வேண்டினார். இறைவன் கணபதியை அனுப்பினார். அவர் துணையால் குளம் சீர் செய்தார். அதுவே கணபதி தீர்த்தம். இங்குள்ள விநாயகர் குளம் வெட்டிய விநாயகர் ஆனார்.

## ஆவுடை விநாயகர்

திருவையாறு கோயிலில் ஆவுடையார் மீது விநாயகர் வீற்றிருந்தருள்கிறார். இவரை ஆவுடை விநாயகர் என்பர்.

## செவிசாய்த்த விநாயகர்

அன்பில் ஆலந்துறை கோயிலில் உள்ள விநாயகர், கொள்ளிடத் தென்கரையில் நின்று பாடிய சம்பந்தரின் பாடல்களைச் செவிசாய்த்துக் கேட்டமையால் செவிசாய்த்த விநாயகர் எனப் பெறுகிறார்.

## வேதவிநாயகர்

வேதிகுடி தலத்தில் இறைவன் நான்கு முகங்களாலும் அருளிச் செய்யும் நான்கு வேதங்களையும் செவிசாய்த்து கேட்கும் நிலையில் இடதுகாதை உயர வைத்து அற்புதமாக காட்சி தருகிறார் வேதவிநாயகர்.

## ஆதிவிநாயகர்

நன்னிலம் பூந்தோட்டம் அருகில் உள்ள இதலைப்பதி என வழங்கும் திலதைப்பதியில் உள்ள ஆதிவிநாயகர் தும்பிக்கையில்லாமல் வலக்கால் தொங்கவிட்டு இடக்கால் மடித்து

இடக்கையை இடக்காலின் மீது வைத்து வலக்கை சற்று சாய்ந்த அபயகரமான விளங்க அதிசயமான அழகிய கோலத்தில் உள்ளார்.

## ஐந்நூற்று விநாயகர்

திருவிழைக்கழி கோயிலுக்கு எதிர்நோக்கிய வண்ணம் ஐந்நூற்று விநாயகர் திருக்கோயில் இருக்கின்றது. இதில் பதினாறு விநாயகர் திருமேனிகள் உள்ளன.

## ஏழு கரங்களுடன்

வடாற்காடு மாவட்டம் திருவோத்தூரில் ஏழு கரங்களுடன் நர்த்தன விநாயகர் காட்சி தருகிறார்.

## ஆவடுதுறை விநாயகர்

திருவாவடுதுறைக்கு அம்பிகை பசு வடிவம் கொண்டு வழிபட வந்தபோது உடன் வந்த விநாயகர் துணை வந்த விநாயகர் எனும் பெயரில் கோபுரத்திற்கு தென்பாலும் அகத்தியருக்கு பஞ்சாக்ஷர உபதேசம் செய்த ஸ்ரீ அழகிய விநாயகர் தட்சிணாமூர்த்தி சந்நதியின் கீழ்பாலும் விளங்குகிறார்.

## கரும்பேந்திய கற்பகம்

திருப்பரங்குன்றம் குடைவரைக் கோயிலில் வடக்கு நோக்கிய முருகவேளுக்கு அருகில் துர்க்கைக்கு அருகில் தாமரை மலர் மீதமர்ந்து கைகளில் கனியும் கரும்பும் கொண்டு சூரியன் சந்திரனுடன் கற்பக விநாயகர் விளங்குகின்றார். பலிபீடத்தின் அருகில் மூஷிகம் உள்ளது.

## மாவிலை ஏந்திய விநாயகர்

தஞ்சாவூர் மாவட்டம் இடும்பாவனம் அருகில் உள்ள திருவுசாத்தானம் எனும் கோயிலில் இறைவன் மாமரத்தினடியில் திகழ்வதால் இத்தலம் சூதவனம் எனப்படுகிறது. இதற்கேற்ப தல விநாயகர் மாவிலையைக் கரத்தில் ஏந்தியுள்ளார்.

## கடுக்காய் விநாயகர்

திருவாரூர் வட்டம் திருக்காறாய் கோயிலிலுள்ள விநாயகர் கடுக்காய் விநாயகர் எனப்படுகிறார். வணிகன் ஒருவன் சாதிக்காய் மூட்டைகளை ஏற்றி வரும்போது விநாயகர் சிறுவன் போல வந்து என்ன மூட்டை எனக் கேட்க, வணிகன் ஏமாற்ற நினைத்து? கடுக்காய் என்றான். மூட்டைகள் அனைத்தும் கடுக்காய்களாயின. வணிகன் மனம் திருந்தி வேண்டியபோது விநாயகர் முன்போல சாதிக்காய்களாக மாற்றினார்.

## பிரபாதேவி சித்தி விநாயகர்

பம்பாய் நகரில் பிரபாதேவியில் இரண்டரை அடி உயரமுள்ள விநாயகர் துதிக்கை வலது பக்கமாகத் திரும்பி யுள்ளது. சித்தி-புத்தி சமேதராய் வெள்ளியிலான பீடத்தில் இருபக்கமும் சிங்கமுக உருவங்களுடன் கோயிலில் விளங்கு கிறார். தை மாதம் கணபதி பிறந்தநாள் கொண்டாடப்பெறும் இக்கோயிலில் செவ்வாய்கிழமை தோறும் விசேஷம். சுவாமி செந்நிற மேனியராகத் திகழ்கிறார்.

## சாய்ந்த நிலையில் விநாயகர்

தஞ்சை வட்டம் மேலைக்கடம்பூர் கரக்கோயில் இந்திரன் தன் தாய் பூஜைக்காக குதிரை பூட்டி இழுத்துச் செல்ல முயன்றான். தன்னை வணங்காமல் இக்காரியம் செய்ய முற்பட்ட இந்திரனை தண்டிப்பதற்காக விநாயகர் தன் வலக்காலை ஊன்ற கருவறை அப்படியே நின்று விடுகிறது. அசையவில்லை. இந்த நிலையிலேயே பிரகாரத்தில் சற்று சாய்ந்த நிலையில் விநாயகர் உள்ளார். மூலவர் சிவலிங்கமும் சாய்ந்த நிலையில் உள்ளது.

## மலையின் அடியும் முடியும்

திருச்சிராப்பள்ளியை தென்கயிலாயம் என்றும் வழங்குவ துண்டு. இங்கு மலையடிவாரத்தில் ஸ்ரீ மாணிக்க விநாயகர் சந்நிதியும் மலை நடுவில் ஸ்ரீ மாத்ருபூதேஸ்வரர் ஸ்ரீ சுகந்த குந்தளாம்பிகை சந்நிதியும் மலைமேல் உச்சியில் ஸ்ரீ உச்சிப் பிள்ளையார் சந்நிதியும் உள்ளன.

### விலங்கொடித்த விநாயகர்

திருவெண்காட்டு விநாயகர் பட்டினத்தார் பாடலுக்காக சேந்தனார் விலங்கை ஒடித்து சிறை நீக்கம் செய்ததால் விலங்கொடித்த விநாயகர் எனப்படுகிறார்.

## முருகன் வடிவங்கள்

### கிழக்கு தண்டபாணி

முருகன் கிழக்கு முகமாக நோக்கி தண்டபாணி கோலத்தில் திகழும் திருத்தலங்கள் சென்னிமலை, ஊதிமலை, சிரவணம்பட்டி, மருதமலை, சிணத்துக்கடவு, பவளமலை, ஸ்கந்தாஸ்ரமம், வெண்ணெய்மலை, வடபழனி முதலியன வாகும்.

### மேற்கு தண்டபாணி

முருகப்பெருமான் பழனி, பேரூர், திருப்புல்வயல் எனப்படும் குமரன்மலை ஆகிய திருத்தலங்களில் மேற்கு நோக்கிய வண்ணம் தண்டாயுதபாணி திகழ்கிறார்.

### கழுகாசல மூர்த்தி

கழுகுமலை கோயிலில் மேற்கு நோக்கிய சந்நிதியில் ஒரு முகம் ஆறுகரங்களுடன் மயில் மீது இடதுகாலை மடக்கி வைத்து வலதுகாலை தொங்க விட்ட நிலையில் மேற்கு முகமாக கழுகாசல மூர்த்தி காட்சி தருகிறார். குடைவரைக் கோயிலாத லால் பின்பக்கம் பிரகாரம் கிடையாது.

### யோகநிலையில் முருகன்

யோகநிலையில் உட்கார்ந்திருக்கும் முருகப்பெருமான் கல்திருமேனி மதுராந்தகம் வட்டத்தில் உள்ள குமாரவாடி ஸ்ரீ அழகேச்வரப் பெருமாள் கோயிலில் உள்ளது.

## குடைவரைக் கோயில்

நெல்லை மாவட்டம் வள்ளியூரில் குடைவரைக் கோயிலில் முருகன் வள்ளி தெய்வானையுடன் கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார்.

## திருமுருகன் பூண்டி

திருமுருகன் பூண்டியில் முருகப்பெருமான் வள்ளி தெய்வானையுடன் ஆறுமுகம் பன்னிருகரம் கொண்டு தென்திசை நோக்கியுள்ளார். முருகன் சந்நிதியில் சிவபெருமான் லிங்க வடிவில் உறைகிறார்.

## நாகாபரண முருகர்

சேலம் மாவட்டம் கபிலர்மலை கருவறை குடைவரையாக அமைக்கப்பட்டது. இங்கு முருகன் பாலமுருகனாக கிழக்கு முகமாக நின்ற கோலத்தில் காட்சி தருகிறார். மூலவருக்கு வலப்புறம் சுயம்பு இருப்பதைக் காணலாம். உற்சவர் நாகாபரணத்துடன் காட்சியளிக்கிறார்.

## செங்கோட்டு வேலன்

திருச்செங்கோட்டு மலைமீது முருகன் பால முருகனாக கிழக்கு நோக்கி நின்ற திருக்கோலத்தில் தம் கையில் வேல் கொண்டு விளங்குகிறார். செங்கோட்டு வேலவன் சன்னதிக்கு பின்புறம் அர்த்தநாரீஸ்வரர் சன்னதி உள்ளது. இரு மூர்த்தங் களும் வெள்ளை நிறத்தில் நவபாஷாணத்தால் உருவாக்கப் பட்டவை.

## ராஜகோலம்

கோவைக்கருகில் முத்துக்கவுண்டனூர் எனும் தலத்தில் முத்துமலை ஆண்டவர் பெயரில் முருகப்பெருமான் கிழக்கு முகமாக தனித்து ராஜகோலத்தில் எழுந்தருளியுள்ளார்.

## மேற்கு முகம்

கோவை வட்டம் குந்தமலையிலும் பழனி திருஆவினன் குடியிலும் முருகப்பெருமான் குழந்தை வேலாயுதசாமியாக மேற்குமுகமாக எழுந்தருளியுள்ளார்.

## வடக்கு முகம்

முருகப்பெருமான் சேலம் குமரகிரி மலையிலும், சென்னைக்கருகே குன்றத்தூரிலும், காஞ்சிக்கருகே மாகரலிலும் வடக்கு நோக்கி காட்சி தருகிறார்.

## தெற்கு முகம்

லால்குடிக்கு அருகே திண்ணியம் தலத்தில் ஆறுமுகங்களுடன் முருகன் தெற்கே நோக்கி அமர்ந்துள்ளார். எண்கண் தலத்தில் மயில் மீதமர்ந்து தெற்கு நோக்கி காட்சி தருகிறார். விழுப்புரத்திற்கு அருகில் உள்ள பெரும்பேறு மலைமீது முருகன் முன்னும் பின்னும் மூன்று முகங்களுடன் மயில்மீது வள்ளி தெய்வானையுடன் தெற்கு நோக்கி காட்சி தருகிறார்.

## புற்றிடம் கொண்ட முருகன்

திருப்போரூர் கருவறையில் பனைமரத்தடியில் புற்றிடம் கொண்ட சுயம்பு முருகப்பெருமானுக்கு அபிஷேகம் கிடையாது. புனுகு சட்டம் சாத்தி கவசம் அணிவித்து அலங்காரம் செய்கிறார்கள். அபிஷேகத்திற்கு தனியே முருகன் பிரதிஷ்டை உண்டு.

## விஸ்வரூப முருகன்

குமரி மாவட்டம் வேளிமலையில் முருகவேள் 8 அடி 8 அங்குலம் உயரத்துடன் விஸ்வரூப காட்சி தருகிறார். வள்ளியம்மை உயரம் 6 அடி 2 அங்குலம் வள்ளியுடன் காட்சி தரும் கோயில்.

## ஆறுமுகம் ஆறுகரம்

கும்பகோணம் ஸ்ரீ ஆதிகும்பேஸ்வரர் கோயிலில் உள்ள ஆறுமுகப் பெருமானுக்கு ஆறே கரங்கள்தான் உண்டு.

## செந்தில் லிங்கம்

வழிபட்டு வணங்குதற்குரிய முருகப்பெருமானே சிவபெருமானை வழிபடும் திருக்கோலத்தில் உள்ள திருத்தலம் திருச்செந்தூர். சுவாமி கருவறைக்கருகில் பஞ்சலிங்கங்கள்

உள்ளன. இங்கு வள்ளி தெய்வானைக்கு தனித்தனி சந்நதி உண்டு. செந்திலாண்டவனுக்கு வேல் வைப்பதில்லை.

## ஸ்கந்த நாதன்

சேலம் ஸ்கந்தாஸ்ரமத்தில் முருகப்பெருமான் எதிரில் ஸ்கந்தமாதா 18 கரங்களுடன் அஷ்டாதஸ புஜ மகாலட்சுமியாக க்ாட்சித் தருகிறார்.

## தத்தகிரி

நாமக்கல் வட்டத்தில் உள்ள சேந்தமங்கலம் தத்தகிரி முருகன் கோயிலில் 6½ அடி உயர ஐயப்பன் கல் திருமேனியும் 7½ அடி உயர தட்சிணாமூர்த்தி கல் திருமேனியும் காண வேண்டிய ஒன்று.

## வேல் அபிஷேகம்

திருப்பரங்குன்றம் குடைவரைக் கோயில். இங்கு முருகனுக்கு அபிஷேகம் கிடையாது. புனுகு, எண்ணெய் சாத்துப்படி உண்டு. வேலுக்குத்தான் அபிஷேகம். ஏனைய ஐந்துபடை வீடுகளிலும் ஆறுமுகனுக்கு அபிஷேகம் நடக்கும். முதற்படை வீட்டில் அவன் வேலுக்கு அபிஷேகம் நடப்பதைப் பார்த்துக் கொண்டிருக்கிறான்.

## சுருட்டு நிவேதனம்

விராலிமலை மூலவர் ஸ்ரீசண்முகநாதர் என்ற பெயரில் மயில் மீதமர்ந்து கிழக்கு நோக்கி காட்சி தருகிறார். முன்புறம் மூன்று முகமும் பின்புறம் மூன்று முகமுமாக இருபக்கங்களில் வள்ளி தெய்வானை காட்சி தருகின்றனர். இங்கு பெருமானுக்கு சுருட்டு நிவேதனம் செய்விக்கப்பெறுகிறது.

## குமரோபதேசம்

சுவாமிமலையில் முருகன் நெடிய தோற்றத்துடன் கிழக்கு நோக்கி காட்சி தருகிறார். இங்கு சுவாமி வஜ்ராயுதம் ஏந்தி யுள்ளார். தனிச் சிறப்பு இது. அறுபது வருடங்களுக்கு அறுபது படிகளாகக் கிடந்து பவளவாய் காண்கின்றன. குமரகுருவாக

பிரணவ உபதேசம் செய்த தலமாதலால் முருகன் குன்றின் மேலும் சிவனார் கீழும் கோயில் கொண்டுள்ளனர்.

## சிக்கல்நாதன்

சிக்கல் திருத்தலத்தில் சூரசம்ஹாரம் வேளையில் முருகனின் மேனி எங்கும் வியர்வைத் துளிகள் வருவதைக் காட்டும் உற்சவத்திருமேனி அழகிய தோற்றம் கொண்டது.

## தெய்வானை தனி

மாயவரத்திற்கருகில் பெரம்பூரிலும் கந்தன்குடியிலும் முருகன் சன்னதிக்கு அருகில் தனி சந்நிதியில் தெய்வயானை வீற்றிருந்தருள்கிறார்.

## குன்றக்குடி

குன்றக்குடி முருகன் கோயிலில் முருகன் வள்ளி தெய்வானை மூவரும் தனித்தனியே மயில்மீது காட்சி தருகின்றனர். மூலவர் ஆறுமுகத்துடனும் காட்சி.

## சிவசுப்ரமண்யர்

நெய்வேலிக்கருகில் உள்ள வில்லுடையான் பட்டியில் முருகன் வில்லேந்தி விரிசடையுடன் வள்ளி தெய்வானையுடன் ஒரு முகத்துடன் கிழக்கே நோக்கி காட்சி தருகிறார். வேறு எங்கும் காண முடியாத நிலையில் முருகனின் மூலத்திருமேனி சிவலிங்க வடிவில் கீழே ஆவுடை வடிவமாக அரையடி உயரத்தில் லிங்கவடிவில் காணப்பெறுகிறார்.

## திருத்தணி

திருத்தணி முருகன் கிழக்கு முகமாக நின்ற கோலம். அவருக்கு சற்று முன் தள்ளி வள்ளியும் தெய்வானையும் எழுந்தருளி உள்ள அமைப்பு மிகவும் விசேடமானது. கந்தசஷ்டி விழாவில் இங்கு சூரசம்ஹாரம் நடைபெறுவதில்லை.

## கொளஞ்சியப்பர்

விருத்தாசலம் அருகில் மணவாள நல்லூரில் கொளஞ்சி செடிகள் அடர்ந்த பகுதியில் ஆதியில் முருகன் இருந்ததால்

கொளஞ்சியப்பர் எனப் பெயர். முருகனுக்கு உருவம் இல்லை. முருகனது சக்கரம் பொறிக்கப்பட்ட பீடமே சந்தனக் காப்பீட்டு வழிபடப் பெறுகிறது.

## பிரம்ம சாஸ்த்தா

காஞ்சிபுரம் குமரக்கோட்டத்து முருகன் ஒரு முகமும் நான்கு கரமும் கொண்டவர். மேல் வலது கரத்தில் உருத்திராட்ச மாலையும் மேல் இடது கரத்தில் நீர்க்குண்டிகையும் மற்ற இரு கரங்கள் அபயவரதமாக திகழ படைப்புத் தொழில் செய்யும் கோலம்.

## யானை வாகனன்

திருத்தணியில் முருகனின் வாகனமாக மயில் கிடையாது. யானை (ஐராவதமும்) சந்நிதியை நோக்காமல் கிழக்கு நோக்கி இருக்கிறது. தெய்வ யானைக்கு சீதனமாக வந்த ஐராவதம் கிழக்கேயுள்ள தேவலோகம் நோக்கியுள்ளது.

## சிங்கவாகனம்

சிங்க வாகனத்துடன் கூடிய சரவணனை சென்னி மலையில் கருவறையின் பின்புறமுள்ள சுவற்றில் காணலாம். தலையில் கொண்டையுடனும் கையில் வில்லுடனும் காட்சி தருகிறார். இதே மாதிரி முருகனை திருப்போரூர் ஆலயத்திலும் காணலாம்.

## சிவபூஜா மூர்த்தி

உத்திரமேரூர் கோயிலில் பாலசுப்ரமணியர் ஆறு அடி உயரத்தில் உத்திராட்சம் அணிந்து கையில் நாகாபரணம் பூண்டு சடைமுடியுடன் காதுகளில் குண்டலம் தரித்து சாய்வாக சிவபூஜை செய்யும் கோலத்தில் காட்சி தருகிறார்.

## முஸ்லீம் முருகன்

திருத்தணி முருகன் கோயிலில் காதர் என்ற முஸ்லீம் பக்தரால் நிறுவப்பட்ட காதரீசுவரர் சந்நிதி உள்ளது. இங்கு முஸ்லீம்கள் வாத்தியம் வாசிக்கும் நவாப் வாத்திய மண்டபம் அமைக்கப்பட்டுள்ளது காதர் நவாப்பால்.

## வெண்ணெய் முருகன்

பெங்களூரில் சர்ஜந்திரா சர்க்கிளில் உள்ள முருகன் கோயிலில் முருகனுக்கு வெண்ணைக்காப்பு அலங்காரத்தை கண்டு களிக்கலாம்.

## செங்கல்வராயன்

திருத்தணிக்கு அருகில் உள்ள நெடியமலையில் உள்ள ஆறுமுகனை இந்திரன் நீரோற்பல மலரால் வழிபட்டதால் இவருக்கு செங்கல்வராய சுவாமி என்று பெயர்.

## போர்க்கோலம்

விரிஞ்சிபுரத்தில் தனிக்கோயில் முருகன் ஆறு முகத்துடன் மயில் மீதமர்ந்து இருதேவியர் சூழ போர்க் கோலம் கொண்ட விஸ்வரூபத்தில் காட்சி தருகிறார்.

## வில்லேந்திய வேலன்

திருச்சாங்காடு தலத்தில் வில்லேந்திய வேலனான திருக்கோலத்தில் முருகனைக் கண்டு மகிழலாம்.

## ஷாண்மாதுரர்

முருகப்பெருமானுக்கு கார்த்திகைப் பெண்கள் ஆறுபேர் பாலூட்டினார்கள். எனவே ஷாண்மாதுரர் என்று பெயர். நட்சத்திரத்தில் ஆறாவது கிருத்திகையும் திதியில் ஆறாவது சஷ்டியும் அவனுக்கு உகந்தது. ஆறெழுத்து மந்திரமே அவனுக்குரியது.

## இருதலை முருகன்

சென்னிமலையில் அக்னிஜாத சுப்ரமண்யர் இரண்டு தலைகளுடனும் சௌரபேய சுப்ரமண்யர் நான்கு தலை களுடனும் காட்சி தருகின்றனர்.

## திசைக்கு அதிபதி

விருத்தாசலம் நான்கு எல்லைகளிலும் முருகன் கோயில் கொண்டுள்ளார். தெற்கு வேடப்பனாகவும், வடக்கே

வெண்ணை மலையப்பனாகவும், கிழக்கே கரும்பாயிரம் கொண்டவராகவும், மேற்கே கொளஞ்சியப்பராகவும் நின்றருள் கின்றார்.

## ஆகமக் கோயில்

விருத்தாசலம் கோயிலில் முருகப்பெருமான் 28 ஆகமங் களையும் சிவலிங்கமாக வைத்து பூஜித்தார். ஆகமக்கோயில் என இது வழங்கப்பெறுகிறது.

## நட்சத்திரக் கோயில்

எலத்தூர் ஸ்ரீ சிவசுப்ரமண்யர் கோயிலில் முருகன் சுயம்பு மூர்த்தி. இருபத்திஏழு நட்சத்திரங்களும் முருகனை பூஜித்த நட்சத்திரக் கோயில் உண்டு.

## வெந்நீர் அபிஷேகம்

திருத்தணி முருகன் கோயிலில் ஆருத்ரா நாளில் வெந்நீர் அபிஷேகம் ஏற்கும் பாலசுப்ரமண்யர் சந்நிதி உண்டு.

## அறுகோணக் கோயில்

அவிநாசி அவிநாசியப்பர் கோயிலில் அறுகோண அமைப்பில் செந்தில்நாதன் சந்நிதி உள்ளது.

## ஒரே சிற்பி

எட்டுக்குடி, எண்கண், பொரவச்சேரி ஆகிய மூன்று ஊர்களிலும் உள்ள ஆறுமுகப் பெருமான் சிலைகள் ஒரே சிற்பியினால் வடிக்கப்பெற்றவைகள் ஆகும்.

## மூன்றுகோலம்

சென்னையை அடுத்த ஆண்டவர் குப்பம் முருகன் பாலசுப்ரமணியராக நின்ற கோலத்தில் திருவடிகளில் கிண்கிணி அணிந்து ஒரு திருக்கரத்தை இடையிலே வைத்து ஒரு திருக்கரத்தில் கமலமேந்தி காட்சி தருகிறார். இங்கு முருகன் காலையில் பாலன், பகலில் வாலிபன், மாலையில் வயோதிகன் என்று மூன்று கோலங்களில் காட்சியளிப்பது வேறிடங்களில் காண முடியாத ஒன்று.

## செந்திலாண்டவன்

திருச்செந்தூர் மூலவர் தவக்கோலத்தில் இருப்பதால் இருபுறங்களிலும் தேவியர் இல்லை. வலத்திருவடியின் அருகில் வெள்ளிச் சீபலியும் இடத் திருவடியின் அருகில் தங்கச் சீபலியும் காட்சி தருகின்றன. நான்கு திருக்கரங்களில் ஒன்றில் செபமாலையும் இன்னொன்றில் குலிசாயுதமும் ஏந்தியுள்ளார்.

## வள்ளி தெய்வானை

திருச்செந்திலாண்டவன் பிரகாரத்தில் வள்ளி, தெய்வயானை சந்நிதிகள் யாகசாலைக்கு வடக்கும் தெற்குமாக உள்ளன. வள்ளியம்மை இடக்கையில் தாமரை ஏந்திய நிலையில் நிற்கிறாள். முருகனின் வலக்கண் ஞாயிறு. ஞாயிறு கண்டு மலரும் தாமரை ஏந்தி வலப்புறம் வள்ளி. தெய்வயானை வலக்கையில் குமுதம் பிடித்த நிலை. முருகனது இடதுகண் சந்திரன். சந்திரனைக் கண்டு மலரும் குமுதம் ஏந்தி இடப்புறம் தெய்வயானை.

## தோழன் சாமி

திருச்செந்தூர் மூலவரின் உற்சவராகத் திகழும் அலை வாயுகந்த பெருமான் ஐம்பொன்னாலான திருமேனி. இவர் நவராத்திரி விழாவில் கோலம் தாங்குவார். பாரிவேட்டை, சிறுத்தொண்டர் திருநாள், தைப்புனர்பூசம், பூசம் ஆகிய நாட்களில் எழுந்தருளுவார். இவரைத் தோழன் சாமி என்பர்.

## ஜெயந்திநாதர்

திருச்செந்தூர் மூலவரின் தோற்றம் கொண்டு விளங்கும் உற்சவருக்கு வள்ளி தெய்வயானை திருவுருவங்கள் உள்ளன. மூலவரின் பிரதிபிம்பமான இவர் திருவிழாக் காலங்களில் சந்தி களின் வழியே உலா வருவதால் சந்திச் சாமி எனப்படுகிறார்.

## செந்தில் மேய வள்ளி

திருச்செந்தூர் திருத்தலத்தில் வள்ளி திருமணம் நடைபெறும் பங்குனி உத்திரம் முதல் தெய்வயானை திருமணம் நடைபெறும். கந்தர்சஷ்டிக்கு மறுநாள் வரை திருவிழாக்

காலங்களில் முருகப்பெருமானுடன் வள்ளியம்மையார் உலா வருவார். ஆவணி பெருவிழாவில் வள்ளியே எழுந்தருளுவார்.

## மாசிப் பெருவிழாவில் தெய்வயானை

திருச்செந்தூரில் கந்தர் சஷ்டிக்கு மறுநாளிலிருந்து பங்குனி உத்திரம் வரை நடைபெறும் விழாக்களில் தெய்வயானையே முருகனுடன் எழுந்தருளுவார். மாசிப்பெருவிழாவில் தெய்வயானையே உலா வருவார்.

## பள்ளியறையம்மன்

திருச்செந்தூர் வள்ளியம்மன் கோயிலில் உள்ளது. வெள்ளியினால் செய்யப்பட்ட பீடத்தின் மேல் அம்மன் ஒருக்களித்து ஒருபுறம் திரும்பி படுத்திருப்பது போன்ற தோற்றம் கொண்டது. நாள்தோறும் பள்ளியறைச் சொக்கர் அருகில் வைக்கப்படும் திருமேனி இது.

## பள்ளியறைச் சொக்கர்

திருச்செந்தூரில் சண்முகர் கோயிலில் உள்ள திருவுரு இது. வெள்ளி பீடத்தின் மீது திருவடிகளின் உருவம் பொறிக்கப் பட்டுள்ளது. இரவில் பற்றியறைக்கு எடுத்துச் செல்லப்படும் இது காலையில் தீபாராதனையின் பின் பல்லக்கில் வைத்து அடியார் புடைசூழ முதல் பிரகாரம் உலா வந்து சண்முகர் திருவடியில் வைக்கப்படும்.

## வள்ளிக்கே பள்ளியறை

திருச்செந்தூர் கோயிலில் வள்ளி, தெய்வயானை தனித்தனிக் கோயில்களில் குடிகொண்டிருந்தாலும் பள்ளியறை வள்ளியம்மன் கோயிலிலேயே உள்ளது. வள்ளி இச்சா சக்தி. அவளே சிருஷ்டிக்குக் காரணம். எனவே வள்ளி கோயிலிலேயே பள்ளியறை.

## மச்சான் சாமி

பரதவர் குலமக்கள் கடலில் மீன் பிடிக்கும் தொழில் புரிபவர்கள். அவர்கள் குலத்தில் தெய்வயானை பிறந்ததாகவும் அவளையே முருகன் மணந்ததாகவும் பரதகுல பாண்டியவம்ச

சரித்திர நூலில் உள்ளது. எனவே அவர்கள் செந்திலாண்டவனை மச்சான் சாமி என உறவு கொண்டாடுகின்றனர்.

## பரதவகுல தெய்வம்

நெல்லை மாவட்ட பரதவ குலமக்கள் மீன்பிடிக்க கடலில் செல்லும்போது கோயிலுக்கு நேராக படகில் கடக்கும்போது தேங்காய் உடைப்பதை மரபாகக் கொண்டுள்ளனர். மீன் பிடிக்கச் செல்வோர் வெள்ளியினாலான மீன்களையும், புதிதாகப் படகு கட்டியவர் கடலில் விடுமுன் வெள்ளியினாலான கப்பல்களையும் உண்டியலில் காணிக்கையாக செலுத்துவது வழக்கம்.

## பாண்டிய நாயகர்

சிதம்பரம் சிவகாமி அம்மை கோயிலுக்கு வடபாகத்தே பாண்டியநாயகம் எனும் கோயிலில் அறுமுகப்பெருமான் மயில் மீது கிழக்கு நோக்கி வள்ளி தெய்வயானையுடன் காட்சி தருகிறார். இக்கோயில் யானைகளாலும் யாளிகளாலும் இழுக்கப்படும் தேர் வடிவில் அமைக்கப்பெற்றுள்ளது. தமிழகத்தில் உள்ள தலங்களில் முருகனுக்குரிய மிகப் பெரிய அழகிய சந்நிதி இது.

## எல்லாம் முருகனே

திருவிடைக்கழியில் பிரதோஷ நாயகர், நடராஜர் சந்திரசேகரர், சோமாஸ்கந்தர், சண்டேஸ்வரர் ஆகிய எல்லா மூர்த்தங்களும் சுப்ரமண்ய சொரூபமாகவே விளங்குகின்றார்கள்.

## சிறுவாபுரி முருகன்

சிறுவாபுரி முருகப்பெருமான் மயில் மேல் அமர்ந்து வலதுகாலை பாம்பின் தலைமீதும் இடதுகாலை மடித்தும் கம்பீரமாக உள்ளார். இருபுறமும் வள்ளி தெய்வயானை இருக்கிறார்கள். இங்குள்ள மயில், நந்தி, விநாயகர், சுவாமி, அம்பாள் ஆகிய எல்லா திருவுருவங்களும் ஒருவித பச்சைக் கல்லால் ஆன தனிச்சிறப்பாகும்.

## திருத்தணி காவடி

திருத்தணி காவடி பிற ஊர்க்காவடிகளினின்றும் வேறுபட்டிருக்கும். குச்சியின் இருபுற நுனிகளில் ஒன்றில் மலர்களும் மற்றொன்றில் அர்ச்சனைக்குரிய பொருட்களும் இருக்கும். ஏனைய காவடிகள் போன்று குச்சிக்கு மேல் பட்டுத்துணி அரை வட்டத்தில் இராது.

## சர்ப்பக் குடை

குமரகோட்டத்து முருகன் உற்சவர் ஒரு முகத்துடன சர்ப்பம் குடை பிடிக்க தேவிமார் இருவருடன் உடுப்பி சுப்ரமண்யராகக் காட்சிதரும் கோலம்.

## செங்கோட்டையன்

திருச்செங்கோட்டு மலைமேல் இளமுருகன் கோலத்தில் ஒருமுகமும் இருகரமும் கொண்டு கையில் வேலும் சேவல் கொடியும் விளங்க கிழக்கு நோக்கி நின்றகோலத்தில் செங்கோட்டு வேலவர் காட்சி தருகிறார்.

## தென்திசை நாதன்

ஈரோடு வட்டம் விஜயமங்கலத்தில் முருகன் ஆறுமுகம் பன்னிரண்டு கரங்களுடன் மயில் மீதமர்ந்து வள்ளி தெய்வயானை சூழ தென்திசை நோக்கி உள்ளார்.

## எட்டு கரங்கள்

அவிநாசி வட்டம் இரும்பறைக்கு அருகில் உள்ள ஓதி மலையில் முருகன் ஐந்து முகங்களும் எட்டுக் கரங்களும் கொண்டு குமார சுப்பிரமணியன் என்ற திருப்பெயரில் திகழ்கிறார்.

## இடும்பன்

சீர்காழிக்கு அருகில் உள்ள கொண்டல் குமார சுப்ரமண்ய சுவாமி திருக்கோயிலில் இடும்பன் சந்நிதி தென்மேற்கு மூலையில் உள்ளது. இடும்பன் உற்சவ மூர்த்தமும் இங்கு உண்டு.

## காவளூர் முருகன்

தஞ்சாவூர் ஐயம்பேட்டைக்கருகில் உள்ள காவளூர் முருகன் கோயில் விமானம் அறுகோணத்தில் அமைந்துள்ளது. கோயில் சிறிய கட்டுமலை. ஏறுவதற்கோ பன்னிரண்டு ராசிகளை நினைவுபடுத்தும் பன்னிரண்டு படிகள். முருகன் ஆறு முகமும், பன்னிருகரமும் கொண்டு மயில் அருகில் நின்ற கோலம். அருணகிரியார் உருத்திராட்சமணிந்து கூப்பிய கரங் களுடன் மணிவாசகர் போன்று எழுந்தருளியுள்ளார்.

## அமிர்தகர சுப்ரமண்யன்

வேதாரண்யம் அருகே கோடிக்கரை முருகன் ஒருமுகம் ஆறுகரங்களுடன் கிழக்கு நோக்கிய பெருமான். திருக்கரங்களில் அமுதகலசம், நீலோற்பலம், பதுமம், அபயம், வச்சிரம், வேல் திகழ்கின்றன. இத்தகைய மூர்த்தி வேறு எந்த தலத்திலும் இல்லை.

## வியர்வை சிந்தும் வேலவன்

சிக்கல் சண்முகர் சிங்காரவேலன் எனும் பெயரில் திகழ்கிறார். ஐப்பசி பெருவிழாவில் ஐந்தாம் நாள் தேர்விழா முடித்து சூரசம்ஹாரத்திற்காக அம்மையிடம் வேல் வாங்கும் நிலையில் வேலவர் திருமேனியில் வேர்வை அரும்புவதைக் காணலாம்.

## செம்பூர் முருகன்

பம்பாய் நகரில் செம்பூரில் குன்றில்லாத சமவெளியில் 51 அடி உயரத்திலான மேல்தளத்தில் முருகன் குடிகொண்டுள் ளான். 108 படிகள் ஏறியும் லிப்ட் மூலமும் மேலே சென்று வழிபடலாம். வள்ளி தெய்வயானை சமேதராய் முருகன் மேற்கு நோக்கி விளங்குகிறான்.

## வயலூர் முருகன்

முருகப்பெருமான் சில தலங்களில் சிவனை பூஜித்ததாக வரலாறு உண்டு. மற்ற தலங்களில் (திருச்செந்தூர் போன்ற) தனித்து நின்று பூஜை செய்யும் முருகப்பெருமான் வயலூரில்

தெய்வ யானை - வள்ளியோடு சேர்ந்து பூஜை செய்கின்ற தனிச்சிறப்பு பெற்றுத் திகழ்கிறார்.

## அயனிடம் பிரணவம்

சென்னை பொன்னேரிக்கு அருகில் உள்ள ஆண்டார் குப்பத்தில் தனிக்கோயிலில் முருகப்பெருமான் ஒரு திருமுகமும் இரு திருக்கரங்களுடன் நின்ற கோலத்தில் 5 அடி உயரத்தில் எழுந்தருளி வேலும் மயிலும் இன்றி உள்ளார். பரமனிடம் பிரணவப் பொருளை கேட்ட நிலை எனக் காட்ட எதிரே உள்ள மண்டபத்தில் காணப்படும் தாமரைப்பூ அதில் உறையும் பிரம்மாவாகக் கருதப்படுகிறது.

## கனடாவில் கந்தன்

கனடா நாட்டில் டோரண்டோ நகரில் ரிச்மண்ட் ஹில்ஸ் மலைக் கோயிலில் 8 அடி உயரமுள்ள முருகப்பெருமான் காட்சி தருகிறார். வள்ளி - தெய்வயானைக் கோயில்கள் முருகனைப் பார்த்த வண்ணம் தனிக்கோயில்களாக விளங்குகின்றன.

## வஜ்ராயுதம்

வஜ்ராயுதம் ஏந்திய முருகப்பெருமானுடைய திருக்கோலம் சுவாமி மலையிலும் திருவிடைக்கழியிலும் சிறப்பாகக் காணலாம்.

## தெய்வயானைக்கு மட்டுமே

திருவிடைக்கழியிலும் திருப்பரங்குன்றத்திலும் முருகப் பெருமானும் தெய்வயானையும் மட்டுமே கோயில் கொண் டுள்ளனர். வள்ளிக்கு சந்நிதி இல்லை.

## மூலவர் வேல்

இலங்கை யாழ்ப்பாணத்து நல்லூர் முருகன் கோயிலில் கர்ப்பகிரகத்தில் வேல் வடிவில்தான் மூலவர் வள்ளி-தெய்வ யானை சமேதராகக் காட்சியளிக்கிறார்.

# காயத்ரீ

காயத்திரீ மிகவும் உயர்ந்த மந்திரம். இதனைச் சரியாகச் செய்தால் மற்ற மந்திரங்கள் சித்தியாகும்.

It is GAYATRI because it protects the person who chants.

காயந்தம் ஜபிதாரம்த்ராய இதி காயத்ரீ

தன்னை ஜபிக்கிறவனை காப்பாற்றுகிறபடியால் காயத்ரீ எனப் பெயர் பெற்றது.

பலவித மந்திரங்கள் இருக்கின்றன அவற்றை ஜபம் பண்ணுவதற்கு முன்பு இன்ன இன்ன பலனை உத்தேசித்து பண்ணுகிறேன் என்று சொல்கிறோம். காயத்ரீ மந்திரத்தின் பலன் சித்த சுத்திதான். மனம் மாசு அகலுவதுதான். மற்ற மந்திரங்களால் உண்டாகிற பலன்களெல்லாம் கடைசியில் சித்தசுத்தி உண்டாகத்தான் இருக்கின்றன. ஆகவே காயத்ரீக்கு நேரானபலன் (காலை சந்தி, மத்தியான வேளை மாலைசந்தி ஆகிய மூன்று காலங்களிலும் எத்தனை ஆபத்திலிருந்தாலும் 10 காயத்ரீயாவது ஜெபம் செய்ய வேண்டும் - ஸ்ரீ மகாஸ்வாமிகள்)

நேரம் உள்ளவர்கள் இந்த காயத்ரீ மந்திரத்திற்கு உரிய த்யான சுலோகத்தினை சொல்லி ஜெபம் செய்வார்கள். சுலோகத்தின் சாரம்சம்:

நல்லமுத்து பவழம் சுவர்ணம் நீலம் வெளுப்பு இவைகளின் நிறமுள்ளதும் மூன்று கண்களை உடையதுமான முகங்களோடு கூடினவளும் சந்திரகலையுடன் சம்பந்தித்த கிரீடத்தை உடையவளும் தத்வார்த்தங்களான எழுத்துக்களின் ஸ்வரூபியாய் இருப்பவரும் வரதான முத்திரை அபயமுத்திரை அங்குஸம் சாட்டை இவைகளையும் வெளுப்பு குணமுள்ள கபாலத்தையும் சங்கத்தையும் சக்ரத்தையும் பிறகு இரண்டு தாமரைப் பூக்களையும் கைகளால் வசீகரிக்கின்ற காயத்ரீ தேவியை வணங்குகிறேன்.

(சந்தியாவந்தனத்தில் அர்க்கியமும் காயத்ரீயும் மிக மிக முக்கியமானவை மற்றவையெல்லாம் அதற்கு அங்கமே. ஸ்ரீ மகாஸ்வாமிகள்)

தேவியை ஆவாஹனம் செய்து பிறகு காயத்ரியாருஷி: விஸ்வாமித்ரா: என்று சிரசிலும், நிச்ருத் காயத்ரீச்சந்தக என்று மூக்கிலும் ஸவிதா என்று மார்பிலும் தொடுவார்கள்

## ஜபம் (JAPA)

ஜ என்பது நமது பிறப்பைக் குறிக்கும் ஜனனம் பா என்பது பிறப்பில் சேர்க்கப்பட்ட பாபத்தினைக் குறிக்கும் இந்த ஜெபமானது நாம் செய்த பாபத்தினைப் போக்கும் வல்லமை உடையது. இந்த ஜெபத்தையும் மனதிற்குள்ளே ஜபிப்பது சாலச் சிறந்தது. பலமடங்கு பலனும் கூட. இதனை நன்கு முறையில் கடைபிடித்தால் அளவிட முடியாத நன்மைகள் பயக்கும்.

### காயத்ரீ ஜபம்

"ஓம் பூர்ப்ப வஸ்ஸுவ:
தத்ஸவிதுர்வரேண்யம்
பர்க்கோ தேவஸ்ய தீமஹி
தி யோயோன:
ப்ரசோதயாத்:

ஓங்காரப் பொருளான எந்த பரமாத்மா நம்முடைய புத்தி சக்திகளைத் தூண்டுகிறாரோ அந்த அனைத்தையும் படைக்கிறவரான பகவானுடைய சிறந்த ஜோதி ஸ்வரூபத்தைத் தியானிப்போம். மேற்படி மந்திரத்தை பூணல் போட்ட பிறகு சந்தியாவந்தனத்துடன் ஜெபிப்பார்கள் இதனை அந்தணர்களும், வைசியர்களும், க்ஷத்ரியர்களும் கடைபிடித்து வந்தார்கள். இப்போது ஓரளவுக்கு அந்தணர்களிடமும் மற்ற ஏனையோரிடம் வயது முதிர்ந்தவர்கள் தேசத்தின் எங்கோ சில இடங்களில் விடாப்பிடியாகக் கடைப்பிடிக்கிறார்கள் பல காயத்ரிகள் இருப்பதால் சந்தியாவந்தனத்தின் போது செய்யும் காயத்ரியை மகா காயத்ரி என்று கூறுவார்கள்.

ப்ரணவத்தைச் சேர்த்து காயத்ரீயை ஐந்து பதமாக அதாவது

1. ஓம்
2. பூர்ப்புவஸ்ஸுவ
3. தத்ஸ விதுர்வரேண்யம்
4. பர்கோ தேவஸ்ய தீமஹி
5. தியோ யோநக ப்ரசோதயாத்

*(என்று ஐந்து ஸாகையாக மூச்சை விட்டு நிறுத்தி ஜபம் செய்ய வேண்டும்)*

இந்த மந்திரத்தை நமக்கு வழங்கியவர் மகரிஷி விஸ்வாமித்திரர்

கதிரவனைக் கண் எதிரில் தரிசிக்கிறோம். கண்கண்ட தெய்வமான சூரியனின் பேரொளியாகவே நான் இருக்கிறேன் என்பதாகச் சிறப்பித்து பேசப்படுகிறது.

ஸ்ரீ கிருஷ்ண பகவான் கீதையில் ஓரிடத்தில் வேதங்களிலும் சாஸ்திரங்களிலும் நான் காயத்ரீயாகத் திகழ்கின்றேன் என அருளியுள்ளார்.

ந•காயத்ரியா: பரோமந்தர:
ந மாது: தைவதம்வரம்

இந்த சான்றோர் வாக்கில் "காயத்ரியைவிட சிறந்த மந்திரம் இல்லை. தாயைவிட சிறந்த தெய்வம் இல்லை என்பதாம்.

## ஸந்தியாவந்தனம்

ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடம் ஜகத்குரு அவர்கள் முடி கொண்டான் கிராமத்தில 1939-ல் அருளிய உபதேசம்)

நம்முடைய பெரியோர்கள் ஸந்தியாவந்தனத்தைக் காலத்திலும், தவறாமலும், விதிப்படிக்கும் செய்து வந்தார்கள் அதனால் சுபிக்ஷமாக இருந்து வந்தது. இப்பொழுதோ ஆங்கிலப் படிப்புப் படித்தவர்களில் அனேகர் ஸந்தியாவந்தனம் செய்வதாகத் தெரியவில்லை. பிராசீன வைதீக குடும்பத்தைச் சேர்ந்தவர்கள், இன்றைக்கும் தம் முன்னோர்கள் செய்துவந்த படிக்கு ஸந்தியா வந்தனம் முதலான கர்மாக்களைச் செய்து ஒழுங்காக நடைபெறாததன் காரணமாக, இப்பொழுது லோகக்ஷேமத்தில் குறைவுபட்டிருக்கின்றது. இனிமேலாவது எல்லோரும் ஸந்தியாவந்தனத்தை செய்ய ஆரம்பித்தால் மறைந்திருக்கும் அக்னி பூர்ண ஜோதியை அடையும், சைக்கிள் வேகமாக வரும்போது பெடல் பண்ணப்படுவது நின்ற போதிலும், கொஞ்சம் தானாகவே சென்று கொண்டிருக்கும். அதுபோல் ஸந்தியாவந்தனம் முதலான கர்மாக்கள் செய்யப்பட்டு வந்த குலத்தில் பிறந்தவர்களில் சிலர்தான், தாம் கர்மாக்களைச் செய்யாத•போதிலும், முன்னோர்கள் செய்த கர்மபலத்தைக் கொண்டு இப்பொழுது கியாதிவான்களாக விளங்குகின்றார்கள். ஒருவன் அகாலத்தில் கிளம்பி ரெயிலை

விட்டுவிட்டால் போக வேண்டிய காரியம் நஷ்டமாவதற்கு நிரம்பவும் வருத்தப்படுகிறான். லோக க்ஷேமார்த்தமாக அவசியம் செய்யப்பட வேண்டிய ஸந்தியா வந்தனக் கடமையை விடுவதில், அவ்வளவு தூரம் வருத்தம் உண்டாகாமல் இருப்பது எவ்வளவு பேதமை.

காயத்ரீ மந்திரத்தை, சொல்லப்பட்டிருக்கும் ஸங்க்யை குறைவுபடாமலும், ஸெளகர்யப்படுகிற வரையில் அதற்கு அதிகமாகவும், பிரதி தினமும் சரியான காலத்தில் மனம் சலிக்காமல் ஜபிக்க வேண்டும். இந்த மந்திரம் மிகவும் உத்க்ருஷ்டமானது. எவனொருவன் சிரத்தையுடன் பக்தியுடனும் இந்த மந்திரததைத் தியான பூர்வமாய் ஜபித்து வருகின்றானோ, அவன் பக்தி சிரத்தையை அனுசரித்து அதே ஜன்மாவிலோ அல்லது தொடர்ந்து வரும் ஜன்மாக்களொன்றிலோ, அவனே அந்த ஸெளரமண்டல ரூபியான சூர்யனாகி (சூர்யபகவானே ஸ்ரீமத் நாராயணன், அவரே பரமேஸ்வரன், அவரே எல்லா மூர்த்திகளின் தோற்றம்) மோக்ஷத்தை அடைகிறான்.

ஸந்தியா வந்தனத்தின் மஹிமையைப் பற்றி ஒரு கதை இருக்கிறது. சுமார் 500, 600 வருஷங்கள்க்கு முன்நடந்ததாக ஊகிக்க முடிகின்றது.

சென்னை கவர்ன்மெண்டைச் சேர்ந்த ஆர்க்கியலாஜிகல் டிபார்ட்மெண்டார் பிரசுரித்திருக்கும் ரிகார்டில் இந்தக் கதைக்கு ஆதாரங்கள் இருக்கின்றன.

திருவனந்தபுரத்தை ஆண்ட ராஜாக்களில் ஒருவர் எள்ளினால் ஒருகால புருஷன் உருவத்தைச் செய்து, அதனுள் ஏராள ஐசுவர்யத்தை வைத்து, அந்த உருவத்தைத் தானம் செய்யப் போவதாக விளம்பரம் செய்தார். அந்த உருவத்திற்குள்ளிருக்கும் பொருளைக்கருதி அனேகர் தானம் வாங்க வந்தார்கள். அந்த கால புருஷன் உருவம் கேட்ட கேள்விகளுக்குத் தக்க பதில் சொல்லமுடியாமல் தானம் வாங்க வந்தவர்களெல்லாம் மரணமுற்றார்கள். கன்னடியார் என்ற ஒரு பிராம்மணர் இருந்தார். ஸந்தியா வந்தன கர்மாவில் வெகு சிரத்தையுள்ளவர். சாஸ்திரங்கள் முதலானவைகளில் அவருக்கு அப்யாஸம் கிடையாது. அந்த தானத்தை வாங்க அவர் வந்தார். காலபுருஷன் உருவம் மூன்று விரல்களைக் காட்டியது அதற்கும் முடியாதென்றார், கடைசியாக ஒரு விரலைக் காட்டியது சரி என்றார் தான் ஒன்றும் செய்ய முடியாததைக் கண்டு

காலபுருஷன் அந்த உருவத்திலிருந்து மறைந்தான் அந்த பிராமணர் வாங்கிக் கொண்டார். மூன்று விரல்கள் மூன்று வேளை செய்யக்கூடிய சந்தியாவந்தனத்தின் பலன். இரண்டு விரல் இருவேளை செய்யக்கூடிய சந்தியாவந்தனத்தின் பலன். ஒருவிரல் ஒரே வேளை அதாவது மாத்யாந்நிகத்தின் பலன் என்பது கால புருஷன் கேட்ட கேள்விகளுக்கு அர்த்தம். அந்த ஒரு வேளைப் பலனைக் கொடுத்ததால் அவனுக்கு ஐஸ்வர்யம் கிடைத்தது. அதனால் அவனுக்கு பாபம் சம்பவித்தது. அந்த பாபத்தைப் போக்க வழிதேடி அகத்திய முனிவர் தவம் செய்து கொண்டிருப்பதாகச் சொல்லப்படும் மலைச்சாரலுக்குச் சென்றார் போகும் முன் தன்னிடமிருந்த தனத்தைப் பாதுகாக்கும்படி கோயில் பூஜை செய்து வந்த ஒரு குருக்களிடம் ஒப்படைத்தார்.

எங்கே சென்றாலும் அகத்திய முனிவரைக் காண முடியவில்லை அதனால் அவர் ஏக்கமுடன் இருந்தார். அப்போது அகத்தியர் ஒரு கிழவர் வடிவமாக அவர்முன் தோன்றி ஒரு பசுமாடு உமக்குத் தென்படும் அந்த இடத்திலிருந்து ஒரு கால்வாய் வெட்ட ஆரம்பிக்க வேண்டும். பசுமாடு எவ்வளவு தூரம் சென்று நிற்கிறதோ அவ்வளவு தூரத்திற்கு கால்வாய் வெட்ட வேண்டுமென்றார். எந்த இடங்களில் சாணி போட்டு மூத்திரம் பெய்கிறதோ அந்த இடங்களில் சாணிபோட்ட இடத்தில் மடை அமைக்கவும். மூத்திரம் பெய்யும் இடத்தில் வாய்க்கால் வெட்ட வேண்டும். இவ்விதம் செய்தால் உமக்கு ஏற்பட்டிருக்கும் பாபம் போய்விடும் என்றார். அவ்விதம் செய்ய தீர்மானித்துக் கொண்டு திரவியத்தை வாங்க குருக்களிடம் சென்றார். குருக்களுக்கு பிராமணரின் தனத்திடம் மோகம் ஏற்பட்டுவிட்டது. அந்தக் காலத்துப் பவுன் இளம் துவரப்பருப்பை ஒத்திருக்குமாதலால் குருக்கள் பிராமணரிடம் துவரம் பருப்புக்களைக் கொடுத்து நீ கொடுத்த திரவியம் இதுதான் எடுத்துக்கொள்ளும் என்றார். குருக்களின் வஞ்சகச் செயலை அறிந்த பிராமணர் குருக்களை எவ்வளவு பிரார்த்தித்தாலும் பயன் ஏற்படாததைக் கண்டு ராஜாவிடம் முறையிட்டார். குருக்களும் தருவிக்கப்பட்டார். குருக்கள் குற்றத்தை ஒப்புக் கொள்ளவில்லை. தாம் பூஜை செய்யும் லிங்கத்தைக் கட்டிக் கொண்டு பிரமாணம் செய்தால் தாம் ஒப்புக் கொள்வதாகப் பிராமணர் கேட்டுக் கொண்டார். அவ்விதம்

செய்யக் குருக்களும் சம்மதித்து விட்டார். குருக்கள் அபிசாரப் பியோகத்தில் தேர்ந்தவரானதால் லிங்கத்திலுள்ள சுவாமியை பக்கத்திலுள்ள ஒரு மரத்தில் ஆகர்ஷணம் செய்துவிட்டார். பிராம்மணர் மறுபடியும் ராஜாவிடம் சென்று மரத்தை கட்டிக் கொண்டு பிராமணம் செய்யச் சொன்னார். குருக்கள் மறுதளித்தும் பயன்படவில்லை. குருக்கள் மரத்தைக் கட்டிக் கொண்டு பிரமாணம் செய்தார். உடல் எரிந்து போய் விட்டது. திருநெல்வேலி ஜில்லாவில் ஆலயம் உள்ளது. எரிச்சுக்கட்டி ஸ்வாமி என்று அம்மூர்த்தியின் பெயர். பிறகுஅந்த பிராமணன் அந்த திரவியத்தின் மூலம் கால்வாய் வெட்டினார். கன்னடியன் கால்வாய் என்பது அதன் பெயர். திருநெல்வேலி ஜில்லாவில் இருக்கிறது அந்தக் கால்வாயின் பிரதேசங்கள் நாளைக்கும் செழித்திருக்கின்றன. இந்தக் கதையினால் சந்தியாவந்தனத்தின் பெருமை நன்கு விளங்கும்.

வேதத்தின் தாயாக - வேத மாதாவாக - விளங்கும் காயத்ரீ மந்திரத்தை ஜபிப்பதனால் கண்களில் ஒளி உண்டாகும். நினைவு ஆற்றல் மேம்படும். மேனி முழுவதும் காந்த சக்தி பரவும். பிராணாயாமத்தால் குரல் வளம் உண்டாகும். மூச்சு சம்பந்தப்பட்ட நோய்கள் அணுகாது. குண்டலினி மேல் நோக்கி எழும்பும். தீவிரமாக காயத்ரிஜபம் பிராணாயாமத்தோடு செய்பவருக்கு பனிரெண்டு ஆண்டுகளில் குண்டலினி மேல்நோக்கி ஆறு ஆதாரகங்களையும் கடந்து "சகஸ்ரார்த்தை அடைந்து பல அற்புதங்களைச் செய்யும் ஆற்றலை வெளிப்படுத்தும். வேத சாஸ்திரத்தில் காயத்ரி மந்திரப் பெருமைகள் விளக்கப்பட்டுள்ளன.

*24. அட்சரங்களைக் கொண்ட காயத்ரி மந்திரம் எல்லா மந்திரங்களுக்கும் முதலில் ஜபிக்கவேண்டும். பிறகுதான் இதர மந்திரங்களை ஜபிக்கவேண்டும்.*

திரிசங்குவை, காயத்ரி மந்திரபலத்தினால் வானுலகுக்கு அனுப்பியதையும், வானுலகில் மனிதசரீரத்தை அனுமதிக்காத காரணத்தால் மும்மூர்த்திகளும், முப்பத்து முக்கோடி தேவர்களும் உடைய தேவலோகத்தையே விஸ்வாமித்திரர் படைத்ததாக வரலாறு கூறுகிறது.

"ஸஹஸ்ர பரமா தேவீ சதமத்யா தசாவாரா" என்ற தைத்ரீய ஆரண்ய காண்ட வாக்குப் படி ஆயிரம் ஆவிருத்தி

ஜபிப்பது உத்தமம் நூறு ஜபிப்பது மத்யமம் அதம பக்ஷம பத்து காயத்ரியில் சகல வேத சக்திகளும் அடங்கியிருக்கிறது.

எனவே சந்தியாவக்தனம் ஓர் கடமை. அதைச் செய்தால் உலகம் க்ஷேமம் ஏற்படுகிறது. சிரத்தையுடன் செய்தால் மோக்ஷம் கிட்டுகிறது.

காயத்ரீ மந்திர சித்தி பெற நியமத்துடன் 24 லட்சம் ஜபம் செய்யவேண்டும். பாயஸம், எள், நெய், அருகம்புல், அரசு, ஆல், அத்தி, இச்சிமர சமித்துகள் இவற்றின் ஒவ்வொன்றாலும் 3000 தடவை ஹோமமும் செய்யலாம் அல்லது எள்ளால் 24,000 தடவை ஹோமம் செய்யலாம்.

பாபம் நீங்க நீண்ட ஆயுள் பெற பாயஸம் நெய் சேர்த்தோ, தனித்து நெய்யாலோ ஹோமம் செய்யலாம் அல்லது எள்ளும் அருகம்புல்லும் சேர்த்து 3000 தடவை ஹோமம் செய்யலாம். பால், நெய், தேன் இவற்றினை நனைத்த செந்தாமரைப் பூவால் 10,000 தடவை ஹோமம் செய்யச் செல்வம் பெருகும். இழந்த செல்வத்தை மீண்டும் பெறலாம். உணவு நிறைவை நாடுபவன் அன்னத்தாலும் பிரும்ம தேஜஸை விரும்புபவன் புரசஸமித்தாலும் ஹோமம் செய்யலாம். விரும்பிய அனைத்தையும் பெற முன்குறிப்பிட்ட அனைத்து திரவியங்களாலும் ஹோமம் செய்யலாம். நமது சித்தப் போக்கை நல்வழிப்படுத்தும் தன்னை அண்டியவரின் பாபத்தை போக்குவதும், உலகைப் படைத்துக் காத்தருளுவளுமான தேவி காலை / மத்யானம் / மாலையில் காயித்திரீ / ஸாவித்ரீ / ஸரஸ்வதியாக உள்ள பேரொளியை தியானிப்போம்.

தகவல் : தெய்வத்தின் குரல், ஸந்தியவந்தனம் பைங்கா நாடு வெங்கட்டாரம் சாஸ்திரிகள், ஸந்தியாவந்தன பாஷ்யம் ஸ்ரீ பரமேஸ்வர சாஸ்திரிகள், காயத்திரீ By K.N. சீனிவாசன் BABL அட்வகேட் தினமலர், பொன்மலர், ஸ்ரீதரம்வாரி டிரஸ்ட் வேதவித்யா குருகுல வெளியீடு

ஒவ்வொரு தெய்வத்தின் பெயரிலும் வழங்குகிற காயத்ரி அந்தந்த தேவதாசக்தி மகிமையுடன் நமக்கு அருள் வழங்கும் தன்மை உடையவையாகும். அவைகளில் சில பின்வருமாறு.

## ஸ்ரீ விக்நேச்சுர காயத்ரி

ஓம் தத் புருஷாய வித்மஹே | வக்ரதுண்டாய தீமஹி
தந்நோ தந்தி: ப்ரசோதயாத் ||

## ஸ்ரீ ஸுப்ரஹ்மண்ய காயத்ரீ

ஓம் தத் புருஷாய வித்மஹே | மஹா ஸேநாய தீமஹி
தந்நோ .ஷண்முக: ப்ரசோதயாத் ||

## ஸ்ரீ ருத்ர காயத்ரீ

ஓம் தத் புருஷாய வித்மஹே | மஹாதேவாய தீமஹி
தந்நோ ருத்ர: ப்ரசோதயாத்

## ஸ்ரீ ராம காயத்ரீ

ஓம் காசரதாய வித்மஹே | ஸீதா வல்ல பாய தீமஹி
தந்நோ ராம: ப்ரசோதயாத் ||

## ஸ்ரீ சாஸ்தா காயத்ரீ

ஓம் பூத நாதாய வித்மஹே | பவநந்தனாய தீமஹி
தந்நோ: சாஸ்தா ப்ரசோதயாத் ||

## ஸ்ரீ விஷ்ணு காயத்ரீ

ஓம் நாராயணாய வித்மஹே வாசுதேவாய தீமஹி
தந்நோ விஷ்ணு: ப்ரசோதயாத் ||

## ஸ்ரீ துர்க்கா கரயத்ரீ

ஓம் காத்யாயனாய வித்மஹே கந்யாகுமரி தீமஹி
தந்நோ துர்க்கி: ப்ரசோதயாத் ||

## ஸ்ரீ ப்ரஹ்மா காயத்ரீ

ஓம் வேதாத்மாகாய வித்மஹே | ஹிரண்ய காப்பாய தீமஹி
தந்நோ ப்ரம்ஹ: ப்ரசோதயாத் ||

## ஸ்ரீ நந்தீசுவரர் காயத்ரீ

ஓம் தத் புருஷாய வித்மஹே | வக்ரதுண்டாய தீமஹி
தந்நோ நந்தி: ப்ரசோதயாத் ||

## ஸ்ரீ அக்னி காயத்ரீ

ஓம் வைஸ்யா தராய வித்மஹே | லாலீயாதீமஹி
தந்நோ அக்னி: ப்ரசோதயாத் ||

## ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி காயத்ரீ

ஓம் தக்ஷிணாமூர்த்தயோச வித்மஹே | த்யா நஸத்தாய தீமஹி
தந்நோ தீஸ: ப்ரசோதயாத் ||

## ஸ்ரீ லக்ஷ்மீ ஹயக்ரீவர் காயத்ரீ

ஓம் வாகீஸ்ராய வித்மஹே | ஹயக்ரீவாய தீமஹி
தந்நோ ஹம்ஸ: ப்ரசோதயாத் ||

## ஸ்ரீ லக்ஷ்மி வராஹர் காயத்ரீ

ஓம் தநுர்த்தராய வித்மஹே | வக்ரதம் ஷ்டராய தீமஹி
தந்நோ வரர்ஹ ப்ரசோதயாத் ||

## ஸ்ரீ நரஸிம்மஹர் காயத்ரீ

ஓம் வஜ்ரநாகாய வித்மஹே | தீக்ஷ்க்ஷண தம்ஷ்ட்ராய தீமஹி
தந்நோ நரஸிம்ஹ ப்ரசோதயாத் ||

## ஸ்ரீ கிருஷ்ணர் காயத்ரீ

ஓம் தாமோதராய வித்மஹே | வல்லபாய ருக்மணீ தீமஹி
தந்நோ க்ருஷ்ண: ப்ரசோதயாத் ||

## ஸ்ரீ ஸ்ரீநிவாஸர் காயத்ரீ

ஓம் நிரஞ்ஞு நாய வித்மஹே | நிராபாஸாய தீமஹி
தந்நோ ஸ்ரீநிவாஸ: ப்ரசோதயாத் ||

## ஸ்ரீ லக்ஷ்மீ தேவி காயத்ரீ

ஓம் மஹாதேவ்யை சவிதம்ஹே விஷ்ணு பத்னெச் தீமஹி
தந்நோ லக்ஷிமி ப்ரசோதயாத் ||

## ஸ்ரீ கருடன் காயத்ரீ

ஓம் தத்புருஷாய வித்மஹே ஸுவர்ண பக்ஷாய தீமஹி
தந்நோ கருட: ப்ரசோதயாத் ||

## ஸ்ரீ ஆஞ்சநேயர் காயத்ரீ

ஓம் ஆஞ்சநேயாய வித்மஹே | வாயுபுத்ராய தீமஹி
தந்நோ ஹநுமத் ப்ரசோதயாத் ||

## ஸ்ரீ நவகிரஹ காயத்ரீ

### ஸ்ரீ ஆதித்ய காயத்ரீ

ஓம் அச்வ த்வஜாய வித்மஹே | பாசஹஸ்தாய தீமஹி
தந்நோ ஸூர்ய: ப்ரசோதயாத் ||

### ஸ்ரீ சந்திர காயத்ரீ

ஓம் பத்ம த்வஜாய வித்மஹே | ஹோம ரூபாய தீமஹி
தந்நோ ஸோம ப்ரசோதயாத் ||

### ஸ்ரீ அங்காரக காயத்ரீ

ஓம் வீரத்வ ஜாய வித்மஹே | லிக்த ஹஸ்தாய தீமஹி
தந்நோ பௌம: ப்ரசோதயாத் ||

### ஸ்ரீ புத காயத்ரீ

ஓம் கஜத்வஜாய வித்மஹே | சுக ஹஸ்தாய தீமஹி
தந்நோ புத: ப்ரசோதயாத் ||

ஸ்ரீ குரு காயத்ரீ

ஓம் வ்ருஷப த்வஜாய வித்மஹே ச்ருணி ஹஸ்தாய தீமஹி
தந்நோ கரு: ப்ரசோதயாத் ||

ஸ்ரீ சுக்ர காயத்ரீ

ஓம் அச்வ த்வஜாய வித்மஹே | தநுர் ஹஸ்தாய தீமஹி
தந்நோ சுக்ர ப்ரசோதயாத் ||

ஸ்ரீ சனீஸ்வர காயத்ரீ

ஓம் காகத்வஜாய வித்மஹே | கட்க ஹஸ்தாய தீமஹி
தந்நோ மந்த: ப்ரசோதயாத் ||

ஸ்ரீ ராஹூ காயத்ரீ

ஓம் நக த்வஜாய வித்மஹே பத்ம ஹஸ்தாய தீமஹி
தந்நோ ராஹூ: ப்ரசோதயாத் ||

ஸ்ரீ கேது காயத்ரீ

ஓம் அச்வ த்வஜாய வித்மஹே சூல ஹஸ்தாய தீமஹி
தந்நோ கேது; ப்ரசோதயாத் ||

## ஸ்ரீ ஹம்ஸாவதாரம் காயத்ரீ

ஓம் ஹம்ஸ ஹம்ஸாய வித்மஹே பரம் ஹஸ்தாய தீமஹி
தந்நோ ஹம்ஸ: ப்ரசோதயாத் ||

## ஸ்ரீ நீளா தேவி காயத்ரீ

ஓம் மஹாதேவ்யைச வித்மஹே விஷ்ணு பத்தயைச தீமஹி
தந்நோ நீளா: ப்ரசோதயாத் ||

## ஸ்ரீ பூமி தேவி காயத்ரீ

ஓம் தநுர் தராயை வித்மஹே ஸர்வ ஸத்யை ச தீமஹி
தந்நோ தரா: ப்ரசோதயாத் ||

## ஸ்ரீ பரப்ரஹ்ம காயத்ரீ

ஓம் பரமேஸ்வராய வித்மஹே பரதத்வாய தீமஹி
தந்நோ ப்ரஹ்ம ப்ரசோதயாத் ||

## ஸ்ரீ விஷ்வக்ஸேனர் காயத்ரீ

ஓம் விஷ்வக் ஸேநாய வித்மஹே வேத்ரஹஸ்தாய தீமஹி
தந்நோ விஷ்வக் ஸேந: ப்ரசோதயாத் ||

## ஸ்ரீ சரப காயத்ரீ

"சால வேஸாய வித்மஹே பக்ஷிம ராஜாய தீமஹி
தன்னோ ருத்ர ப்ரஸோதயாத்"

மேற்கண்டவைகள் தவிர குழந்தைகள் ப்டித்தவற்றை மனதில் வைத்துக் கொள்ளவும், படிப்பு வளரவும் கீழ்க்கண்ட மந்திரத்தை தினமும் மூன்று முறை ஜெபம் பண்ணவேண்டும் என்று சுகர் அருள்வாக்கு கூறுகிறது.

ஸ்ரீவித்யா ரூபிணி; சரஸ்வதி; சகலகலாவல்லி; சாரபிம்பாதரி; சாரதாதேவி; சாஸ்திரவல்லி; வீணா புஸ்தக தாரிணி; கமலபாணி; வாக்தேவி; வரதாயகி; புஸ்தகஹஸ்தே; நமோஸ்துதே.

ஞ்ஞா நந்தமயம் தேவம் நிர்மலஸ்படி காக்ருதம்
ஆதாரம் ஸர்வவித்யா நாம் ஹயக்ரீவ முபாஸ்மஹே

## நோய் நொடியிலிருந்து காத்துக்கொள்ள தன்வந்திரி மந்திரம்

ஓம் நமோ பகவதே வாஸுதேவாய,
தந்வந்தரயே அம்ருதகலச ஹஸ்தாய,
ஸர்வாமய நாசநாய,
த்ரைலோக்ய நாதாய,
ஸ்ரீ மஹா விஷ்ணவே நம.

## துஷ்ட கிரகங்கள் விலக

அஞ்ஞநா கர்ப்ப ஸம்பூரம்
குமாரம் ப்ரும்ஹ சாரிணம்
துஷ்ட க்ரஹ வினாஸாய
ஹனுமந்த முபாஸ்மஹே

## காரியங்களில் வெற்றி பெற

ஸ்ரீ ராமதூத மஹாதீர
ருத்ரவீர்ய ஸமுத்பவ

அஞ்ஞநா கர்ப்ப ஸம்பூத
வாயுபுத்ர நமோஸ்துதே |

**காரிய ஸித்தி உண்டாக**

அஸாத்ய ஸாதக ஸ்வாமிந்
அஸாத்யம் தவகிம்வத |
ராமதூத க்ருகாஸிந்தோ
ராம கார்யம் ஸாதய ப்ரபோ ||

ஓம் ஸ்ரீம் நற்பவீ நாயகியே நம:

## ஸ்ரீ சுகப்பிரும்ம மகரிஷி அருளிய

# கணபதி மாலா சரவணமந்திரம்

ஓம் ஜம் க்லீம் சௌ: சக்திதராய-
ஓங் நங் மங் சிங் வங் லம்போதராய
ஹ்ரீம் ஹ்ரீம் ஸ்ரீம் சுப்ரமண்யாய
சரவணோத்பவாய ஹிரண்யோத்பவாய

க்லீம் சர்வ வச்யாய
தன ஆக்ருஷ்யதம் பம்ஹம்ஜும்
ஷம் ஸம் அதிர்ஷ்ட தேவதாய
ஷண்முகாய சர்வதோஷ நிவாரணாய
சிவாய சிவதனயாய இஷ்டார்த்த ப்ரதாயகாய
கம் கணபதயே க்லௌம் ஷம்
சரவண பவாய வசி வசி

*இதனை பௌர்ணமி நாளில் இம்மந்திரத்தை பதினாறு முறையேனும் ஜபித்தால் எல்லா பாக்யங்களும் பெறலாம் என்கிறார்கள்.*

*வாகன விபத்தினால் பாதிப்பு ஏற்படாமல் இருக்க சொல்லவேண்டிய மந்திரம்*

ஓம் நமோ அங்காராய ஓம் நமோ வாகனாய
ஓம் நமோ அங்காராய ஓம் நமோ வாகனாய
ஓம் நமோ குஜாய ஓம் நமோ வாகனாய

ஓம் நமோ குஜாய — ஓம் நமோ வாகனாதிபதயே
ஓம் நமோ குஜாய — ஓம் நமோ வாகனாதிபதயே
ஓம் நமோ மங்களாய — ஓம் நமோ வாகானாதிபதயே
ஓம் நமோ மங்களாய — ஓம் நமோ ராகவே
ஓம் நமோ மங்களாய — ஓம் நமோ ராகவே

தகவல்: S.V. Sekar வெளியிட்ட கைப்பிரதியிலிருந்து

## திருமணம் ஆக வேண்டிய பெண்கள் பவானியை கீழ்க்கண்டவாறு தியானிப்பார்கள்

தஞ்சமளிப்பவள் நீ, தரத்திலுயர்ந்தவள் நீ,
தயைதன் உருவமதாய் இலகுறும் அம்பிகை நீ,
நஞ்சிவனோடரியும் நான்முகனும் மளவில்
நாட்டறியா இசையோய் புனிதமிகுந்தவளே.

அஞ்சினன் அஞ்சினன் யான்
அடற்பிறவிந்துயர் கண்ட பயம்
அளித்திடுவாய், அன்னை சுமங்கிலியே
செஞ்சரணாம் புயமே சேர்ந்து
பணிந்துருகிச் சென்னி வணங்கினன் யான்
பவானி எனுஞ் சுடரே

## ஓம் நம சிவாய

*நம சிவாய என்ற மந்திரம் ஓதினால் நமக்கு உயர்ந்த நிலை கிடைக்கும். நீண்ட காலமாக இருந்து வரும் மாயைகள் அஞ்சி நம்மை விட்டு விலகிவிடும். பரம்பொருளுடன் நாம் கலந்து விடலாம்*

*– என்று சிவவாக்கியர் கூறுகிறார்.*

"அரிய தோர் நமசிவாயம் ஆதியந்தம் ஆனதும் ஆறிரண்டு நூறு தேவர் அன்றுரைத்த மந்திரம்"

*– என்றார் சிவவாக்கியர்.*

"சிவாய நம" என்று நீறணிந்தேன் தருவாய் சிவகதி

*– என்கிறார் திருநாவுக்கரசர்.*

*வள்ளலாரும் 'நற்றவத்தவர் உள்ளிருந்து ஓங்கும் நமசிவாயத்தை மறவேனே' என்கிறார்.*

தமது திருவாசகத்தில் மாணிக்கவாசக சுவாமிகள்

"நமச்சிவாய வாழ்க"

- என்று தொடங்கியுள்ளார்.

ஸ்ரீ ருத்ரத்தில் - 'நமசிவாய என்று மத்தியில் வைத்துப் போற்றுகிறது. தியான நிலையில் "சிவாய நம" என்று ஓதினால் ஐம்புலன்களையும் அடக்கலாம். ஆபத்துக்களையும், விபத்துக் களையும் தவிர்க்கலாம். பத்து கலைகளையும் பெற்றுக் கொள்ளலாம்.

"வஞ்சகம் அற்றடி வாழ்த்தவந்த கூற்று
அஞ்ச உதைத்தன அஞ்செழுத்துமே"

"செந்தழல் ஓம்பிய செம்மை வேதியர்க்கு
அந்தியுள் மந்திரம் அஞ்செழுத்துமே"

"இம்மை வினை அடர்த்தெய்து போழ்கினும்
அம்மை யினுந்துணை அஞ்செழுத்துமே"

- என்று ஞானசம்பந்தர் உபதேசித்துள்ளார்.

## வேதங்கள் பூஜித்த ஸ்தலம்

தென்னகத்தே சதுர்வேதி மங்கலம் என்ற ஊர் உள்ளது. சதுர்வேதி என்பது நான்கு வேதங்களைப் பற்றியது. பெயரிலிருந்தே காரணப் பெயர் என்பதை அறியலாம். அதேபோல் இறைவனை பூஜித்த நான்கு வேதங்களின் ஸ்தலம் "வேதஸ்ரேணி" இது வேள்விச்சேரியாகி தற்போது வேளச்சேரி என்ற பெயருடன் விளங்குகிறது. இங்கு அருள்பாலிக்கும் கருணாம்பிகை உடனுறை தண்டீஸ்வரர் கோயிலின் புராண மற்றும் வரலாற்றைப் பற்றி நாம் அறிந்துகொள்வோம். இந்தக் கோயிலில் 63 நாயன்மாரின் விழாவின்போது வெளியிட்ட விழா நூலில் புராண வரலாறு விடுபட்டிருப்பதை சில ஆன்மீக அன்பர்கள் கூறினார்கள். அதன் பொருட்டு கோயில் திருப்பணிக்குழு, தவிர இந்தக் கோவிலின் ஆலய சேவா சங்கம் வெளியிட்ட ஸ்தல வரலாற்றிலிருந்து சேகரிக்கப்பட்டு வெளியிடப்படுகிறது. இங்குள்ள சுயம்புலிங்கம் கலிகாலம் ஆரம்பிப்பதற்கு முன்பே ஏற்பட்டதாகத் தெரிகிறது. பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு ஒரே காடாக காட்சியளித்த இந்த ஊரில் பல தவ ஸ்ரேஷ்டர்கள் தவமும், வேள்வியும் செய்து இங்கு

இறைவனை வழிபட்டுள்ளார்கள். பிரபஞ்சத்தை உருவாக்கிய இறைவன் நான்கு யுகங்களாக அதாவது 1) க்ருதயுகம், 2) திரேதா யுகம், 3) துவாபர யுகம், 4) கலியுகம் என்று பகுத்தளித்தார்.

க்ருதயுகத்தில் முப்பது முக்கோடி தேவர்களும் நாற்பத்தெட்டாயிரம் ரிஷிகளும் சேர்ந்து வாசம் செய்தார்களாம்.

திரேதாயுகத்தில் தேவர்களும் அசுரர்களும் வாசம் செய்த காலமாகும். ஈஸ்வரனை தரிசிக்கும்போது தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் சர்ச்சைகளும் போட்டிகளும் ஏற்பட்டது. அசுரர்களின் அட்டகாசம் மேலோங்கியதால் தேவர்கள் ஈஸ்வரனை அணுகி அவர்களுக்குத் தனியாக தரிசனம் தரும்படி வேண்டினார்கள். அவர்களின் வேண்டுகோளுக்கு இணங்க தனி தரிசனம் தருவதாயும், தான் இந்த யுகத்தில் மலைகள், காடுகள், கடல் மற்றும் ஆறுகளின் கரையோரங்களில் சுயம்புவாக தோன்றுவேன். அங்கு வந்து என்னை தரிசிக்கலாம் என்றார். பூலோகத்தில் பூப்பரிசம் (கால் பூமியில் படாதே) எங்களுக்கு இல்லை என்றனர். அதற்கு ஈஸ்வரன் நான் சுயம்புவாக காட்சியளிக்கும் இடங்களெல்லாம் பூக்கைலாசமாகும், அங்கு அரக்கர்கள் தவிர தேவர்களும் மற்றவர்களும் எனது திவ்ய தரிசனம் பெறலாம் என்றார்.

திரேதா யுகத்தில் சோமுகாசுரன என்ற அசுரன் தனது தவ வலிமையால் பூலோகம், மற்றும் தேவ லோகங்களையும் வென்று பிரம்ம லோகம் சென்றான். பிரம்ம லோகத்தில் பிரம்மா மற்றும் நான்கு வேதங்களும் வாசம் செய்தனர். சோமுகாசுரன் வருவதை அறிந்த பிரம்மா வேதங்களை புஸ்தக வடிவாக்கி விட்டு தானும் மறைந்திருந்து கவனித்தார். பிரம்ம லோகத்தில் யாரும் இல்லாததைக் கண்ட சோமுகாசுரன் கோபமுற்று நான்கு வேத புஸ்தகங்களையும் எடுத்துக்கொண்டு கடலில் தனது இருப்பிடத்தை அமைத்துக் கொண்டான். இதனைக் கண்ணுற்ற பிரம்மா, கைலாயம் சென்று ஈஸ்வரனிடம் நடந்தவற்றை கூற ஈஸ்வரன் மகாவிஷ்ணுவிடம் வேதங்களை மீட்கும் பணியை ஒப்படைத்தார். மகாவிஷ்ணுவும் மச்ச அவதாரம் எடுத்து வேதங்களை மீட்டு பிரம்ம லோகத்தில் சேர்ப்பித்தார். பிரம்மாவும் வேதங்களை பழைய நிலைக்கு மாற்றினார். பிரம்மாவிடம் வேதங்கள் அசுர தோஷம் நீங்கிட வழி அருளுமாறு வேண்டினர். பூலோகத்தில் தாரகவனம் என்ற இடத்தில் சுயம்புவாக காட்சியளிக்கும் ஈஸ்வரனை தியானித்து

பூஜித்தால் அசுரதோஷம் நீங்கும் என்றார். இங்கு இறைவனை வேதங்கள் பூஜித்ததால் இறைவன் தோன்றி அவர்களுடைய தோஷங்களை நீக்கினார். ஆகையால் அந்த இடம் வேதஸ்ரேணி எனப்பெயர் பெற்றது.

### துவாபர யுகம்

இந்த யுகத்தில் மிருகண்டு என்னும் தவசிரேஷ்டர் பிள்ளைப்பேறு அடைய ஈஸ்வரனை குறித்து தவம் செய்தார். இவரது தவத்தின் மேன்மையைக் கண்டு அவருக்கு 16 வயது வரை வாழக்கூடிய புத்ர பாக்யத்தை அருளினார். அந்தக் குழந்தைக்கு (மார்கண்டேயனுக்கு) 16 வயது நெருங்கும் சமயம் பெற்றோர்களின் கவலையை அறிந்து பெற்றோர்களிடம் விடைபெற்று திருக்கடவூரிலுள்ள சிவபிரானை வழிபட்டார். அப்போது அச்சிறுவனின் ஆயுட் காலம் முடிவதைக் கண்டு யமதர்மன் சென்றார். அதை அறிந்த மார்க்கண்டேயன் சிவபிரானை இருக கட்டித் தழுவிக் கொண்டார். யமதர்மன் பாசக்கயிற்றை வீசி இழுக்கும் போது சிவலிங்கத்தையும் சேர்த்து இழுக்கும்படி ஆயிற்று. உடனே ஈஸ்வரன் தோன்றி யமனை உதைத்துத் தள்ளி யமனின் தண்டத்தை பரித்துக் கொண்டார். யமன் செயலற்றவராகி விட்டார். ஈஸ்வரன் மார்க்கண்டே யனுக்கு என்றும் சிரஞ்சீவியாக வாழக்கடவாய் என்று அருளிப்போந்தார். தண்டத்தை இழந்த யமன் திக்பிரமை அடைந்து பிராயச்சித்தமாக கைலாயம் சென்று ஈஸ்வரனை தியானித்து சிவன் அருள்பெற புறப்பட்டார். வழியில் நாரத முனிவர் நடந்தவற்றைக் கேட்டு யமனைத் தடுத்து கைலாயத்திற்கு பதிலாக பூலோகத்தில் சுயம்புவாக தோன்றி முப்பத்து முக்கோடி தேவர்களுக்கும் அருளாசி வழங்கிய ஸ்தலமான வேதஸ்ரேணியில் உள்ள எம்பெருமானைத் தியானித்தால் உனக்கு நன்மை உண்டாகும் என்றார். அதன்படி எமதர்ம ராஜனும் கோவில் அருகே ஒரு தீர்த்தத்தை உருவாக்கி ஈஸ்வரனை தியானித்து பூஜித்தார். அத்தீர்த்தமே யமதீர்த்தம் எனப் பெயர் பெற்றது. யமதர்மனின் தியானத்திற்கு ஈஸ்வரன் மனமிரங்கி காட்சி அளித்து தண்டத்தை தந்து அருளினார். ஐயனே தங்களின் அருளாசியினால் மீண்டும் புணருத்துவம் பெற்றுவிட்டேன். அதன் நினைவாக இத்தலம் அமையப் பிரார்த்தித்தார். அன்று முதல் இத்தலம் தண்டீஸ்வரம் எனவும் வழங்கலாயிற்று. இத்தலத்தில் வீற்றிருக்கும் மூர்த்திக்கு தண்டீஸ்வரர் என்று பெயர் விளங்கி வருகிறது.

## கலியுகம்

இந்த யுகத்தில் ஔவை போன்றவர்கள் தோன்றி அறம் நீதி மற்றும் பக்தி மார்க்கத்தை வளர்த்தார்கள். சிவ பக்தர்களாக 63 நாயன்மார்கள் தோன்றினார்கள். அரசர்கள் தோன்றினார்கள். அவ்வழித்தோன்றல்களான சோழர் காலத்தில் இந்த ஸ்தலத்தில் கோயில் நிர்மாணிக்கப்பட்டது. இந்த தலம் ஜெயங்கொண்டான் சோழ மண்டலத்தின் உட்பிரிவாகவும் புலியூர் கோட்டத்தின் பிரம்மதேயம் என வழக்கப்படுகிறது. இராஜேந்திர சோழனின் 6வது ஆட்சி காலத்தையும், குலோத்துங்க சோழனின் 25வது ஆட்சி காலத்தையும் இராஜகேசரிவர்மன் 7வது ஆட்சிக் காலத்தையும் கல்வெட்டுக்கள் குறிப்பிடுகிறது. இதனை தொல்பொருள் ஆய்வுத்துறை இயக்குநர் திரு. இரா. நாகசாமி அவர்களின் ஆய்வுக் குறிப்புகளிலிருந்து தெரியவருகிறது.

17-ம் நூற்றாண்டின் சிறந்த சிவபக்தரான அடையபுலம் அப்பைய தீக்ஷிதர் அவர்கள் சிவதரிசனம் பெறவேண்டி வேதஸ்ரேனி வந்து ஈஸ்வரனை வழிபட்டார். அம்மையின்றி அப்பன் தனியாக இருப்பதைக்கண்டு அம்மையை பிரதிஷ்டை செய்ய வேள்வி செய்து (யாகம் வளர்த்து) தீர்த்தம் ஒன்றை உருவாக்கி அதிலிருந்து தீர்த்தம் எடுத்து வந்து பூஜைகள் செய்தார். அந்த தீர்த்தத்திற்கு "அப்பைய தீர்த்தம்" (தற்போது அப்பளாம் குளம்) எனப் பெயர் பெற்றது. அப்பைய தீக்ஷிதருக்கு இத்தலத்தில் அம்பிகையின் கருணாகடாக்ஷம் கிடைத்தமையால் அம்பிகைக்கு கருணாம்பிகை எனப் பெயர் வந்தது. ஆக இவ்வாலயம் "ஸ்ரீ கருணாம்பிகை சமேத தண்டீஸ்வரர் ஆலயம் என விளங்குகிறது. காஞ்சிப் பெரியவர்கள் ஜகத்குரு சந்திர சேகர சரஸ்வதி சுவாமிகள் திருவான்மியூர் வந்து சுவாமி, அம்பிகை தரிசனம் செய்துவிட்டு பாத அணிகள் இல்லாமல் வேளச்சேரியில் உள்ள இந்த கோயிலுக்கும் வந்து தரிசனம் செய்யும் வழக்கத்தை மேற்கொண்டார்.

நவரத்தினங்களில் மாணிக்கம் இருப்பதுபோல், கற்களில் மாணிக்கக்கல் இருக்கிறது. ஈஸ்வரன் இத்தளத்தில் சுயம்பு மாணிக்கக்கல் லிங்க வடிவமாக தோன்றியுள்ளார். இதன் சிறப்பு தீபாராதனையின் போது தீபம் லிங்கத்தின் மீது பட்டு ஜோதியாய் பிரதிபலிக்கும். இதனை இன்றும் காணலாம். தட்சிணாயம் முடிந்து உத்ராயணம் துவங்கும் முதல் நன்னாளில்

பொங்கலிட்டு சூரியக் கடவுளைப் பூஜிப்போம். சூரியன் மகர சங்கராந்தி அன்று காலை 6.00 மணி முதல் 7.00 மணிக்குள் தனது ஒளிக்கதிர்களை... சுயம்புலிங்கமாக இருக்கும் ஈஸ்வரன் மீது படர்ந்து பணிந்து ஈஸ்வரனின் ஆசி பெற்ற பின்பே தன்னை பூஜிக்கும் மக்களுக்கு அருளாசி வழங்குகிறார் என்ற நியதி தொன்றுதொட்டு கண்டுவரும் உண்மை நிகழ்ச்சியாகும்.

இந்தக் கோயில் பல காலம் பராமரிக்கப்படாமல் இருந்ததால் 1958லிருந்து நல்ல வேதமறிந்த வேதியர் மூலம் இக்கோயிலில் சுவாமிக்கு 6 கால பூஜையும் அம்பிகைக்கு மூன்று கால பூஜையும் நடந்துகொண்டு வருகிறது. வேதமறிந்த அப்பெரியவர் பூஜித்த வழியிலேயே அவருடைய பரம்பரையினரும் தற்போது பூஜித்து வருகின்றனர். ஆண்டுக்கு (6) நடராஜர் அபிஷேகம், பிரதோச பூஜைகள், சிவராத்திரி பூஜைகள் முதலியன பக்தகோடிகளின் உதவியால் நடைபெறுகிறது. தமிழகத்தில் மூன்று இடங்களில் மட்டுமே அம்பிகைக்கு ஸ்ரீசக்ரம் அமைக்கப்பட்டுள்ளது. 1) காஞ்சி காமாட்சியம்மன், 2) மாங்காடு காமாட்சியம்மன், 3) வேளச்சேரி ஸ்ரீ கருணாம்பிகை சமேத, தண்டீஸ்வரர் ஆலயம் இந்த சக்ரத்திற்கு தினமும் அன்பர்களின் முயற்சியால் சகஸ்ர நாம பூஜை செய்யும் முறை ஏற்பட்டிருக்கிறது. விரும்பும் ஆன்மீக அன்பர்களும் மேற்படி கோயிலில் விஜாரித்து தாங்களும் அதில் பங்கு கொண்டு இறையருளுக்கு பாத்திரமாகலாம். தனது பிழைப்பிற்காக உள்ள தொழிலையும் விட்டுவிட்டு இக்கோயிலின் மேன்மைக்காகப் பாடுபட்ட குடும்பமும் மற்ற அனேக ஆன்மீகப் பெரியவர்கள் அன்பர்களால் (இக்கோவில் அரசாங்க கட்டுப்பாட்டில் இருந்தாலும்) பாதுகாக்கப்படுவது மிகவும் மெச்சத் தகுந்ததாகும்.

திருக்கடவூருக்கு இணையாக இங்கும் அப்தபூர்த்தி, சஷ்டி அப்தபூர்த்தி போன்ற விசேடங்களை இக்கோயிலில் செய்வது உசிதம் என்பதால் மேற்படி நல்ல காரியங்களை இங்கே நடத்திக்கொள்கிறார்கள்.

நாமும் வாழ்வில் ஒருமுறையேனும் வேளச்சேரி வந்து கருணாம்பிகை அம்பிகையை கைதொழுவோம். தண்டீஸ்வரரின் தாள் பணிவோம். வாழ்வில் நலம் பல பெற்றிடுவோம்.

# தெரிந்துகொள்வோம்

| | | | |
|---|---|---|---|
| ஜப்பானில் | வினாயகருக்கு | வினாயஷா | எனப்பெயர் |
| மியான்மரில் | வினாயகருக்கு | மகாபினி | எனப்பெயர் |
| மங்கோலியாவில் | வினாயகருக்கு | தேஷகார் | எனப்பெயர் |
| திபெத்தில் | வினாயகருக்கு | திசோக்பராக் | எனப்பெயர் |

தகவல் : தமிழன் எக்ஸ்பிரஸ், 11/99

**களவு போன பொருள் கிடைக்க - வழக்கில் வெற்றி பெற - முதலிய காரிய சித்திக்கு கீழ்க்கண்ட மந்திரத்தை ஜெபிப்பார்கள்**

"கார்த வீர்யார் ஜூணோ நாம
ராஜா பாஹூஸ் ஸஹஸ்ரவான்,
தஸ்யஸ் மரன மாத்ரேன
நஷ்டம் ப்ரஷ்டம் சலப்யதே"

இவற்றினைத் தவிர தேள்கடி, பாம்பு கடி, மஞ்சள் காமாலை போன்றவற்றையும் மந்திரிப்பதன் மூலம் சரி செய்துள்ளார்கள். ரிஸ்க் எடுக்கவேண்டாமென்று சமீபகாலமாக மற்ற வைத்திய முறைகளையும் செய்து கொள்கிறார்கள். இதில் தவறு இல்லை.

சுமார் 50 ஆண்டுகளுக்கு முன்பு விஷராஜா என்ற புனைப்பெயர் சூட்டப்பட்ட ரெயில்வே ஸ்டேஷன் மாஸ்டர் ஒருவர் இருந்தார். அவருக்கு அவர், அவர்கள் ஊருக்கு அருகிலுள்ள ரெயில்வே ஸ்டேஷன் மூலம் அவர் கேட்கும் விவரங்களை கூறியவுடன் பாம்புகடிக்கு உடனே தான் இருக்கும் இடத்திலேயே மந்திரித்து பல பேர்களுக்கு குணப்படுத்தி உள்ளார் என்கிறார்கள்.

இவையெல்லாம் மந்திரசக்தியின் வலிமையைத் தெரிவிக்கின்றன.

• • •

இலவம் பஞ்சு, பருத்திப் பஞ்சு இவை வீடுகளில் பறக்கக் கூடாது என்பது சாஸ்திரம். இலவங்காயும் பருத்திக்காயும் வெடிக்கும்போது பறக்கும். ஆதலால் மேற்கண்டவற்றை வீட்டில் வளர்க்கக்கூடாது.

**தூர்வாசர்**

அருகம்புல்லையே உணவாகக் கொண்டு தவம் செய்த மாமுனிவர் தூர்வாசர். அருகம்புல் தரக்கூடிய வலிமையை நாம்

இதிலிருந்து தெரிந்துகொள்ளலாம். விநாயகரை தூர்வாசப் பத்திரத்தினால் அர்ச்சனை செய்கிறோம். இதையே சாப்பிட்டு வந்தபடியால் அவருக்கு தூர்வாசர் எனப் பெயர் வந்தது. தேவலோகத்து பாரிஜாத மரத்தை தூர்வாசர் கொண்டு வந்து வளர்த்தார். இவர் மகா கோபக்காரர். இவர் சாபம் கொடுக்கும் வலிமை உள்ளவர். இவருக்கு கிடைக்கப்பெற்ற வரத்தை அதிகம் பயன்படுத்தமுடியாமல் சதா தன்னுடைய ஆனந்த தாண்டவ தரிசனத்தை அகமகிழச் சிந்தை குளிர முகமலர்ச்சியோடு சதா பார்த்துக்கொண்டே இருக்கும்படி செய்துவிட்டார் சிவ பெருமான்.

திருக்களார் க்ஷேத்திரத்தில் இந்தக் காட்சியை நாமும் காணலாம்.

**பனைமரத்தை தலமரமாகக் கொண்ட ஐந்து ஸத்லங்கள்**

*1) திருப்பனந்தாள் 2) திருப்பனையூர் 3) திவோத்தூர் (திருவத்திபுரம்) 4) புறவார் பனங்காட்டூர் 5) திருப்பனங்காடு.*

## ரிஷபத்தில் தக்ஷிணாமூர்த்தி

சாதாரணமாக ஆலமரத்தடியில் சனத், சனாதன முனிவர்களுடன் காட்சி அளிப்பவர், நாச்சியார் கோவில் ஸ்ரீராமநாத ஸ்வாமி கோவிலில் ரிஷபத்தில் அமர்ந்து காட்சி அளிக்கிறார்.

கல்யாண கோலத்தில் சூரியன் இதுவும் அதே கோயிலில்தான். நவக்கிரகத்தில் சூரியன் தேவியரோடு காட்சி அளிக்கிறார்.

இதே கோயிலில் தனிக்கொடி மரத்துடன் தனது குடும்பத்தோடு காட்சியளிக்கிறார் சனிபகவான். இக்கோயிலில் உள்ள இறைவனின் சிற்பங்கள், சிற்பிகளின் கலைத்திறனை காண்பிக்கும் படி உள்ளது. யாவரும் ஒன்று கூடி மேன்படுத்த வேண்டிய கோயில்களில் இதுவும் ஒன்று.

## மந்தன்

சனிபகவானுக்கு மந்தன் என்று ஒரு பெயர். ராசி மண்டலங்களைச் சுற்றி வருவதற்கு சனி கிரகத்திற்கு 30 வருடங்கள் ஆகின்றது. இவ்வளவு மெள்ள இவர் சஞ்சரிப்ப தாலேயே மந்தன் எனப் பெயர் வந்தது. சூரியபுத்திரர் வலிமை

மிகுந்தவர் ஒவ்வொருவருடைய வாழ்நாளிலும் 30 வருடத்திற்கு ஒரு முறை சனிபகவானின் திசை வந்தே தீரும்.

## கிரஹணம்

இதனை நமது பஞ்சாங்கம் துல்லியமாகச் சொல்வதோடு விஞ்ஞான ஆராய்ச்சியையும் ஒத்து உள்ளது, இந்த கிரகண காலத்தில் ஜபம், மந்திரங்களின் பலன் சித்திக்க ஸ்மரிப்பார்கள். முன்னோர்களுக்கு தர்ப்பணம் என்னும் பிதுர் கடன்களையும் செய்வார்கள்.

சூரிய கிரஹணத்தில் கிரஹணம் பிடிக்க ஆரம்பித்தவுடனும், சந்திரகிரஹணத்தில் கிரஹணம் விட ஆரம்பித்த போதும் ஸ்நானம் செய்து க்ரஹண தர்பணம் செய்யவேண்டும்.

சூரிய கிரஹமம் ராத்திரி காலத்திலே ஆரம்பித்து, விட்டால் பிறகு பகல் ஏற்பட்டவுடனும்.

சந்திரக்ரஹணம் பகலிலே ஆரம்பித்து விடவும். ஆரம்பித்தால் பிறகு ராத்திரி வந்த பிறகு தர்ப்பணம் செய்யவேண்டும்.

விடியற்காலை சந்திரகிரகணம் ஏற்பட்டு பகலிலே விட ஆரம்பிப்பதானால் சூரியோதற்கு முன்பே தர்ப்பணம் செய்யவேண்டும்.

க்ரஹணங்கள் ஆரம்பிக்கும் போதே ஸ்நானம் செய்து காயத்ரீ முதலிய மந்திர ஜபம் செய்து கொண்டிருந்து தர்ப்பணகாலம் வரும்போது தர்ப்பணம் செய்யலாம். மந்திர சித்தி பெற அவர் அவர்கள் ஏதாவது ஜெபம் எடுத்திருந்தால் அந்த வேளையில் ஜபிப்பார்கள்.

தகவல் : பைங்காநாடு வெங்கட்டாரம் சாஸ்திரிகள் ஸந்தியாவந்தனம்

## இறைவனை உள்ளத்தில் நினைக்கவும் நமஸ்காரம் செய்வதும்

தேடிக்கண்டு கொண்டேன்
திருமாலொடு நான்முகனும்
தேடித்தேடொணா தேவனை என்னுள்ளே
தேடிக்கண்டு கொண்டேன்

என்பது அப்பர் சுவாமி அருளிய வாக்கு.

ஒவ்வொரு கோவிலாகச் சென்று இறை வழிபடுவதெல்லாம் அவனை உள்ளத்தில் கண்டு கொள்வதற்காகத்தான் என்ற உண்மை நமக்கு புலனாகிறது. மனப்பூர்வமாக ஈசுவரனை நமஸ்காரம் செய்து விட்டால் போதும். அவர் நம்மை ஜனன மரண சக்கரத்திலிருந்து விடுவித்து விடுவார்.

நம் பாபங்களையெல்லாம் போக்கி முக்தி தந்து விடுவார். பொறுப்பை உன்னிடமே பூர்ணமாக போட்டு விட்டேன் என்பதற்கு அடையாளமாக சரீரத்தை தரையில் போடுவதுதான் சாஷ்டாங்க நமஸ்காரம் செய்வதுதான்.

தென்னாடு உடைய சிவனே போற்றி
எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி என்பார்கள்

உலகெங்கும் சிவவழிபாடு இருந்தும், ஆங்காங்கு விளக்கிச் சொல்லி போற்றாததால் குன்றிவிட்டது எனலாம்.

*23-9-1937*-ல் அமெரிக்க பழம்பொருள் ஆராய்ச்சியாளர்கள் பத்து அல்லது பதினாயிரம் ஆண்டுக்கு முந்திய சிவன்கோயில் என்று வட அமெரிக்காவில் கொலறடோ என்னும் ஆற்று அருகில் உள்ள தட்டையாகக் காணப்படும் குன்றின் மேல் இருப்பதாகச் சொல்கிறார்கள். எகிப்து, பாபிலோன், மக்கா முதலிய இடத்திலும் இருந்ததாகவும் சொல்லப்படுகிறது. மக்காவில் பள்ளிவாசல் (கோரிக்கு) எதிரே கிழக்கு நோக்கி சிவலிங்கம் இருப்பதாயும் வெல்வட்டு, பட்டுத்துணி போட்டு மூடி இருப்பதாகச் சொல்லப்படுகிறது. நாவுக்கரசர் திருத்தாண்டகத்தில் குக்குடேச்சர மக்கீச்சரம் என்று வைப்புத் தலமாய் பாடிப் போற்றிப் பரவியுள்ளார் என்பதை ஊன்றி சிந்திக்கப்பாலன.

அண்மையில் இந்திய வரலாற்றுச் சீரமைப்புக் கழகத் தலைவர் திரு P.N. ஓக் என்பவர் வெளியிட்டுள்ள செய்தியின்படி உலகப் புகழ்பெற்ற தாஜ்மஹால், தேஜ்மகா - ஆலயம் என்ற வடமொழிப் பெயரென்றும் கி.பி. 1155-ல் இந்து மன்னரால் கட்டப்பட்ட சந்திரமௌளீசுவர ஆலயம்தான் இதனை ஷாஜகான் இவ்விதமாக மாற்றியதாயும் இதற்கு ஆதாரமாக லக்னோ மியூசியத்தில் உள்ள கல்வெட்டும் ஷாஜகானின் குறிப்பும் ஆதாரம் என்று விளக்கியுள்ளார்.

தகவல்: திருவாலங்காடு தலவரலாறு
பக்கம் 67, 68

## The Taithriya Upanishad Proclaims

Think of Paramatma himself as Namaskara and worship HIM; as desires will start doing namaskara to you.

**Extracts from discourses of paramathmaya (during 1959)**

You may not be able to follow what is said in our sastras. But please study them and be clear about what they say, understood that what is said in our sastras is true and spiritualy beneficial. This is the least you can do. Constanly, think of what you are, what you want to be, what you should do the bridge the gap. Even this thinking will be benenifianl to you.

We must pray for the welfare of the world, let the whole world be happy.

May you always have noble thoughts.

* * *

*ஓர் உயிர் மற்றோர் உடலில் புகுதல் (புதுமையான நிகழ்ச்சி) தெய்வீகக் கதம்பம் என்ற நூலில் இம்மாதிரி நிகழ்ச்சியினை அமிர்தபஜார் Hindustan Times என்ற பத்திரிக்கையில் சுமார் 45 ஆண்டுக்கு முன்பு வெளியானதை குறிப்பிட்டு எழுதி இருந்தோம். இப்போது அதே மாதிரி 2-8-2003 தினமலரில் வெளியான செய்தியையும் அறிந்து கொள்வோம்.*

## போன ஜென்மத்தில் நடந்ததை அப்படியே 'புட்டு புட்டு' வைக்கும் 4 வயது குழந்தை!

*உத்தர பிரதேச மாநிலத்தில் 4 வயது குழந்தை ஒன்று முன் ஜென்மத்தில் தான் பிறந்த இடம், தனது உறவினர்கள் ஆகியவற்றை அப்படியே கூறி அதிசயத்தை ஏற்படுத்தியுள்ளது.*

*உத்தர பிரதேச மாநிலம் காசியாபாத் சந்தனர் கிராமத்தைச் சேர்ந்தவர் முகேஷ் சவுகான். கடந்த 1999ம் ஆண்டு இவருக்கு ஐஸ்வர்யா என்ற மகள் பிறந்தாள். 4 வயது வரை எல்லோரையும் போல துடுக்குத்தனத்துடன் இருந்தாள் ஐஸ்வர்யா. ஆனால் திடீரென பெரிய மனிதர் போல் பேச ஆரம்பித்தாள். தனது பூர்வ ஜென்மம் பற்றி ஐஸ்வர்யா பேசினாள்.*

“எனது தந்தை மாதன் சிங், தாய் சந்திராவதி, நான் பிறந்தது புலந்த்சாகர் மாவட்டத்தில் உள்ள கமல்பூர். எனக்கு இரண்டு சகோதரர்களும், இரண்டு சகோதரிகளும் உள்ளனர். நான் ராணி என்பவரை திருமணம் செய்து கொண்டேன். எனக்கு 3 குழந்தைகள் உள்ளனர். நான் பரீதாபாத்தில் உள்ள தனியார் நிறுவனம் ஒன்றில் வேலை செய்து வந்தேன். கடந்த 1997ம் ஆண்டு ஏற்பட்ட விபத்தில் நான் இறந்து விட்டேன்.” என்று தனது பூர்வ ஜென்மம் பற்றி ஐஸ்வர்யா கூறினார்.

முதலில் இதை கேட்டு அதிர்ந்த அவரது தந்தை முகேஷ் சவுகான் பின்னர் குழந்தை விளையாட்டாக இதை கூறுகிறது என்று கருதி சும்மா இருந்துவிட்டார். ஆனால் குழந்தை ஐஸ்வர்யா விடாமல் பல மாதங்களாக இதனை கூறி வந்துள்ளார். இதனால் கடுப்பாகிபோன முகேஷ் சவுகான் குழந்தையை அடித்து அப்படியெல்லாம் பேசக்கூடாது என்று கூறியுள்ளார்.

ஆனால் குழந்தை ஐஸ்வர்யா விடாமல் இப்படி கூறவே சந்தேகமடைந்த முகேஷ் சவுகான் சம்பந்தப்பட்ட அந்த கிராமத்திற்கு சென்று விசாரித்துள்ளார்.

அங்கு சென்ற முகேஷ் சவுகானுக்கு பெரிய அதிர்ச்சி காத்திருந்தது. தனது குழந்தை ஐஸ்வர்யா கூறியது போலவே ஒரு குடும்பம் அங்கு உள்ளது. மாதன் சிங் மற்றும் சந்திராவதி ஆகியோர் அங்கு உள்ளனர். ஆனால் பழைய வீட்டை விட்டு வேறு ஒரு வீட்டுக்கு அவர்கள் குடி பெயர்ந்து இருந்தனர். முகேஷ் சவுகான் தனது குழந்தை கூறிய விவரத்தை அந்த குடும்பத்திடம் தெரிவித்த போது, அவர்கள் ஆச்சரியப்பட்டனர்.

அந்த கிராமமே நடந்த சம்பவத்தை கேட்டு அதிசயித்து போனது. பின்னர் தனது மகள் ஐஸ்வர்யாவை அந்த கிராமத்துக்கு முகேஷ் சவுகான் கூட்டிச் சென்றார். அங்கு சென்றது தான் பாக்கி, ‘சிறு குழந்தையாக இருந்த போது, ‘நான் இங்கு தான் விளையாடினேன், கிராமத்தில் எனது நண்பர்கள் இவர்கள் எல்லாம்’ என்று வரிசையாக கடைமடை திறந்தது போன்று பேச கிராமமே அதிசயித்து போய்விட்டது.

அதுமட்டுமின்றி தனது ‘பூர்வ ஜென்ம’ மாமா, அத்தை உள்ளிட்ட உறவினர்கஸ்ளயும், நண்பர்களையும் எளிதாக அடையாளம் கண்டு கூறினாள். ஐஸ்வர்யா கூறியதை போலவே அவளது ‘பூர்வ ஜென்ம மனைவி’ ராணி கணவனை இழந்த

விதவையாக பரிதாபத்தில் இருக்கிறார். அவருக்கு 3 குழந்தைகளும் உள்ளனர். குழந்தை கூறியது போலவே ராணியின் கணவர் 1997ம் ஆண்டு தொழிற்சாலை விபத்தில் உயிரிழந்துள்ளார்.

முகேஷ் சவுகான், குழந்தை ஐஸ்வர்யாவை பரிதாபத் துக்கும் அழைத்துச் சென்றார். அங்கு சென்ற ஐஸ்வர்யா தனது 'மாஜி மனைவியுடன்' தான் வாழ்ந்த நாட்களை நினைவுபடுத்த கண் கலங்கி விட்டார் ராணி. குழந்தை உருவத்தில் வந்துள்ள தங்களது தந்தையை பார்த்து குழந்தைகளும் ஆனந்தப்பட்டனர்.

தகவல் : தினமலர் 2-8-2003

* * *

கும்பாபிஷேக ஆகமக் கிரியைகளில் தன் பூஜை முடிவிலே மந்திரங்களின் ஒரு விண்ணப்பம் வரும்.

"பெருமானே! இந்த தனம் எம்முயற்சியால் சம்பாதிக்கப் பட்டவை அல்ல நாம் எம்மாத்திரம்? ஸ்வாமிக்குக் கடையோரான எங்கள் பணத்தைக் கொண்டா கும்பாபிஷேகம் நடத்த முடியும்? எல்லாம் நீர் தந்தது உம் செல்வம்; நீரே கொடுப்பவர் நீரே பயன்படுத்திக் கொள்ளப் போகிறீர்கள். இதில் எமக்கு ஒரு சிறிதும் உரிமையில்லை. ஆதலால் அது சிவதிரவியம். சிவமாகிய நீரே ஏற்று எங்கள் முயற்சியாலும் பக்தியாலும் சிரத்தையாலும் கொஞ்சமும் குறை நேராதபடி காத்தருளும் மகா சாந்தியாக இதனை ஏற்றருளும் மகிழ்ந்தருளும் எல்லா உலகங்களிலும் உள்ள எல்லா உயிர்களும் வாழப் பெருங்கருணை செய்யும் என்றெல்லாம் உபசார மந்திரங்கள் அடுக்கடுக்காக வரும்.

மாணிக்கவாசகர் "ஏற்றறி யாக்கையானை" என்று பாடினார். பெருமான் எல்லோருக்கும் பொன்னும், மெய்ப்பொருளும் தருபவனேயல்லாமல் 'தா' என்று கேட்பவனல்லன். அதனால்தான் ஆகமம், "எல்லாவற்றையும் சிவார்ப்பணம் செய்து செலவழி. அதனால் வருகின்ற புண்ணியம் கூட உனக்குச் சொந்தமில்லை. அதையும் அவனுக்கே தத்தம் செய்துவிடு" என்று சொல்கிறது.

ஆகவே அத்தனை பெருமையும் பெருமானைச் சார்ந்தது என்பதை ஆகம விதி மூலமாக அறிவோம்.

## ஏற்றம் தந்தருளும் ஏகதின வழிபாடு

ஒரே நாளில் காலை மேலூர் (மீஞ்சூர் அருகில்) திருவுடை நாயகியையும் நண்பகல் ஒற்றியூர் வடிவுடை நாயகியையும் மாலையில் வடதிருமுல்லைவாயில் கொடியிடை நாயகியையும் வழிபடுவது கோடி புண்ணியம் என்பர்.

காலைக் கடம்பர் மதியம் சொக்கர் அந்தி திருவேங்கிநாதர் என்றும் வழங்கும்படி காலையில் கடம்பந் துறையையும் மதியம் சிவாய மலையையும் மாலை திரு ஈங்கோய் மலையையும் வழிபட்டால் நல்ல பலன்.

திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள நவ திருப்பதிகளான ஸ்ரீவைகுண்டம் நத்தம், திருப்புளிங்குடி, இரட்டைத் திருப்பதி, பெருங்குளம், திருக்கோளூர், தென்திருப்பேரை, ஆழ்வார் திருநகர் ஆகிய திவ்ய தலங்களை வைகுண்ட ஏகாதசியன்று ஒரே நாளில் தரிசிப்பது விருக்ஷமாகும்.

வாழ்வில் வளம் பெற, நலம் பெற ஒரேநாளில் முச் சக்திகளையும் வழிபடுவோம். வாழ்வில் நலம் பல பெறுவோம்.

* * *

## காணக் கண்கோடி வேண்டும்

மைசூர் ஊட்டி சாலையில் உள்ள அவதூத தத்தபீடத்தில் உள்ள தத்தாத்ரேய தங்க விக்ரகம் 700 வருட பழமையானது. கார்த்திகை மாதம் தத்தஜெயந்தியில் பக்தர்கள் அதனை தரிசிக்கலாம்.

திருவொற்றியூர் ஸ்ரீவன்மீக நாதர் புற்றிடம் கொண்டவர். புற்றினை மறைப்பதாக எப்போதும் கவசமிட்டிருக்கும். கார்த்திகை பௌர்ணமி அன்று கவசம் அகற்றப்படும் அடுத்த இரு நாட்கள் மட்டும் புற்றுவடிவில் பெருமானை தரிசிக்கலாம்.

தஞ்சை மாவட்டம் சிக்கல் சிங்கார வேலர் கந்தசஷ்டிக்கு முதல்நாள் அன்னை வேல் நெடுங்கண்ணியிடம் வேல் வாங்கும் திருவிழாவில் சிங்காரவேலர் திருமுகத்தில் வியர்வைத் துளிகள் அரும்பும் விந்தை அன்று மட்டுமே கண்டு மகிழ வேண்டிய ஒன்று.

## எந்த நிலையிலும் நம் கோட்பாட்டினை விடாத பூசாரிகள்

இந்தியாவின் அண்டை நாடான காபூல் காண்டகார் என்ற பெயர் பெற்ற நகரங்களைக் கொண்டது ஆப்கானிஸ்தானம். மகாபாரத கதாபாத்திரங்களில் உள்ள காந்தாரி, சகுனி முதலியோர் காந்தகார் (தற்போதைய காண்டகாரைச் சேர்ந்தவர்கள். மகாபாரதகாலத்தில் ஆப்கானிஸ்தானம் இந்தியாவுடன் இணைந்திருந்த நாடாகத் தெரிகிறது. தலைநகரான காபூலுக்கு வெளியே அஸ்மல்வாட் என்ற இடத்தில் உள்ள இரு கோவிலைச் சேர்ந்த பூசாரிகள் துர்க்கா கோயிலை நடத்துவதைப்பற்றி விவரித்ததை 2002 டிசம்பர் 20ம் தேதி ஹிந்து நாளிதழில் வெளிவந்ததை இங்கே குறிப்பிட்டுள்ளோம். இந்துக்கள் அதிகம் இல்லாத இடத்தில் தலிபான் ஆட்சியிலும் இந்து இறை வழிபாட்டினை பெறுமையுடன் கடைபிடிப்பது பாராட்டத்தக்கதாகும்.

## Century-old temple survives Taliban rule

ASMAL WATT (kabul), Dec. 19, "Taliban or no Taliban we have nothing to fear in Afghanistan. Nobody can touch the temple of goddess Durga," says 60-year-old Uttam Chand, a pujari in the Asmal Watt temple built a century ago by the Hindu community on the outskirts of the capital city.

Though he call himself a pujari, he could be mistaken for an Afghan. He wears salwar-kameez, sports a beard and wears a Muslim "topi", But he proudly shows his sacred thread and the additional identification, the "kada", which the Taliban made all the Hindus to wear.

Contrary to earlier reports that Hindus were being made to wear a yellow badge, none of the Hindus said they were ever forced to sport the piece of cloth supposed to identify them as non-Muslims.

Did they ever earn the wrath of the Taliban? Just ask another pujari, 35-year-old Ranjit Lal, Who shifted to the temple from Khost to Asmal watt two years ago, "The Taliban were bad people as they tried to force their ideology on us," he said, "Be it the Taliban or anyone else in power in Afghanistan, we

would not be cowered into accepting another religion", he said. - PTI

## அதிசயம் காண்போம்

கோயம்பத்தூர் அவநாசியப்பர் கோவிலின் ஸ்தல விருட்சம் பாதிரி மரம். இது பிரம்மோற்சவ காலத்தில் மட்டும் பூக்கும் மற்ற காலங்களில் பூக்காது. இறைவனுக்கு மட்டுமே தனது மலர்கள் பயன்பட வேண்டும் என நினைக்கும் இந்த மரத்தைப் போல, பக்தர்களும் இறைவன்மீது உண்மையான பக்தி வைத்திருக்க வேண்டும் என்பதை இத்தலச்சிறப்பு எடுத்துக் கூறுகிறது.

## நிறம் மாறும் அம்மன்

மதுரை முதல் ராமேஸ்வரம் செல்லும் வழியில் திருப்புவனம் 18 கி.மீ., திருப்புவனம் முதல் புல்வாய்க்கரை, நரிக்குடி, வீரசோழன் செல்லும் வழியில் 13 கி.மீ. தொலைவில் கல்விமடை ஸ்டாப்பில் நிற்கும். கல்விமடை கிராமத்தில் ஒரு குளக்கரையில் அமைந்துள்ளது திருநாகேஸ்வரமுடையார் திருக்கோவில். மிகவும் பழமை வாய்ந்த சிவதலங்களுள் ஒன்றான இக்கோவில் மூலவர் மிகவும் சக்தி வாய்ந்தவர். பிரதோஷம், அமாவாசை, பவுர்ணமி நாட்களில் இக்கோவிலின் சிவலிங்கத்திலிருந்து உயிருள்ள கண்களைப் போன்ற ஒளி தெரிகிறது. அதே போல் இங்குள்ள அம்மன் சிலையின் கண்களிலும் பளிங்கு போன்ற ஒளி வீசுகிறது. அதோடு அம்மன் சிலை இரண்டு மாதத்திற்கு ஒருமுறை தானாகவே நிறம் மாறுகிறது. பச்சை, ஊதா, மஞ்கள் நிறங்களில் காட்சி அளிக்கிறது.

தகவல் தினமலர்.

இதேபோல் சிவலிங்கம் பகலில் 6 நாழிகளுக்கு ஒருமுறை (தினமும் 1) நிறம் மாறுவதை தெய்வீகத் திரட்டின் முதல் பாகத்தில் குறிப்பிட்டிருந்தோம்.

இடம்: திருநல்லூர் (கும்பகோணம் - தஞ்சை பேருந்து மார்க்கத்தில் உள்ளது). திருவாவடுதுரை ஆதீனத்திற்கு சொந்தமான கோவில்.

# கிரஹமாவது யாது?

'கிரஹம்' என்னும் ஸம்ஸ்கிருதச் சொல்லுக்கு 'ஆகர்ஷிப்பது' அல்லது 'பற்றி இழுப்பது' என்று பொருள். 'எது எதைப் பற்றிக் கொண்டு இழுக்கிறது?' என்பது கேள்வி சூரியன், சந்திரன், செவ்வாய், புதன், குரு, சுக்கிரன், சனி, ராகு, கேது என்பவை நவக்கிரஹங்களும் தங்களுக்கே உரித்தான ஆகர்ஷண சக்தியின் வாயிலாக வாழ்க்கையில் ஏற்பட வேண்டிய சுக துக்கங்களுக்கு அடிப்படையாக அமைந்துள்ள மனிதனின் மன நிலையைத் தங்கள் ஆதீனத்துக்குப் பணியுமாறு ஆகர்ஷித்து அதற்கேற்றவாறு செயல் புரியச் செய்கின்றன. இவ்விதமாக மனித வர்க்கத்தை 'நவக்கிரஹங்கள்' ஆட்டி வைக்கின்றன. எனவே, மனிதனுடைய ஒவ்வொரு செயலும் அசைவும் நவக்கிரஹங்களின் ஆட்சிக்கு உட்பட்டே நடை பெறுகின்றன என்று நம் முன்னோர்கள் நிச்சயித்திருக்கிறார்கள்.

கிரஹங்கள் என்பவை யாவை? உலகத்தைப் படைத்துக் காத்து அழித்துவரும் பரம்பொருள் ஒன்று இருக்க, நவக்கிரஹங்களுக்கு அவசியம் என்ன? இந்தக் கேள்விக்குத் தக்க விடை கூறத்தான் வேண்டும். இல்லா விட்டால் கிரஹங்களையும், அவற்றின் முக்கியத்துவத்தை யும் சக்தியையும் சிலர் ஒப்புக்கொள்ள மாட்டார்கள். பின்வரும் உதாரணத்தினால் கிரஹங்களின் முக்கியத் துவத்தை விளக்கலாம்.

நம், பாரத தேசம் ஒரு பெரிய நாடு. இதில் இப்பொழுது பல ராஜ்யங்கள் இருக்கின்றன. இந்த ராஜ்யங்கள் அனைத்தின் நிர்வாகத்துக்கும் ராஷ்டிரபதி தான் பொறுப்பாளி. அவரே எல்லாவித அதிகாரங்களும் பெற்றவர் எனினும் இந்த ராஜ்யங்களில் நடக்கும் ஒவ்வொரு செயலையும் அவர் ஒருவரே நேராகக் கண் காணித்து ஆட்சி நடத்த முடியுமா? முடியாதன்றோ? அதற்காக அவர் கவர்னர் என்ற ஓர் அதிகாரியை ஒவ்வொரு ராஜ்யத்துக்கு தம்முடைய பிரதிநிதியாக நியமித்திருக்கிறார். அப்படிப்பட்ட கவர்னர்களின் மூலம் ஒவ்வொரு ராஜ்யத்திலும் ராஷ்டிரபதி செயலாற்றுகிறார்.

அம்மாதிரியே 'மனித சரீரம்' என்ற தேசத்துக்கு, ஸகலலோக நாயகரான பரம்பொருளே தலைவரானா லும்,

அந்தச் சரீரத்திலுள்ள ஒவ்வொரு பாகத்திற்கும் ஒவ்வொரு கிரஹத்தை அவர் அதிகாரியாக நியமித்திருக் கிறார். இவ்விதம் அதிகாரிகளாக நியமிக்கப்பட்டிருக்கும் கிரஹங்கள், 'அந்த' அந்த மனிதன் முன் ஜன்மங்களில் செய்த வினையை (கர்மாவை) அநுசரித்து, அதற்குத் தகுந்த பலன்களைத் தத்தம் தசாபுக்திகள் நடக்கும் பொழுது கொடுத்து வருகின்றன. ஒவ்வொரு தேகத்திலும் உள்ள ஆத்மா, மனம், பலம், வாக்கு, ஞானம், காமம், துக்கம் முதலியவற்றுக்கெல்லாம் ஒவ்வொரு கிரஹம் அதிகாரியாக நியமிக்கப்பட்டிருக்கிறது. ஆத்மா, மனம், பலம், வாக்கு, ஞானம், காமம்! துக்கம் என்பவற்றைத் தவிர, எலும்பு, இரத்தம், மூளை, தோல், தசை, இந்திரியம், நரம்பு முதலிய பொருள்களும் நம் சரீரத்தில் இருக்கின்றன. ஆகையால், சூரியன் முதலியவை கீழ்க்காணும் விதமாக நம் தேகத்திலுள்ள அங்கங்களில் இடம் பெற்றிருக்கின்றன.

**சூரியன்:** ஆத்மா, எலும்பு—பிதா.

**சந்திரன்:** மனம், இரத்தம்—மாதா.

**செவ்வாய், ராகு:** பலம், மஜ்ஜை (marrow)—சகோதரர்கள்.

**புதன்:** வாக்கு, தோல்—தாய் மாமன்.

**குரு:** ஞானம், தசை, மாமிசம்—புத்திரர்கள்.

**சுக்கிரன்:** காமம், இந்திரியம்—மனைவி.

**சனி, கேது:** துக்கம், நரம்புத் தசை—மரணம்.

மேற்கண்ட அட்டவணையில் உள்ளபடி, ஒரு மனி தன் பூர்வ ஜன்மத்தில் புண்ணியம் செய்தவனா, அவன் எலும்பு பலமுள்ளதா, தந்தை நல்லவரா, கெட்டவரா, அவர் நீண்ட நாட்கள் இருப்பாரா என்பவை போன்ற விஷயங்களையெல்லாம் அவனவனுடைய ஜாதகத்தில் சூரியன் இருக்கும் நிலையை அநுசரித்துச் சொல்லக் கூடும்.

அவ்விதமே ஒரு ஜாதகன் சுத்தமான மனம் உடையவனா, அவனது இரத்தம் சுத்தமானதா, அவனுடைய தாய் சுகமாக நீண்ட நாள் வாழ்வாளா என்பன போன்ற விஷயங்களைச் சந்திரன் நிலையைப் பார்த்து அறிய வேண்டும். இவ்விதமே மற்ற விஷயங்களையும், ஒவ்வொன்றுக்கும் உரிய கிரஹங்களின் நிலையைக் கொண்டு, நிர்ணயிக்க வேண்டும்.

எனவே, நம் உடலிலுள்ள இரத்தம், மாமிசம், எலும்பு முதலியவையெல்லாம் அந்த அந்தக் கிரஹங்களின் அம்சங்கள் என்பது மேலே தந்துள்ள அட்டவணையால் தெரிகிறது.

எங்கோ ஆயிரக்கணக்கான மைல் தூரத்துக்கு அப்பாலுள்ள கிரஹங்கள் மனிதனின் சுகதுக்கங்களுக்கு எப்படிக் காரணமாகின்றன என்று பிரமிக்க வேண்டிய தில்லை. நம் உடலும், உடலைச் சேர்ந்த தசை, இரத்தம், எலும்பு போன்ற உருவமுள்ள பாகங்களும், உருவமில்லாத ஆத்மா, மனம், புத்தி, காமம் போன்றவை யும், கிரஹங்களின் அம்சங்களே - அதாவது கிரஹங்க ளெல்லாம் நம் உடலிலேயே குடிகொண்டிருக்கின்றன - என்பது கவனிக்கத்தக்கதாம்.

மேற்கண்டபடி நம் உடலோடு தொடர்பு கொண்டுள்ள கிரஹங்களைத் திருப்தி செய்விப்பதற்காக வும், உடலில் அந்த அந்தப் பாகங்களை வலிமைப் படுத்தவும் அந்த அந்தக் கிரஹங்களுக்கு உரிய நெல், துவரை, எள் முதலிய தானியங்களை நாள்தோறும் உபயோகித்து வருகிறோம். சனிக்கிழமையன்று சனிக் கிரஹத்தைத் திருப்தி செய்வித்து, அதன்மூலம் நீண்ட ஆயுளையுடைய நல்லெண்ணெய் ஸ்நானம் செய்ய வேண்டுமென்று நம் பெரியோர் வழக்கப்படுத்தியிருக் கிறார்கள். "சனி நீராடு" என்பது பெரியோர் வாக்கு.

இவற்றையெல்லாம் கவனித்தால் நம் உணவு, உடை, செயல், சேவை போன்ற எல்லாவற்றையும் நம்மை அறியாமலே கிரஹங்களின் பிரீதிக்காக நாம் செய்து வருகிறோம் என்பது விளங்கும். ஆகையால், கிரஹங்கள் நம் தினசரி வாழ்க்கையிலும் நம்முடன் ஒன்றியிருக் கின்றன என்பது கண்கூடாகும்.

## கிரஹங்களும் வினைப்பயனும்

ஆதிபரம் பொருளின் படைப்பில் எத்தனையோ லக்ஷம் ஜீவராசிகள் இருக்கின்றன. ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு விதமான சரீர அமைப்பும் வெவ்வேறு விதமான செயற்பாடுகளும், 'பல வேறு விதமான கோரிக்கைகளும், தகுந்த முயற்சிகளும், முரண்பாடுகளும் உள்ளன. இந்த ஜீவராசிகளில் தேவர், மனிதர், மிருகங்கள், பறவைகள், கிருமிகள் முதலிய எல்லாம் அடங்குகின்றன. பிரம்ம லோகம் முதலாகப் பாதாள லோகம் வரையிலுள்ள பதினான்கு உலகங்களும், அவற்றிலுள்ள ஜீவராசிகளும், ஜடப்பொருள்

களும் படைப்பில் சேருகின்றன. இந்தப் படைப்பு ஒன்றுக்கொன்று இவ்வளவு வித்தியாசமாக இருக்கக் காரணம் என்ன? இதற்குக் காரணம், அந்த அந்த ஜீவாத்மா செய்த முன்வினையே என்பர் நம் பெரியோர்.

இப்போது நாம் மற்ற ஜீவராசிகளையெல்லாம் விட்டுப் பூவுலகிலுள்ள மனிதவர்க்கத்தை மாத்திரம் எடுத்துக் கொள்வோம். ஆஹா! மனிதர்களில் எவ்வளவு, எவ்வளவு, வித்தியாசம்!

ஒருவன் பணக்காரன்-இன்னொருவன் ஏழை.

ஒருவன் அறிவாளி-இன்னொருவனின் மூடன்.

ஒருவன் சிவப்பு-இன்னொருவன் கறுப்பு.

ஒருவன் நெட்டை-இன்னொருவன் குட்டை.

ஒருவனுக்கு ஒரு கண் இல்லை-இன்னொருவனுக்கு இரண்டு கண்ணும் இல்லை.

ஒருவன் செவிடன்-இன்னொருவன் ஊமை.

ஒருவன் நொண்டி-இன்னொருவன் கூனன்.

ஒருவன் உடல் பருத்தவன்-இன்னொருவன் உடல் இளைத்தவன்.

இப்படி மனிதர்களிடையே எவ்வளவோ முரண் பாடுகள் உள்ளன.

இத்தகைய முரண்பாடுகள் எல்லாம் ஒருவருக்கு ஒருவர் சம்பந்தமில்லாதவர்களுக்கு மாத்திரந்தானே என்று நினைக்க வேண்டாம். ஒரே தாயின் வயிற்றில் பிறந்த பிள்ளைகளில்கூட இந்த முரண்பாடுகள் உள்ளன. உதாரணமாக, ஒரே தாய் வயிற்றில் பிறந்த பல பிள்ளை களில் ஒரு பிள்ளை மாதம் ஆயிரக்கணக்கில் சம்பாதிக்கும் அதிகாரி! இன்னொரு பிள்ளை தன் பெண்டு பிள்ளைகளைக் கூடக் காப்பாற்றப் போதாத ஐம்பது ரூபாய் சம்பளம் வாங்குபவன்! இன்னொரு பிள்ளை சமையற்காரன்! இன்னொருவன் சினிமா நடிகன்! மற்றொருவன் கார் டிரைவர்! இன்னொருவன் தலையில் சாமான்களைச் சுமந்து வீதிவீதியாக விற்பவன்! இப்படிப் பல விதம் உண்டு!

மற்றொரு விதமும் உண்டு: தகப்பன் படிப்பு வாசனையே அறியாதவன்; ஆனால், பிள்ளையோ உலக மெல்லாம் புகழும் உயர்ந்த மேதாவி. அல்லது தந்தை

உலகமெல்லாம் புகழும் அறிவாளி, பிள்ளையோ எழுத்து வாசனையே அறியாத மூடன்.

மேலே கூறியுள்ளவை போன்ற முரண்பாடுகளை நாம் அன்றாட வாழ்க்கையில் கண்ணெதிரில் பார்த்து வருகிறோம்.

மேலும், ஒரே மனிதனின் வாழ்க்கையை எடுத்துக் கொண்டாலும், அவனுக்கு வெவ்வேறு காலங்களில் நேரும் வெவ்வேறு தொழில்களையும் சுகதுக்கங்களையும் பார்க்கிறோம். ஒரு சமயம் தேவையான அநேக வசதி களுடன் அமோகமாக அவன் வாழ்கிறான். அநேக விதச் சிறப்புக்களை அடைகிறான். அதே மனிதனுக்குத் தன் வாழ்நாளில் மற்றொரு சமயத்தில் சகல சௌக்கியங்களும் மறைந்து, ஆற்று வெள்ளம் வற்றினதுபோல் ஆகிறது. செல்வம் அவனை விட்டு அகலுகிறது. உலகம் அவனைத் தாழ்ந்தவனாக மதிக்கிறது. இதற்கெல்லாம் காரணம் பூர்வ ஜன்ம கர்மம் என்று சொல்லப்படும் முற்பிறப்பு வினையேயாகும். "பற்றித் தொடரும் இருவினைப் புண்ணிய பாவமுமே" என்பது பட்டினத்தார் வாக்கு.

பூர்வ ஜன்ம கர்மம் என்பது, புண்ணிய ரூபமாகவும் பாவ ரூபமாகவும் இருக்கும். ஒவ்வொருவனும் தன் வாழ் நாள் முழுவதும் புண்ணியம் மாத்திரமோ, பாவம் மாத்திரமோ தனியாகச் செய்திருக்க மாட்டான். மிகுந்த புண்ணியசீலனுங்கூடத் தனக்குத் தெரியாமலே ஏதாவது பாவம் செய்திருக்கலாம். அவ்விதமே பாவியும் தனக்குத் தெரியாமல் ஏதாவது புண்ணியம் செய்திருப்பான். ஆகையால், ஒருவன் முன் ஜன்மத்தில் செய்த, புண்ணியத் தையும் பாவத்தையும் அநுபவிப்பதற்காகவே மறுபடியும் ஜன்மம் எடுக்கிறான் என்பது இயற்கை நியதி.

இந்தப் பொன் மொழிகளைப் படியுங்கள்:

**"புண்ணியமாம் பாவம்போம் போனநாள் செய்தவை**
**மண்ணில் பிறந்தார்க்கு வைத்த பொருள்."** **–நல்வழி**

**"முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்."**
**–கொன்றை வேந்தன்**

**"முற்பகல் செய்வான் பிறன்கேடு தன்கேடு**
**பிற்பகல் காண்குறூஉம்."** **–சிலப்பதிகாரம்**

**"பிறர்க்கின்னா முற்பகல் செய்யின் தமக்கின்னா**
**பிற்பகல் தாமே வரும்."** **–திருக்குறள்**

•

•

சென்ற பிறவியில் செய்த புண்ணியம் செல்வத்தைக் கொடுக்கும். 'பாவமானது அழிவுக்கே கொண்டு போய்ச் சேர்க்கும்.

பகலினது முற்பகுதியில் ஒருவன் மற்றொருவருக்குத் தீங்கு புரிந்தால், அதன் பயனை அப்பகலின் பிற்பகுதி யிலேயே அவன் காண்பான். முற்பகல் என்பதற்கு முற்பிறப்பில் என்றும், பிற்பகல் என்பதற்கு மறுபிறப்பில் என்றும் பொருள் கொள்ளலாம்.

மனிதனுடைய செயலை ஒரு தராசுக்கோலுக்கு ஒப்பிடலாம். அதன் இருபுறத்திலும் உள்ள தட்டுக்களில் ஒன்றில் புண்ணியமும், மற்றொன்றில் பாவமும் வைத்திருக்கின்றன. புண்ணியம் அதிகமாக இருந்தால் அதற்குத் தக்கபடி வீடு, வாசல், வாகனம், பூமி, பசு, தனம், தானியம் போன்ற அதிகாரங்களை அனுபவிக்கிறான். அதனால் அவனைப் புண்ணியம் செய்தவன் என்று உலகில் பேசுவார்கள். ஆனால், அவனும் முன் ஜன்மத்துப் பாவத்தின் பலனை அதே சமயத்தில் ஓரளவுக்கு அனுபவிக்காமலில்லை. உதாரணமாக, கை நிறையப் பணமும், கண் நிறைந்த மனைவியும், மற்ற வாழ்க்கை வசதிகளும் இருந்தும், தனக்குப் பின் தன் பெயர் சொல்ல – தன் செல்வத்தை அனுபவிக்க – ஒரு குழந்தை பிறக்க வில்லையே என்று ஏங்குகிறவன் இருக்கிறான் அல்லவா? இம்மாதிரியே பாவம் செய்தவன் என்று எண்ணப்படும் மற்றொருவன், மனைவி மக்களும், உற்றார் உறவினரும் நிறைந்திருந்தும் குடிக்கக் கூழும் உடுக்கத் துணியும் இல்லையே என்று அல்லும் பகலும் அல்லற்படுகிறான். ஆகையால், மனிதன் என்ற தராசுக்கோலுக்கு இருபுறமும் இருக்கும் புண்ணிய பாவங்கள் இடத்தை விட்டு மாறாமல், மனிதனுக்கு ஒரே சமயத்தில் சுகத்தையும் துக்கத்தையும் மாறி மாறிக் கொடுத்து வருகின்றன என்பது கண்கூடாகும்.

வேறொரு விதமும் காணலாம்; ஒருவன் துஷ்டன்; பல பாவச் செயல்களைப் புரிகிறான். ஆனால், அவன் வாழ்நாளில் வசதியாக வாழ்கிறான். மற்றொருவன் நல்லவன்; ஒருவருக்கும் தீங்கு செய்ய மனத்தாலும் நினையாதவன்; தெய்வ பக்தி உள்ளவன். ஆனால், அவன் படும் கஷ்டமோ சொல்லி முடியாது. நம் கண்முன் சுகங்களை அனுபவிக்கும் துஷ்டன் இந்த ஜன்மத்தில் செய்த புண்ணியத்தின் பலனை இந்த ஜன்மத்தில் அனுபவித்து வருகிறான். அவனே இந்த

ஜன்மத்திலும் புண்ணிய காரியமே செய்வானானால், இந்தப் பிறப்பின் முடிவிலேயே மறு பிறப்பில்லாத முக்தியை அடைவது திண்ணம். ஆனால் அவன் தீச்செயல்களைச் செய்வானாகில் அவன் தீய பலனை இப் பிறப்பிலோ அல்லது அடுத்த ஜன்மத்திலோ அனுபவிப்பது நிச்சயம். அப்படியே இந்த ஜன்மத்தில் நற்செயல் புரிபவனாக இருந்தும், கஷ்டத்தை அனுபவிப்பவன் தன் கஷ்டங்களுக்குப் 'பூர்வஜன்ம வினையே' காரணம் என்று தெரிந்து, அதற்காகத் தன்னாலியன்ற அளவில் நற்காரியங்களைச் செய்ய மேன்மேலும் முயல வேண்டும். ஷோப்பன்ஹார் என்ற தத்துவ விஞ்ஞானி, "சென்றதை நினைத்து வருந்தாதே; எதிர்காலம் உன் கையில் இருக்கிறது. நல்வினையைச் செய்து உன் வருங்காலத்தைச் செம்மையாக வகுத்துக்கொள்" என்கிறார்.

இதை மற்றொரு விதமாகவும் விளக்கலாம். ஒருவன் ஒரு பாங்கில் பணம் போட்டு வைக்கிறான். பணம் போடுகிறவன் நல்லவனா கெட்டவனா என்பதைப் பற்றிப் பாங்கிக்காரர் களுக்கு அக்கறை இல்லை. அவன் போட்டிருக்கும் பணம் கணக்கில் இருக்கும் வரையில் அவன் கேட்ட பொழு தெல்லாம் பணம் கொடுத்துக் கொண்டே வருகிறார்கள். அவனுடைய பாங்கில் மிச்சம் இல்லாதிருந்தால் அவன் கொடுக்கும் 'செக்கை'த் திருப்பி அனுப்பி விடுவார்கள். அதுபோலவே, ஒருவன் இப்பொழுது துஷ்டனாக இருந்தாலும், பூர்வ ஜன்மத்தில் அவன் சேர்த்து வைத்த புண்ணியத்துக்குத் தகுந்த சுகத்தைப் பகவான் கொடுத்து வருகிறார். அவ்விதமே பாங்கில் கடன் பட்டவன் நல்லவனானாலும், அவன் கடன் முழுவதையும் தீர்க்கும் வரையில் பாங்கிக்காரர்கள் அவனை வருத்துவது போலவே, பூர்வ ஜன்மத்தில் செய்த பாவம் தீரும் வரையில் இந்த ஜன்மத்தில் நல்லவனாக இருந்தாலும் அவனுக்குப் பகவான் கஷ்டங்களைக் கொடுத்து வருகிறார். இம்மாதிரி பாங்கிக்காரன் உள்ள நிலையில் இருக்கும் பகவானை நிந்திப்பதில் என்ன பயன்?

*தாங்கள் செய்துள்ள தீவினையின் பயனாகக் கஷ்டப்படும் சிலர், அறிவிழந்து, ஆண்டவனை நோகின்றனர். என்னே இவர்கள் அறிவீனம்! அவர்கள் நம் ஔவைப் பிராட்டியாரின் அமுத மொழிகளை அமைதியாகப் படிக்கட்டும்:-*

"செய்தீ வினையிருக்கத் தெய்வத்தை நொந்தக்கால்
எய்த வருமோ இருநிதியம்? –வையத்து
அறும்பாவம் என்னவறிந் தன்றிடார்க் கின்று
வெறும்பானை பொங்குமோ மேல்?"

அந்தோ பாவம்! தான் செய்த அடாத செயல் களுக்குத் தண்டனைகளை அனுபவித்தே தீர வேண்டும். தண்டனைகள் அனுபவிக்கும் சமயம், கடவுளைத் திட்டுவதால், மிகுந்த செல்வம் இப்படிப்பட்ட பாவிகளை வந்தடையுமோ? வெறும் பானை பொங்குவதும் உண்டோ?

## பாவமும் மன்னிப்பும்

பூர்வ ஜன்மத்தில் பாவம் செய்ததனால் தற்பொழுது கஷ்டத்தை அனுபவிப்பவர்களுக்கு விமோசனமே இல்லையா? இருக்கிறது.

அதையும் ஓர் உதாரணத்தால் விளக்கலாம். ஒருவன் ஏதோ குற்றம் செய்துவிட்டான். அவன் செய்த குற்றத்திற்கு அவனுக்கு ஏழு வருஷம் கடின தண்டனை விதிக்கலாமென்று சட்டம் இருக்கிறது. அவன் கண்ணீரும் கம்பலையுமாக, மனம் நெகிழ்ந்து, தான் செய்த குற்றத்தை உணர்ந்து நீதிபதியிடம் தனக்குத் தண்டனையே யில்லாமல் மன்னித்துவிட வேண்டுமென்று மன்றாடிக் கேட்டுக் கொள்கிறான். ஆனால், சட்டபடி தவ்று செய்தவன் தண்டனையை அனுபவித்தே தீர வேண்டு மென்று இருப்பினும், அவன் தன் குற்றத்துக்காக மனமார வருந்தியதனால், ஏழு வருஷத் தண்டனையை ஐந்து வருஷமாகக் குறைத்துவிட்டதாக நீதிபதி தீர்ப்பளிக்கிறார். அவ்விதமே முன் ஜன்மத்தில் செய்த பாவத்துக்கு இந்த ஜன்மத்தில் கஷ்டங்களை அனுபவிக்க வேண்டியது நியதி யானாலும், மனம் உருகி மன்றாடிக் கேட்டுக் கொண்டால் பகவான் நம கஷ்டங்களைக் குறைத்து. அதோடு கஷ்டங்களைப் பொறுத்துக்கொள்ளும் ஆற்றலையும் அருளுகிறார். நல்ல நிலையில் உள்ளவர்கள் மீண்டும் மீண்டும் பகவானைத் துதித்து வந்தால், அவர் களுக்கு மேன்மேலும் 'சுகம்' உண்டாகும் என்பதைச் சொல்லவும், வேண்டுமோ?

**"கல்லாப் பிழையும் கருதாப் பிழையும் கசிந்துருகி**
**நில்லாப் பிழையும் நினையாப் பிழையும்நின்**
**னைந்தெழுத்தைச்**

**சொல்லாப் பிழையும் துதியாப் பிழையும் தொழாப்பிழையும்
எல்லாப் பிழையும் பொறுத்தருள்வாய் கச்சி ஏகம்பனே !"**

எனப் பட்டினத்தார் நெஞ்சம் நெக்குருகப் பாடிய பாடலினை நினைந்து நினைந்து பாடும் அடியவர்களும் ஆண்டவனால் மன்னிக்கப்பட்டு ஆட்கொள்ளப்படு வார்கள் என்பது திண்ணம்.

மேற்கண்ட உதாரணங்களால் என்ன தெரிகிறது? ஒவ்வொருவனுக்கும் வாழ்க்கையில் ஏற்படும் சுகமோ துக்கமோ அவன் முற்பிறப்பில் செய்த கருமத்தை அனுசரித்ததே என்பது தெரிகிறது. மற்றும் அவன் நல்ல சமயத்தில் அதாவது நல்ல லக்னத்தில் அல்லது சாதாரண லக்னத்தில் பிறப்பதும் அவன் செய்த பூர்வ ஜன்ம கருமத்தைப் பொறுத்ததே ஆகும். கிரஹங்கள் சுப ஸ்தானத்திலோ அசுப ஸ்தானத்திலோ அமைவதும் அவன் முற்பிறப்பில் செய்த கருமத்தைப் பொறுத்ததே தான் என்று அறிய வேண்டும். ஜாதகம் நம் இருவினைப் பயன்களுக்கும் உள்ள பலாபலன்களை எடுத்துக் காட்டும் ஒரு கணக்கு.

முன்பு விவரித்தபடி ஒவ்வொருவனுக்கும் வாழ்க்கை யில் ஏதாவது ஒரு குறை இருந்தே தீரும். இருப்பினும், அதைத் தீர்த்துக் கொள்ள வழி இல்லாமலில்லை. உதாரணமாக, உடலிலுண்டாகும் நோய்களைக் குணப் படுத்துவதற்காகப் பகவான் மருந்துகளையும் மருத்துவர் களையும் படைத்திருக்கிறார். நமக்கு ஏதாவது வியாதி ஏற்பட்டால் நல்ல மருத்துவரை அணுகி அவர் சொன்னபடி மருந்து சாப்பிட்டுக் குணப்படுத்திக் கொள்கிறோம். அவ்வாறன்றி மருத்துவரிடம் போகத் தயங்கினால் வியாதி தீரமல் வருந்த வேண்டியதுதான்.

நீங்கள் மனமுறுகிக் கடவுளைத் துதி செய்தால், கிரஹங்கள் உங்களுக்குத் தரும் கஷ்டங்கள் நிச்சயமாகக் குறைந்துவிடும். அவரவர்கள் தத்தம் மதத்துக்குத் தக்கபடி தம் முன்னோர்கள் வகுத்த வழியில் இந்தத் துதிகளைச் செய்யலாம்.

**நன்றி : லிப்கோ.**

# நவக்கிரக ஸ்தோத்ரம் / நவக்ரஹ பாடல்கள்

முதலில் ஸ்தோத்திரத்தை ஆரம்பிக்குமுன் கீழ்க் கண்டவாறு சங்கல்பம் செய்து கொள்வார்கள்.

ஸ்ரீ வேதவ்யாஸாய நம:
அஸ்ய ஸ்ரீ நவக்ரஹ
ஸ்தோத்ர மந்தரஸ்ய
வேதவ்யாஸ ரிஷி:
அனுஷ்டுப் சக்தஹ
மம க்ரஹானு கூல்யார்த்தே
நவக்ரஹ ஸ்தோத்ர ஜபவி நீயோகஹ:

### சூரியன்

ஜபாகுஸூம ஸம்காஸம்
காஸ்ய பேயம் மஹாத்யுதிம்
தமோரிம் ஸர்வ பாபக்நம்
ப்ரணதோஸ் மதிவாகரம்

### சந்திரன்

ததிஸங்க துஷாராபம்
க்ஷீரோ தார்ணவ ஸம்பவம்
நமாமி சசினம் ஸோமம்
ஸம்போர் மகுட பூஷணம்

### (அங்காரகன்) செவ்வாய்

தரணீ கர்ப ஸம்பூதம்
வித்யுத் காந்தி ஸமப்ரபம்
குமாரம் ஸக்தி ஹஸ்தம் ச
மங்களம் ப்ரண மாம்யஹம்

### புதன்

ப்ரியங்கு கலிகாஸ்யாமம்
ரூபேனா ப்ரதிமம் புதம் புத
ஸௌம்ய ஸௌம்ய குணோபேதம்
தம்புதம் ப்ரணமாம் யஹம் ||

### குரு

தேவானாம் சிரிஷீணாம்ச
குரும் காஞ்ச ந ஸந்நிபம்
புத்தி பூதம் திரிலோ கேஸம்
தம் நமாமி ப்ரஹஸ்பதிம் ||

### சூரியன்

சீலமாய் வாழச் சீரருள் புரியும்
ஞாலம் புகழும், ஞாயிறே போற்றி
சூரியா போற்றி சுதந்திரா போற்றி
வீரியா போற்றி வினைகள் களைவாய்

### சந்திரன்

எங்கள் குறைகள் எல்லாம் தீர்க்கும்
திங்களே போற்றி, திருவருள் தருவாய்
சந்திரா போற்றி, சத்குரு போற்றி
சங்கடந் தீர்ப்பாய் சதுரா போற்றி

### செவ்வாய்

சிறப்புறுமணியே செவ்வாய்தேவே
குறையிலா தருள்வாய் குணமுடன்வாழ
மங்களச் செவ்வாய் மலரடி போற்றி
அங்காரகனே அவதிகள் நீக்கு

### புதன்

இதமுற வாழ இன்னல்கள் நீக்கு
பகவானே பொன்னடி போற்றி
பதந்தந்தாள்வாய் பண்ணொலியானே
உதவியே யருளும் உத்மா போற்றி

### குரு

குணமிகு வியாழக்குரு பகவானே
மனமுடன் வாழ மகிழ்வுட னருள்வாய்
ப்ருகஸ்பதி வியாழப் பரதகுரு நேசா
க்ரகதோஷ மின்றிக் கடாக்ஷித்தருள்வாய்

சுக்ரன்

ஹி மகுந்தம் ருணாளாபம்
தைத்யானாம் பரமம் குரும் |
ஸர்வசாஸ்தர ப்ரவக்தாரம்
பார்க்கவம் ப்ரணமாம் யஹம்

சனீஸ்வரன்

நீலாஞ்சன ஸமாபாஸம்
ரவிபுத்ரம் யமாக்ரஜம் |
ச்சாயா மார்த்தாண்டா ஸம்பூதம்
தம் நமாமி ச்னைச்சரம்

ராகு

அர்த்த காயம் மஹாவீர்யம்
சந்த்ராதித்ய விமர்த்தனம்
ஸிம்ஹிகா கர்ப ஸம்பூதம்
தம் ராகும் ப்ரணமாம் யஹம்

கேது

பலா ச புஷ்பஸம் காஸம்
தார காக்ர ஹி மஸ்தகம் |
ரௌத்ரம் ரௌத்ராத்மகம் கோரம்
தம் கேதும் ப்ரணமாம்யஹம் ||

சுக்ரன்

சுக்கிரமூர்த்தி சுபமிக யீவாய்
வக்கிரமின்றி வரமிகத் தருவாய்
வெள்ளிச் சுக்கிர வித்தக வேந்தே
அள்ளிக்கொடுப்பாய் அடியார்க்கருளே

சனீச்வரன்

சங்கடந் தீர்க்கும் சனிபகவானே
மங்களம் பொங்கமனம் வைத்தருள்வாய்
சச்சரவின்றிச் சாகா நெறியில்
இச்சகம் வாழ இன்னருள் தாதா

ராகு

அரவெனும் ராகு அய்யனே போற்றி
கரவாதருள்வாய் கஷ்டங்கள் நீக்கி,
ஆகவருள்புரி அனைத்திலும் வெற்றி
ராகுக்கனியே ரம்மியா போற்றி

கேது

கேதுத் தேவே கீர்த்தித் திருவே
பாதம் போற்றி பாபம் தீர்ப்பாய்
வாதம், வம்பு, வழக்குகளின்றி
கேதுத் தேவே கேண்மையாய் ரக்ஷி

இதிவ்யாஸ முகோத்கீதம்
ஏ படந்தி ஸமாஹிதா:
திவா வர யதிவா ராத்ரென
விக்ன சாந்திர் பவிஷ்யதி ||

நரநாரீன ருபானாஞ்ச
பவேத் து:ஸ்வப்ன நாஸனம்
ஐஸ்வர்யா மதுலம் தேஷாம்
ஆரோக்கியம் புஷ்டி வர்த்தனம்

க்ரஹ நக்ஷ்த்ர ஜாபீடா
தஸ்கராக்னி ஸமுத்பவா
தா: ஸர்வா பிர ஸமம்யாந்தி
வ்யாஸோப் ருதே நஸம்ஸய:

நாளென்செயும் வினைதானென்
செயுமெனை நாடிவந்த கோளொன் செயுங்
கொடுங் கூற்றன்
செயுங்குமரேசரிரு
தாளும் சிலம்பும் சதங்கையும்
தண்டையும் சண்முகமும் தோளும்
கடம்பும் என் முன்னேவந்து
தோன்றிடினே

கந்தரலங்காரம் (அருணகிரிநாதர்)

# கோளறுபதிகம்

## திருஞானசம்பந்தப் பெருமானால் அருளிச் செய்யப்பெற்றவை

**உரையாசிரியர் : 'புலவர் திலகம்' சி. வித்யாசாகர்**

சைவ சமயக் குரவர்கள் நால்வர்கள் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி சுவாமிகள், மாணிக்கவாசகர். இதில் முதல் மூவர் தேவாரத்தையும், மணிவாசகர் திருவாசகம், திருக்கோவையார் பாடியதாக வரலாறு. இவர்களது காலம் 7ஆம் நூற்றாண்டு 'பாண்டிய நாடு முத்துடைத்து' என்று பிற்காலத்தில் போற்றப்பட்டாலும், பாண்டிய நன்நாட்டை நின்றசீர் நெடுமாறன் என்னும் பாண்டிய மன்னன் ஆண்டு வந்தான். அவனது துணைவியார் மங்கையர்க்கரசியார் சோழ நாட்டு நங்கை. சிறந்த சிவபக்தை. மன்னன் சமண சமயத்தை பின்பற்றி வந்ததைக் கண்ட ராணியார் பெரிதும் வருந்தினார். சைவம் தழைக்கப் பெரு விருப்பம் கொண்டார். நாட்டு சேனாதிபதி அமைச்சர் குலச் சிறையாரிடம் இது பற்றி தெரிவித்தார். மன்னனுக்கு வெப்பு நோய் ஆட்கொண்டது. நோய் நீங்க வேண்டுமெனில் ஞானப்பால் உண்ட ஞான சம்பந்தப் பெருமானால் இது முடியும். அவர் திருமறைக்காடு என்றழைக்கப்படும் வேதாரண்யம் திருத்தலத்தில் தங்கி யிருப்பதாக தகவல். தாங்கள் ஓலை அனுப்பி, உடன் ஆளை அனுப்பி அழைத்து வந்தால் இறையருளால் எல்லாம் இனிதே நிறைவேறும் என்று அம்மையாரிடம் தமது விருப்பத்தினை அமைச்சர் பெருமானும் தெரிவித்தார். ஓலையும், தூதுவன் போன நேரத்தில் திருஞானசம்பந்த பெருமான், திருநாவுக்கரச பெருமானுடன் தங்கியிருந்தார். செய்தியறிந்த அப்பர் பெருமான். தற்சமயம் மதுரை செல்வது நல்லதல்ல. 'நாளும் கோளும்' நன்மை பயப்பனவாக இல்லை என்று கூறி தடுத்தார். 'மூத்தோர் சொல் வார்த்தை அமிர்தம்' என்பர். ஆனால் ஞானப்பால் உண்ட காழிப் பிள்ளையார், நாளும் கோளும் சிவனின் பார்வையால் நன்மை செய்யும், என் தந்தையார் சிவனருள் உண்டு என்று கூறி, மதுரை புறப்பட்டார். அந்நேரத்தில் உதித்த திருப்பாடலே (கோளறு பதிகம்.) கோள் -

நவகோள் (நவக்கிரகம்) அறு - தீயவை தீர்க்கும். பதிகம் - பாடல். இதுவே பொருள். இப்பாடலின் சிறப்பு, பெருமை யாதெனில் பாண்டியன் வெப்பு நோய் நீங்கியதே ஆகும்.

எப்போதுமே ஞானசம்பந்தப் பெருமானின் திருப்பாடலில் ஒருமுறை வைப்பு அதிசயம் இருக்கும். அது யாது எனில் முதல் ஏழு பாடல்களில் இறைவனின் உறைவிடம், பண்புநலன், இயற்கை முதலியவைகளை விவரிப்பார். எட்டாம் பாடல் இலங்கை மாமன்னன் இராவணன் பெற்ற பேறுபற்றியும் ஒன்பதாம் பாடலில் அடிமுடி தேடிய வரலாறும், பத்தாம் பாடலில் சமணர், பௌத்தர் பற்றிய தகவல்களும், பதினோராவது பாடலில் தன் பெயரோடு, பதிகத்தின் பயனும் தெரிவிப்பார். எனவே இந்து மதத்தில் எத்தனையோ புனித நன்னூல்கள் உண்டு. ஆனால் அறிவியல் உலகில் பயணம் மேற்கொள்ளும் நாம், நலமாய் வாழ, இனிய பயணம் மேற்கொள்ள பெரிதும் துணைபுரியும் கோளறு பதிகத்தினை தினமும் வாசிப்போம். இறை நாமத்தை சுவாசிப்போம்.

"ஓம் நமசிவாய"

1

வேயுறு தோளி பங்கன் விடமுண்ட கண்டன்
மிக நல்ல வீணை தடவி
மாசறு திங்கள் கங்கை முடிமேலணிந்துஎன்
உளமே புகுந்த அதனால்
ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன் வியாழன் வெள்ளி
சனி பாம்பிரண்டு உடனே
ஆசறு நல்ல நல்ல அவை நல்ல நல்ல
அடியார் அவர்க்கு மிகவே

**உரை :** மூங்கிலைப் போன்ற வழவழப்பு, பொலிவு உடைய தோளைப் பெற்றவரும், அழகுக்கு ஒவ்வாத அமுத வல்லியாகிய ஈஸ்வரியை இட பாகத்தில் கொண்டவரும், 'ஆலகாலவிஷம்' என்ற கொடிய நஞ்சினை உண்டு, மரணமிலாப் பெருவாழ்வாய்த் திகழும் நீலகண்டனும், குற்றமில்லாத வீணையை மீட்டுவதில் வல்லவரும், களங்கமில்லா பிறைச் சந்திரனையும், புனித திருக்கரங்களையும் தனது ஜடாமுடி என்கிற திருமுடியில் தாங்கிக் கொண்டிருப்பவன் தான் பரமேஸ்வரன், அந்த மகேசன் சர்வேஸ்வரன். படைத்தல்,

காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்றும் ஐந்தொழில் களையும் நடத்தும் ஐயன் என் உள்ளத்தில் குடி கொண்டிருப்பதனால் ஞாயிறு (ஆதித்தயன்) திங்கள் (சோமன்) செவ்வாய் (மங்களகாரன்) புதன் (அறிவன்) வியாழன் (குரு) வெள்ளி (சுக்கிரன்) சனி (சனைஸ்வரன்) மனிதத்தலை, பாம்பு உடலாகிய ராகு, பாம்புதலை மனித உடலாகிய கேது இந்த நவகோள்களும், எனக்கு நன்மையே செய்யும், ஏனைய அடியார்களுக்கும் கூட அவ்வாறே நல்ல நல்ல என்கிறார்.

2

என்பொடு கொம்பொடாமை இவை மார்பிலங்க
எருதேறி ஏழையுடனே
பொன் பொதி மத்தமலை புனல்சூடி வந்து என்
உளமே புகுந்த அதனால்
ஒன்பதொடு ஒன்றோடு ஏழு பதினெட்டோடு ஆறும்
உடனாய நாள்கள் அவைதாம்
அன்பொடு நல்ல நல்ல அவை நல்ல நல்ல
அடியார் அவர்க்கு மிகவே

**உரை :** நாமெல்லாம் வேண்டிய பொருள்களை வாங்கி, விருப்பமாய் தமது மேனியில் அணிவோம். பரமன் எப்படியெனில் தள்ளப்பட்டதை கொள்ளும் குணமுடையோன். ஆகவே எலும்பு மாலை, யானைக் கொம்பு, ஆமை ஓடு இவைகளைக் கோர்த்து மாலையாகத் தரித்துக் கொண்ட தியாக வள்ளல் பரமேஸ்வரன் தரும விடைமேல் உமையொரு பாகனாய் ஊமத்த மாலையையும் குளிர்ந்த கச்சையும் சூடிக்கொண்டு குளிர்ச்சியாய் எனக்குள் காட்சியளிப்பதால்

*1. அஸ்வினி 2. பரணி 3. கார்த்திகை 4. ரோகிணி 5. மிருகசீரிடம் 6.* **திருவாதிரை** *(சம்பந்தர் ஜன்ம நட்சத்திரம்) 7. புனர்பூசம் 8. பூசம் 9.* **ஆயில்யம்** *10.* **மகம்** *11. பூரம் 12. உத்திரம் 13. அஸ்தம் 14. சித்திரை 15. சுவாதி 16.* **விசாகம்** *17. அனுஷம் 18.* **கேட்டை** *19. மூலம் 20. பூராடம் 21. உத்தராடம் 22. திருவோணம் 23. அவிட்டம் 24. சதயம் 25. பூரட்டாதி 26. உத்திரட்டாதி 27. ரேவதி*

இந்த இருபத்தேழு நட்சத்திரங்களில், ஆயில்யம், மகம், விசாகம், கேட்டை, திருவாதிரை இவையும் உடனாகிய நாளாம் பரணி, கார்த்திகை, பூரம், சித்திரை, சுவாதி, பூராடம், பூரட்டாதி

இத்தனை தீதுறு நட்சத்திரங்களில் வழிநடைப் போனார் மீளார், பாயினில் படுத்தார்தேரார் பாம்பின் வாய் தேரைதானே' - (பழம்பாடல்) இவைகள் இறைவனாம் சிவனென்னும் செம்பொருளால் நம்மை தீமை எக்காலத்தும் அணுகாது அன்பாய் நமக்கு நன்மை செய்யும் என்று தெளிவுறுத்துகிறார்.

3

உருவளர் பவளமேனி ஒளி நீறணிந்து
உமையோடும் வெள்ளை விடைமேல்
முருகு அலர் கொன்றைதிங்கள் முடிமேலணிந்து
என்உளமே புகுந்த அதனால்
திருமகள் கலைய தூர்தி செயமாது பூமி
திசை தெய்வமான பலவும்
அருநெறி நல்ல நல்ல அவை நல்ல நல்ல
அடியார் அவர்க்கு மிகவே

**உரை:** 'சிவசக்தி தத்துவம் காண கண்கோடி வேண்டும்' பவளம் போல் அழகு பொலியும் திருமேனியில் வெண்ணீறான (சுடலை சாம்பல்) பூசிய உமையொரு பாகன், தரும விடையாம் ரிஷப வாகனத்தில் காட்சி அளிக்கிறார். அதனால் அவரின் பரிபூரண திருவருளால், செல்வமகளாம் அலைமகள் கலை எனப் பதம்பிரித்து (கலைமகள்) கலை - மிருகம் (பொதுப்பெயர்) மலைமகள் (துர்கை) செயமாது (விஜயலட்சுமி) முப்பெரும் தேவியர் அருளும், இன்னும் பலவிதமான தேவதைகளின் அருளும் (செல்வமாய்) நமக்கு நெறிப்படுத்தி, நிதியாய் விளங்குவதால் பயம் இல்லை. 'இன்பமே எந்நாளும் துன்பமில்லை' என்று கூறி முடிக்கிறார்.

4

மதிநுதல் மங்கையோடு வடபால் இருந்து
மறை ஓதும் நங்கள் பரமன்
நதியொடு கொன்றைமாலை முடிமேலணிந்து
என்உளமே புகுந்த அதனால்
கொதிஉறு காலன் அங்கி, நமனோடு தூதர்
கொடு நோய்கள் ஆனபலவும்
அதிகுணம் நல்லநல்ல அவை நல்ல நல்ல
அடியார் அவர்க்கு மிகவே

**உரை:** நறுநுதல், ஒளிவீசும் நெற்றியில் உதிக்கின்ற செங்கதிர் உச்சித் திலகம் உணர்வுடையோர் மதிக்கின்ற மாணிக்கமாய்த் திகழும் மங்கை மலைமகள் உடனிருக்க, பரம்பொருளாகிய பரமன் கல்லாலில் புடை அமர்ந்து கற்பித்தான். ஓர் வசனம் எதற்கு? எல்லோரும் ஈடேறி வீடுபேறு பெறுவதற்காகவே அத்தகைய நல்லுள்ளம் கொண்ட நாயகன் தலைமேல் கங்கை, கொன்றை மாலை, எழில் தோற்றம் என் உள்ளம் ஈர்க்கிறது. இது உண்மை. சிவன் என் சிந்தையுள் நின்ற அதனாலே ஊழித் தீ வெப்பம், எமன், தூதர்கள், கொடிய நோய்கள் இவை அனைத்தும் ஒன்றுமே செய்யாது. இன்பமேதான் எந்நாளும் துன்பமில்லை என்று ஆணித்தரமாய், நெஞ்சில் குடிகொண்ட நீலகண்டன் திருவருள் மழையெனப் பொழியும் என்ற நம்பிக்கையில் நவகோள்கள் நன்மை செய்யும் என்று தெளிவுபடக் கூறுகிறார்.

**5**

நஞ்சு அணி கண்டன் எந்தை மடவாள் தனோடும்
விடையேறும் நங்கள் பரமன்
துஞ்சு இருள் வன்னி கொன்றை முடிமேலணிந்து
என் உளமே புகுந்த அதனால்
வெஞ்சின அவுணரோடு உரும்இடியும் மின்னும்
மிகையான பூதம் அவையும்
அஞ்சிடும் நல்லநல்ல அவை நல்ல நல்ல
அடியார் அவர்க்கு மிகவே.

உரை: நஞ்சால், கண்டம், நீலமாகி நீலகண்டனான என் தந்தை சிவபெருமான் உமை தன்னோடு தன் வாகனமாம் நந்தியின் மீது காட்சி அளிக்கிறார். இருள் நேரத்தில் கூட (வன்னி - தீ அனல் ஏந்திய பெருமான்) ஒளிவீசும் ஒரு மலர் வன்னி, அத்தகைய சிறப்பு பொருந்திய வன்னி, பொன்னிறக் கொன்றை சூடிய பிறைசூடி ஆடிய பெருமான், நடமாடிய பெருமான் என் உள்ளப் பெருங்கோயிலில் குடியிருப்பதால், **தீயதையே** எப்போதும் செய்யும் **ராக்கதர்கள்,** வான் உலகையே நடுங்கச் செய்யும் இடி, மின்னல், மேலும் தீய சக்திகளான பூதம், பேய், பைசாசம் இவைகள் கூட, சிவனடியார்களுக்கு ஒருபோதும் தீங்கு செய்யாது. நன்மையே செய்யும் என்று அறுதிட்டு உரைக்கிறார்.

6

வாள்வரிய தளதாடை வரி கோவணத்தர்
மடவாள் தனோடும் உடனாய்
நாகர் மலர்வன்னி கொன்றை நதி சூழவந்து என்
உளமே புகுந்த அதனால்
கோள்அரி உழுவையோடு, கொலையானை, கேழல்
கொடு நாகமோடு கரடி
ஆளரி நல்லநல்ல அவை நல்ல நல்ல
'அடியார் அவர்க்கு மிகவே

**உரை:** தாருகா வன முனிவர்களின் கர்வத்தையும் அடக்கி, பிச்க்ஷாடனராய் விளங்கிய பெருமான், இங்கே தரும் காட்சி என்ன தெரியுமா? புலித்தோல் ஆடை, துறவர் வணங்கும் புகழாண்டி கோவாண்டியாய் காட்சி அளித்து, அம்மை அப்பனாய், கொன்றை, வன்னியுடன் கங்கை நதி சூடிய அரன், முழுக்க நம்மை பரிபூரணமாய் காக்கும் பொறுப்பை ஏற்றுக் கொண்டு விட்டமையால் 'சிவாய நம' என்று சிந்தித்து இருப்பார்க்கு அபாயம் ஒருநாளும் இல்லை. இதுவே உபாயம் என்பது போல, சிங்கம், புலி, யானை, பாம்பு, கரடி, யாளி, காட்டுப்பன்றி இவைகளுக்கெல்லாம் **தெரிந்தவை** பிறரை அழித்தல் பணியே ஆகும். ஆனால் அது கூட சிவனடியார் களுக்கு பெருத்த நன்மையே செய்யும் என்பது **வெள்ளிடைமலை.**

7

செப்பிள முலைநன் நங்கை ஒருபாகமாக
விடையேறு செல்வன் அடைவார்
ஒப்பிளமதியும் அப்பும் முடிமேலணிந்து
என் உளமே புகுந்த அதனால்
வெப்பொடு குளிரும் வாதம் மிகையான பித்தும்
வினையான வந்து நலியா
அப்படி நல்ல நல்ல அவை நல்ல நல்ல
அடியார் அவர்க்கு மிகவே

**உரை:** அழகுக்கு ஒவ்வாத அபிராம வல்லியும் ரிஷபத்தில் காட்சி அளிக்கும்போது நம் கண்ணில் **தெரிவன** ஒப்பனை பொருள்போல பிறை. ஜடாமுடி இத்திருக்காட்சி ஒளிமயமாய் என் உள்ளத்தில் தெரிகிறது. ஆபத்து வருவது இயற்கையே.

ஆனால் அச்சமயத்தில், குளிர்ச்சி, வெப்பம், வாதம், பித்தும், சிலேஸ்மம் என்பன போன்ற என்றுமே தொடர்ந்து துயரைத் தரும். வியாதிகள் கூட என்னிடம் தலை தூக்காது, தலை காட்டாது என்கிறார். ஆளுடைபிள்ளை தமது திருப்பதிகத்தில் பழம்பாடல்

ஆற்றுநீர் வாதம் போக்கும்
அருவிநீர் பித்தம் போக்கும்
ஊற்றுநீர் சிலேஷ்மம் போக்கும்
சோற்றுநீர் எல்லாம் போக்கும்

உடலோடு ஒட்டிய பிணிகளும் உள்ளப் பிணிகளும் யாதும் செய்யா பொருத்தி உரை படித்து மகிழ்க. நம்புவோம் நமசிவாயத்தை.

8

வேள்பட விழிசெய்து அன்று விடை மேலிருந்து
மடவாள் தனோடும் உடனாய
வாள்மதி வன்னிகொன்றை மலர்சூடி வந்தென்
உளமே புகுந்த அதனால்
ஏழ்கடல் சூழ் இலங்கை அரையன் தனோடும்
இடரான வந்து நலியா
ஆழ்கடல் நல்ல நல்ல அவை நல்ல நல்ல
அடியார் அவர்க்கு மிகவே

**உரை:** "மாரன்தகனம். குமாரன் ஜெனனம் என்பர். மன்மதன் தகனம் இல்லையேல் குமாரன் முருகன் தோன்றவில்லையேல் சூரன் ஆட்சியே மாட்சிமையாய் நின்றே போயிருக்கும். அவ்வேளையில் கருவேளை தம் நெற்றிக் கண்ணால் காமனனார் காய்ந்தவன் கயிலையம் பெருமான் உமையுடன், எப்போதும் போல காட்சி கொடுப்பதால், கடலால் சூழப்பட்ட இலங்கை ஆண்ட இலங்கேஸ்வரன் கயிலை மலையையே தூக்கப்போன அதிசூரன். அதுபோன்ற பேராபத்தும், அதற்கு தொடரானதுபோல ஆழ்கடல் பொங்கினாலும், ஆழ்மனத்து உறையும் அண்ணல் எம் சிவனென்னும் செம்பொருளால், அனைத்தும் அழிந்துபோம். "அருள் அமுதம்" அதிவிரைவில், கிடைக்கும் என்கிறார்.

9

பல பல வேடமாடும் பரன்நாரி பாகன்
பசுவேறும் எங்கள் பரமன்
சலமகளோடு எருக்கும் முடிமேலணிந்து என்
உளமே புகுந்த அதனால்
மலர்மிசையோனும் மாலும் மறையோடு தேவர்
வருகாலமான பலவும்
அலைகடல் மேரு நல்ல அவை நல்ல நல்ல
அடியார் அவர்க்கு மிகவே

**உரை:** மனத்தகத்தான், தலைமேலான், வாயிலுள்ளான், புனத்தகத்தான், பொருப்பிடையான் கயிலாயத்தான் சிவன், தமது அடியார்களை பரிபூரணமாய்க் காட்சி கொடுத்து அட்கொண்டவன் எங்கள் பரமன். எருக்க மாலையை விருப்பமாக அணிந்தவன். படிப்பால், பணத்தால் இறைவனை அறிய, அடைய முடியாது என்பதே 'அடிமுடி காணாக்கதை'. ஆனால் இப்பாடலில் யுகந்தோன்றும் தோன்றி மறையும் பிரமன், திருமால், வேதம், தேவர்கள், கடல், மலை இவைகளால் கூட எனக்கும், எம் அடியார்களுக்கும் ஊறு விளைவிக்காது. **ஊழிமுதல்வன்** சிவன் மீது நம்பிக்கையில் பக்தியில் ஊறித் திளைத்த சம்பந்தர் மொழிகிறார்.

10

கொத்து அலர் குழலியோடு விசயற்கு நல்கு
குணமாய வேட விகிர்தன்
மத்தமும் மதியும் நாகம் முடிமேலணிந்து
என் உளமே புகுந்த அதனால்
புத்தரொடு அமணை வாதில் அழிவிக்கும் அண்ணல்
திருநீறு செம்மை திடமே
அத்தகு நல்ல நல்ல அவை நல்ல நல்ல
அடியார் அவர்க்கு மிகவே.

**உரை:** நம்மை வாழ்விப்பவன் இறைவன். நம்மை மேலோங்கச் செய்பவை அறிவு. அறிவு மேம்பட நூல்கள். அதிலும் புராண இதிகாசமானவை மகாபாரதம் இராமாயணம். ஒருகாலத்தில் விசயன் (அருச்சுனன்) சிவனோடு சண்டையிட்டு, பின் கடுந்தவமிருந்து 'பாசுபதம்' எனும் அஸ்திரம் பெற்றான். பரமன் காட்சியளித்து தொழுவார்க்கு இரங்கி இருந்து அருள்

செய் பெரும் பற்றப் புலியூரான் காட்டு ஊமத்தை, தழை, இலை, பிறைச்சந்திரன், பாம்பு இவை அனைத்தையும், தமது திருமுடியில் சூடிக்கொள்கிறார். ஒரு காலத்தில் புத்த சமயவர்திகளையும், சமணர்களையும் வாதிடச் செய்ய எனக்கு அருமருந்தாய் இருந்தது திருநீறு. அந்த திருநீறு வேதத்தில் உள்ளது, வெம்துயர் தீர்ப்பது. போகம் தருவது, புண்ணியமாவது. அத்தகு வானவர் மேலது திருநீறு எனக்கும், எம் அடியார்க்கும் நன்மையே தரும். அதுவே மெய்க்காப்பாளராய் பாதுகாக்கும் என்கிறார் ஒருகதை உண்டு.

மேன்மைகொள் சைவநீதி விளங்குக உலகமெல்லாம் என்கிறோம். சிவனே ஒரு காலத்தில் தீயசெயலுக்கு துணை நின்றதற்காக **'துஷாக்னி'** எரியூட்டி, அதிலிருந்து புனித மேனியாய் வந்தார். புராணம் கூறும் அறிய தகவல் ஆழ்ந்து கருத்து உணர்க.

**11**

தேனமர் பொழில்கொள் ஆலைவிளைசெந்நெல்துன்னி
வளர்செம்பொன் எங்கும்நிகழ
நான்முகன் ஆதியாய பிரமாபுரத்து
மறைஞான ஞானமுனிவன்
தானுறு கோளும் நாளும் அடியாரை வந்து
நலியா தவண்ணம் உரைசெய்
ஆனசொன் மாலைஓதும் அடியார்கள்வானில்
அரசாள்வர் ஆணை நமதே.

**உரை:** பன்னிரெண்டு திருப்பெயர்களைத் தாங்கிய திருத்தலம் **'சீர்காழி'** அதுவே பிரம்மபுரம். நான்முகனை தலைவனாகக் கொண்டு உருவாக்கிய நகரம். அந்த ஊரில் ஞானப்பால் உண்டு ஞானச்சொல்லால், ஞான மழை பொழிந்த ஞானசம்பந்தன் இப்பத்துப்பாடல்களையும், எவரொருவர் மனனம் செய்து, ஓதுகிறார்களோ, அவர்கள் முக்தி என்ற வீடுபேறு, பின் கயிலாயக் காட்சி, திருக்கயிலாய செல்வர் பட்டம், இராஜயோகம் இவைகள் நிச்சயம் கிடைக்கும். இது ஆணை (சத்தியம்) என்று சொல்லி இனிதே இறை நம்பிக்கை விதை தூவி முடிக்கிறார், திருஞானசம்பந்தப்பெருமான்.

காதலாகி, கசிந்து கண்ணீர் மல்கி ஓதவேண்டிய உண்மைத் திருமந்திரம். 'நமசிவாய" எனும் நல்மந்திரம். நாமும் நாதன் நாமம். நாமணக்கப் பாடுவோம். பதினாறு வயதில் சம்பந்தர்

ஞான முனிவனாகி, 'கூண்டோடு கைலாசம்' என்ற இன்றைய பழமொழிக்கு வித்திட்டு எல்லோரையும் சிவஜோதியில் இரண்டறக் கலக்கச் செய்த வள்ளல். எனவே நாமும் பிற்காலத்தில் வள்ளற் பெருமான் கூட ஞானசம்பந்தர், பக்தி, பாடல் இவைகளுக்காகவே மனமுருகினார். நாமும் உள்ளம் உருக, அகம் குளிர 'பூதங்கள் தோறும் நின்றிடும் சிவனென்னும் செம்பொருளை, மண்ணில் நல்ல வண்ணம் வாழ என்றும் செம்மாந்த மொழியாம் தமிழ்மறையினை ஓதுவோம் திருவருள் மழையென பொழிய அருள்தனைப் பெறுவோமாக.

பூழியர்கோன் வெப்பொழித்த
புகலியர்கோன் கழல் போற்றி.

| நவக்கிரகங்கள் | நவக்கிரகங்களுக்கு உரிய வஸ்திரங்கள் | நவக்கிரகங்களுக்கு உரிய தானியங்கள் | நவக்கிரகங்களுக்கு உரிய கற்கள் |
|---|---|---|---|
| சூரியன் | சிகப்பு | கோதுமை | மாணிக்கம் (இதன் நிறம் சிகப்பு) |
| சந்திரன் | வெள்ளை | நெல் / அரிசி | முத்து (இதன் நிறம் வெண்மை) |
| செவ்வாய் | சிகப்பு | துவரை | பவழம் (இதன் நிறம் ப்ரவுன், சிகப்பு) |
| புதன் | பச்சை | பயறு | மரகதம் இதன் நிறம் பச்சை |
| குரு | பொன்நிறம், மஞ்சள் | கொண்டக் கடலை | கனகபுஷ்பராகம் (வெண்மை) புஷ்பராகம் (மஞ்சள் நிறமுடையது) |
| சுக்ரன் | வெள்ளை | மொச்சக்கடலை | வைரம் (இது நிறமற்றது) |
| சனி | கருப்பு | எள்ளு | நீலம் |
| ராகு | நீலம் | உளுந்து | கோமேதகம் (இத தேன்நிறம்) |
| கேது | சித்ரவர்ணம் பல கலர் | வைடூரியம் | இதன் நிறம் பழுப்பு |

சனி பகவானுக்குரிய எள்ளும் / நல்லெண்ணெயும் கருப்புத்துணியில் எள்ளை கட்டி எண்ணெய் ஊற்றி ஏற்றவேண்டும். கருப்புத்துணி இவ்வுலகைக் குறிக்கும். அதனுள் வைக்கப்படும் எள் நாம் செய்யும் உதிரியான பாவங்களைக் குறிக்கும். உலகம் 'மாயை' என்றும் இருட்டில் சிக்கி இருப்பதையும் கருப்புத்துணி காட்டுகிறது. இந்த 'மாயை'யை அகற்றி பாவத்தை நீக்கி அக்னியில் பாவமாகிய எள் பொட்டலத்தை இட்டு எரிக்கிறோம். இதன் மூலம் நமது பாவங்கள் நீங்குகிறது.

தகவல் : தினமலர் 20-9-03

## "நல்வழி காட்டும் நற்செயல்கள்"
## நலமருளும் நாம சங்கீர்த்தனம் (உஞ்சவிருத்தி)

'பக்தி பண்ணிக் கொண்டிருந்தால் முக்தி பெறலாமே' அருளாளர் தம் அமுதமொழி பக்தி ஒன்பது வகைப்படும். கீர்த்தனம் (பாடுதல்) சிரவணம் (கேட்டல்) ஸ்மரணம் (நினைவு கூர்தல்) பாதஸேவனம் (பாதமலர்களைவழிபடுதல்) அர்ச்சனம் (பிரார்த்தனை வழிபாடு) வந்தனம் (விழுந்து வணங்குதல்) தாஸ்யம் (பணிபுரிதல்) சிநேகம் (அன்பு காட்டுதல்) ஆத்ம நிவேதனம் முழுமையான சரணாகதி) இவை அனைத்தையும் இறைவனிடத்தில் சேர்ப்பித்து உலகில் உயர்ந்தவர்களே சாதுக்கள். சாதுக்கள் மூன்று வகையான. நியதிகளைக் கடைப்பிடித்து வாழ்ந்ததற்கான வரலாறு உண்டு. அதாவது 1) உஞ்ச விருத்தி (சேகரிக்கும் முறை) தாம் இப்பூவுலகில் வாழ சில வரை முறையினை வகுத்துக் கொண்டனர். அறுவடை முடிந்த நிலத்தில், குனிந்தவாறே இறைநாமத்தை உச்சரித்துக் கொண்டே தம் கையிலுள்ள நகக்கண் மூலம் நெல்மணிகளைச் சேகரித்து அதனை உண்டே, இறையினைத் தொழுது ஆடிப்பாடிக் களித்தனர் - வாழ்ந்தனர்.

**2) கபோத விருத்தி (புறா வாழ்க்கை)**

இயமம் (ஏற்படுத்துதல்) நியமம் (விதிக்கப்பட்டது) இவைகளைப் போற்றி இறைவன் நம்மைக் காப்பான் என்ற, பூரண நம்பிக்கையில் வாழ்ந்தவர்கள் சாதுக்கள்.

நாளை வாழ்விற்கென சேர்த்து வைக்காத குணம் புறாவிற்கு உண்டு.

கிடைத்ததை உண்டு மகிழும். அதைப்போலவே சாதுக்களும் யாசகம் கேட்டு உயிர் வாழாது. இறை வாசகத்தையே நம்பி வாழ்ந்த கிடைத்த உணவைக் கொண்டே மகிழ்ந்த உத்தமர்களும் அவர்களே.

### 3) அஜகர விருத்தி (மலைப் பாம்பு வாழ்க்கை)

பிரம்ம வித்துக்களாய் விளங்கிய சாதுக்கள், தம் வாழ்நாளில் மலைப்பாம்பினைப் போல் வாழ்ந்தனர். மலைப் பாம்பானது இரை கிடைத்தபோது பூரணமாய் உண்டு விட்டு, கிடைக்காதபோது பல மாதங்கள் கூட பட்டினியாய் இருக்குமாம். அதுபோன்றே, இறை நாமாவளியை ஜெபம் செய்து, அவரின் குண கீர்த்தனத்தை சங்கீர்த்தமாய் பாடிப் பரவி கிடைத்தால் உண்டு கிடைக்கவில்லையேல் இதுவே இறையருள் என வாழ்ந்த பெரியோர்கள் வழி காட்டலே திரிவிருத்தி (மூன்று வகை நியதிகள் என்று போற்றப்பெறும்.)

கருணை மிகுந்த இதயம் இறைவனின் ஆலயம் என்பார் சத்யசாயி. இறையருள் பெற காதலாகிக் கசிந்துருவது தியானம் செய்வது, தானம் கொடுப்பது என பல்வேறு படி நிலைகள் உண்டு. இறைவனுக்கு அருகில் கொண்டு செல்லும் செயல்கள் எதுவோ அதுவே பரோபகாரம் (பரோ - (உயர்ந்தது) உப - (இறை - அருகில்) கார - செயல். மனிதன் செயலால் உயர்ந்து இறைவன் அருகில் இருந்து மகிழ்ச்சியடைகிறான். நீதி தவறாத நெறியான ஆன்மிக வாழ்க்கைக்கு அடிப்படை கருணை. நற்செயலுக்கு பெருந்துணையாய் நிற்றல் நொய்யிற்பிள அளவேனும் கொடுத்து உதவுதல் பெரும்புண்ணியப் பயனாகும்.

இறை நெறியைப் பரப்பப் பலவழிகள் இருந்தும் இசையை பெரும்துணையாகக் கொண்டு இறைவனை நாடி வீதியில் பாடிப் புறப்பட்ட புனிதப் பயணமே. இக்காலத்தில் உஞ்ச விருத்தி எனப்படுவதாகும்.

இறைவன் நாமாக்களை பாடிப் பரவிச் செல்லும் போது, ஆண்டவனைவிட அடியார்கள் மேன்மையே சாலச் சிறந்தது என உணர்ந்த ஆன்றோர்கள் இறைநாமத்தை உச்சரிக்கும் பக்தி சிரோன்மணிகளுக்கு அமுது அளித்தல் புனிதவாயால் நல்லாசி பெறுதல் அதனால் நமது வாழ்விலும் நன்மைகள் பல பெருகும். அதிசயத்தையும் கண்டும் கேட்டும் மகிழ்ந்தனர்.

உஞ்ச விருத்தி என்பது எளிய வழியில் இறையருள் பெற ஏற்றதொரு நல்வழியாகும். பகவான் நாமாக்களைச் சொல்லுதல், பகவானின் தொண்டுக்கு பொன்னும் பொருளும் கொடுத்து உதவுதல் இறைபணியில் தம்மை ஈடுபடுத்திக் கொள்ளுதல், நற்செயல்கள் நாளும் நடைபெற நம்மாலான நல்லுதவி புரிதல் இவையனைத்துமாகும்.

திருவெம்பாவையில் மாணிக்கவாசகர் கூறும்போது "நம் இல்லங்கள்தோறும் **எழுந்தருளி''** என்கிறாரே. அதுவே பிற்காலத்தில் உஞ்ச விருத்தியாய் நம் இல்லங்கள் தோறும் இறைவன் வரும் விழாவாய் அடியவர் மூலமாய் இல்லம் வரும் இன்பவிழாவாய் அன்பு விழாவாய் அருள்மழையெனப் பொழியும் அருள் நன்னாளாய் மலர்வதே உஞ்சவிருத்தித் **திருநாளாகும். நாம யக்ஞம்** என்பதே உஞ்ச விருத்தி உன்னதச் செயலாகும். துன்பமின்றி இன்பமாய் இவ்வுலகில் வாழ பல்வேறு வழி நிலைகளிலும் மேலோங்கிச் சிறந்து விளங்கும் எளிய முறையாம். உஞ்ச விருத்தி எனும் புனிதப் பயணத்தால் மாதம்தோறும் கிடைக்கும் பொருளைக் கொண்டே மடிப்பாக்கம் அருள்தரும் ஸ்ரீசுந்தர விநாயகப் பெருமான் திருக்கோயில் வேதஸ்ரேணி அதாவது வேளச்சேரி விஜயநகரில் அருள்பாலிக்கும் சிவவிஷ்ணு ஆலயத்திலும் நித்ய பூஜை நடைபெற்றுக் கொண்டிருக்கிறது.

தன்னலமறந்து பஜனையின் பேரின்பத்தில் திளைத்த ஸ்ரீ சைதன்ய மகாப்பிரபு முதல் எளிமையாய் கீர்த்தனைகள் பாடி ஆறுகோடி ராம நாம ஜெபத்தால் இராமரை நேரில் கண்ட தியாகையர் வரை அனைவருக்கும் இறையருள் கிடைத்தது நாம சங்கீர்த்தன மகிமையாகும். மீராபாய் இந்தி பஜனை சங்கீதங்களும், ஜெயதேவரின் அஷ்ட பதியும், "சங்கீத பிதாமகர்" புரந்தரதாசரின் கன்னடக் கிருதிகளும் இவைகளுக் கெல்லாம் காலத்தால் முந்தையதும், பக்திச் சுவை நனி சொட்டச் சொட்ட பாடிய நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பிய திருஞானசம்பந்தர் திருநெறிப் தமிழ்ப் பதிகங்களும். தமிழோடு இசைப்பாடல் மறந்தறியேன் என்ற திருநாவுக்கரசரின் தீந்தமிழும், ஏழிசையாய் இசைப் பயனாய் இன்னமுதாய் என்று திருவாய் மலர்ந்தருளிய சுந்தரத்தமிழ் ஆலால சுந்தரரும், தொல்லை அறும்பிறவி சூழும் தளை நீக்கி அல்லல் அறுத்து

ஆனந்த வாழ்வு காட்டிய மணிவாசகப் பெருமானின் மணித் தமிழும் வேதம் தமிழ் செய்த மாறன் நம்மாழ்வார் நற்றமிழும் சூடிக்கொடுத்த சுடர்க்கொடியாம் ஆண்டாளால் பாடிக் கொடுத்த பைந்தமிழும் காலந்தோறும் தோன்றும் பக்திப் பாமாலையில் இறைவன் அமர்ந்து இசைக்கும் இன்னிசை கீதங்களும், இன்மொழி மதங்களைக் கடந்து பக்தி மதத்திற்கு நம்மை அழைத்துச் செல்லும் பாலங்களாய் அமைந்துள்ளன. நாடு முழுவதும் பகவான் நாமமே நகர சங்கீர்த்தனமாய் ஒலிக்கவேண்டும் என்பதே (சத்யசாயிபாபாவின்) பெருவிருப்பம்.

ஆகவே ஆன்மிக அருளாளர்களும் ஆன்றவிந்தடங்கிய அறநெறிச் சான்றோர்களும் **"நவபக்தியால்"** நம்மால் ஈடுபடமுடியவில்லையெனினும் **நம் பக்தியாய்** உஞ்ச விருத்தி எனும் மோட்சத் திறவுகோலாம். இறைவன் பதமலருக்கு இன்பமாய் நம்மை ஈடுபடுத்திக் கொள்வோம். இறைவன் அளித்த ஈடிலா செல்வத்தினை இன்முகத்துடன் அளிப்போம். ஒரு துன்பமில்லா வாழ்வும் அருள் தும்பிக்கையான் மலரடி போற்றி. நம்பிக்கையோடு நாமும் உய்வோம். உயர்வோம். இன்னமுத இறையருளைப் பெறுவோமாக. உஞ்ச விருத்தியின் பதினாறு பேருக்கும் பாரினில் கிட்டும். இது நிதரிசனமான உண்மை.

## உஞ்சவிருத்தியின் பயன் பாடல்

உஞ்ச விருத்திக்கு உவகையாய்த் தந்தார்க்கு
நெஞ்சம் இனிக்கும் எழிலிறைவன் - தஞ்சம்
அடியார் துயர் நீக்கி வாழ்வில் மழையாய்க்
கடிதே பொழியருள் காண். (கவிஞர். சி. அறிவாழி)

தொகுப்பு : இறைபணிச் செம்மல் சி. வித்யாசாகர் திருக்கோயில் புலவர்.
தகவல் : மடிப்பாக்கம் ஸ்ரீ சுந்தர விநாயகர் ஆலய வெளியீடு

# நசிகேதன்

நசிகேதன் ஒரு தைரியமுள்ள சிறுவன். மிகவும் இளவயதிலேயே இவன் அறிவைத் தேடினான். உடலிலிருந்து உயிரை எடுத்துச் செல்லும் யமனையே தனக்கு ஞானத்தைப் போதிக்குமாறு இவன் வேண்டினான். அவனையும் சம்மதிக்க வைத்தான். அவனுடைய தந்தை ஒரு நாள் பொறுமை இழந்து அவனிடம் "யமனுக்கு நான் உன்னை அளித்துவிட்டேன்" என்று சொன்னார். அவரது கோபத்தில் வந்த இந்தச் சொல் அவனுக்கு ஒரு வாரமாக மாறியது. அதனால் இவன் கூற்றுவனைச் சந்தித்தான். தன்னுடைய அடக்கத்தால் அவன் அன்பைப் பெற்று அவனிடம் ஆன்மிக வாழ்க்கையின் இரகசியங்களைக் கற்றான். அவனே ஓர் உண்மையான துறவி; அறிவுப் பாதையில் மற்றவர்களுக்குக் கலங்கரை விளக்கம்; உத்தாலகர் எனப்படும் வாஜசிரவஸரின் புதல்வன்.

அவனொரு இளம் சிறுவன். ஆகவே இயல்பாகவே அவன் கற்க வேண்டியது நிறைய இருந்தது.

ஆனால் அவனைச் சுற்றயிருந்த முனிவர்கள் அவனை மிகவும் புகழ்ந்து கொண்டிருந்தார்கள். இப்படிப் பட்ட ஒரு மகனைப் பெற்றதற்காக அவனுடைய தந்தையை வாழ்த்திக் கொண்டிருந்தார்கள்.

கூற்றுவனான எமனிடம் இருந்து அறிவின் இரகசியங் களை மட்டுமா அச்சிறுவன் கற்றான்? அவற்றோடு அவனது முழு ஆசிகளையும் பெற்றான். எப்படி? நாம் படிக்கப் போகும் நசிகேதனின் கதை அதுவே.

உண்மையில் இந்த உலகில் அறிவு மட்டுமே அழியாத செல்வம். யார் இந்தச் செல்வத்தைப் பெற்று மற்றவர் களுக்கும் பகிர்ந்தளிக்கிறார்களோ அவர்கள் தாம் உண்மையான பெரிய மனிதர்கள். நசிகேதன் இளம்வயதிலேயே அந்த உண்மையறிவைப் பெற்றான். அந்த அறிவு எல்லாரிடையேயும் பரவுவதற்கும் அவன் உதவினான். இதனால் அவன் வயதில் சிறுவனாயிருந்தாலும் முற்றிய ஒரு முனிவனாகக் கருதப் பட்டான்.

**உத்தாலகர் – வாஜசிரவஸர்**

பொதுவாக முனிவர்களே புனிதமான வாழ்க்கை நடத்துபவர்கள். வாழ்க்கையில் அவர்களுடைய குறிக்கோள்

மனிதகுலத்தின் நன்மைக்குப் பாடுபடுவதுதான் வேதத்தில் உள்ள, புனித மந்திரங்களை ஓதுவது. அவற்றை மாணவர்களுக்குப் போதிப்பது. தவம் செய்வது, யாகங்கள் செய்வது ஆகிய செயல்களே இம்முனிவர்களின் அன்றாட வாழ்க்கை முறையாகும். அவர்களுடைய இருப்பிடங்கள் காடுகளின் நடுவே அமைந்திருந்தன. அந்த இடம் தபோவனம் என்று அழைக்கப்பட்டது. அங்கு முனிவர்கள் தங்குமிடம் ஆசிரமம் என்று அழைக்கப்பட்டது. அப்படிப்பட்ட ஓர் ஆசிரமத்தில் உத்தாலகர் என்னும் பெயருடைய முனிவர் விசுவவரதேவி என்னும் பெயர் கொண்ட தம் மனைவியோடு வாழ்ந்தார்.

உத்தாலகர் மிகவும் கற்றறிந்த முனிவர்; பல யாகங்களைச் செய்து அதனால் மிகவும் புகழ் படைத்து அதனால் உள்ளம் மகிழ்வது அவர் இயல்பு. அவர் குடும்பமே கொடை வள்ளல்களின் குடும்பமாகும். அவருடைய தந்தையும், பாட்டனாரும் 'பரந்த உள்ளம் கொண்டவர்கள்' என்று புகழ் பெற்றிருந்தார்கள்.

மக்கள் உத்தாலகரை வாஜசிரவஸர் என்று அழைத்துப் பெருமை செய்வது வழக்கம். காரணம் அவர் பல வேள்விகள் செய்து பலருக்கு வயிறார உணவளித்து மகிழ்ந்தது தான். ஆனால் வாஜசிரவஸரிடம் ஒரு குறை இருந்தது. பெருங்கோபக்காரர் அவர். அவருடைய கோபத்தால் விளையும் அழிவு தீயினும் கொடியதாயிருந்தது. அவர் கோபம் கொண்டிருக்கும் போது அவர் முன் நிற்க யாருக்குமே தைரியம் வராது. ஒரு சொல் கூட யாராலும் பேசவும் முடியாது. ஆனால் அவர் பொல்லாதவர் இல்லை. அவர் 'அமைதியாகச் சாதாரண நிலையில் இருக்கும் போது அவரை நற்குணத்தில் யாரும் விஞ்சமுடியாது.

அவருடைய மனைவி விசுவவரதேவி இவருக்கு நேர் எதிரான குணமுடையவள்; அமைதியே வடிவானவள்; பொறுமையின் உரு அவள். அவள், தன் வீட்டு வேலைகளில் தூய்மையாகவும் கவனமாகவும் இருப்பாள். யாகச் செயல்களில் தம் கணவருக்குப் பலவாறு உதவிகள் செய்வாள். பொதுவாக அவள் கணவருக்குத் தன்னையே அர்ப்பணித்த ஒப்பிலாத ஒரு மனைவி. தன் கணவரைக் கடவுளின் அவதாரமென்றே கருதினாள் அவள்.

**யாகத்தின் பயன் !**

ஆனால் வாஜசிரவஸர் - விசுவவரதேவிக்குக் குழந்தை இல்லை. தான் ஒரு குழந்தையின் தாய் என்று ஆகவேண்டும் என ஏங்கிக் கொண்டிருந்தாள். அதனால் 'கடவுளே! எங்களுடைய குடும்பத்தின் பெருமையைக் காக்கும் ஒரு மகனைக் கொடுத்தருள்' என்பதே அவளுடைய தினசரி வழிபாட்டில் செய்யப்படும் பிரார்தனையாயிற்று. வாஜசிரவஸர் வழக்கமாக அவளுக்கு. "அன்பே, கவலைப் படாதே! அதற்கென ஒரு யாகத்தை நிறைவேற்றித் தேவர்களை மகிழ்விப்பேன். அதனால் அவர்கள் நமக்கு ஒரு மகனை அளித்து ஆசீர்வதிப்பார்கள்" என்று ஆறுதல் சொல்வார்.

ஒரு நாள் அந்த யாகம் நிறைவேற்றப்பட்டது. விசுவவரதேவி கருவுற்றாள். ஒரு நல்ல நாளில் அவளுக்கு ஆண்மகவொன்று அழகொளியொடு பிறந்தது. அவளுடைய மகிழ்ச்சிக்கு எல்லையேயில்லை. முனிவர் வாஜசிரவஸரும் மிகவும் மகிழ்ந்தார். தெய்வத்தின் அருளை எண்ணித் துதித்தார்.

குழந்தை வளர்ந்தது. நல்ல நாளில் அதற்கு 'நசிகேதன்' என்று பெயரிடப்பட்டது. அந்தக் குழந்தை பொங்கிய அழகொடு விளங்கியது. தங்க நிறமேனி, ஒளிவீசும் கண்கள்; எடுப்பான மூக்கு; மிருதுவான கன்னங்கள்; நெற்றியில் திலகம்; உதடுகளில் அழகான புன்சிரிப்பு. யார்தான் அது போன்ற ஒரு குழந்தையைத் தூக்கிக் கொஞ்சிச் சீராட்ட விரும்பமாட்டார்கள்?

**குழந்தையின் திறன்**

நசிகேதன் வளர்ந்து தத்தித்தத்தித் தளர்நடை நடந்தான்; மழலை பேசவும் ஆரம்பித்தான். தன்னுடைய தந்தையின் யாக மண்டபத்திற்கு வரப்போக ஆசைப் பட்டான். ஆனால் 'அவன் தந்தையின் அருகில் செல்லப் பயந்தான். முனிவர்கள் ஓதும் மந்திரங்களை ஒரு குறிப்பிட்ட தூரத்தில் இருந்து கவனிப்பது அவனுடைய வழக்கம். தன் தாய் தினந்தோறும் கடவுள் முன் மவுனமாகச் சொல்லும் தோத்திரத் தொடர்களைச் சொல்லித் தரும்படி வேண்டுவது அவனது அன்றாடச் செயல் தன் தாய் எந்தத் தோத்திரங்களை எல்லாம் மெல்லிய ஒலியில் சொல்லுகிறாளோ அதைக் காதால் கேட்ட மாத்திரத்திலேயே அந்த வரிகளை இவன் மனத்தில் பதித்துக் கொண்டுவிடுவான். நசிகேதன் மிகவும் புத்திசாலி. அவனுடைய மனை சக்தி

மிகவும் வியப்பைத் தருவதாயிருந்தது. எதையும் ஒரு தடவை கேட்டாலேயே அது அவனுக்குப் போதுமானது. கேட்ட மறுகணமே அதைத் திருப்பிச் சொல்ல அவனால் முடிந்தது.

நசிகேதன் இளம் பருவத்தில்:

நசிகேதனிடம் குறும்பு. பிடிவாதம் முதலியன இல்லை. அவன் காலையில் சீக்கிரமே துயில் எழுவான். அவனுக்கு நாளின் முதல் கடமை தன் தாய்க்கு வேண்டிய மலர்களைப் பறித்து வருவது. தினக்குளியல் முடித்த பிறகு தோத்திரங்கள் சொல்லிக் கடவுளுக்கு வணக்கம் செலுத்துவது அவனது வழக்கம். பிறகு தன் தாயோடு பசுத்தொழுவத்திற்குச் செல்வான். அங்கே தன் தாய் பசுக்களைப் போற்றி வணங்குவதைக் காண்பான். அவளொடு தானும் வணங்குவான். அதன் பிறகே காலையில் பால் அருந்துவான்.

வாஜசிரவஸர் பெரும் எண்ணிக்கையிலான பசுக்களை வைத்திருந்தார். அரசர்களைச் சென்று பார்த்து வரும்போதும், அவர்களின் யாகச் சடங்குகளுக்கு உதவும்போதும் பசுக்களைத் தானமாகப் பெற்று வந்தார். நாணய வடிவமான பணம் அக் காலத்தில் அதிகப் புழக்கத்தில் இல்லை. பசுக்களே செல்வமாகக் கருதப்பட்டது. அவற்றைக் 'கோதனம்' என்பர். அதிகப் பசுக்களை வைத்திருக்கும் ஒருவரே செல்வந்தராகக் கருதப்பட்டார்.

ஒரு நாள் நசிகேதனுடைய தாய் பசுத்தொழுவத்தில் வழக்கமான வழிபாட்டின் ஈடுபட்டிருந்தாள். அப்போது அங்கே இருந்த சிறுவன் நசிகேதன். "தாயே! நாம் ஏன் பசுக்களை வணங்க வேண்டும்?" என்று கேட்டான். அதற்கு அவள், "மகனே! அவை நம் தாய் போன்ற நிலையில் இருப்பதே காரணம். நமக்காக அவை பால் தருகின்றன. அதனாலேயே நாம் அவற்றைக் 'கோமாதா' என்றே அழைக்கின்றோம்' என்றாள்.

"அது சரி, ஆனால் அவை நமக்குப் பால் கொடுப்பதனாலேயே மட்டும் வணங்குகிறோமா? வேறு காரணம் ஏதேனும் உண்டா?" என்று கேட்டான் நசிகேதன்.

"வேறு காரணமும் இருக்கிறது. அதன் உடலில் எல்லாத் தெய்வங்களும் இருப்பதாலே சொல்லப்படுகிறது. அதனால் அதைச் சுற்றிப் பிரதட்சிணம் வந்தாலே எல்லாத் தெய்வங்களையும் வணங்கியதாக அமையும். மேலும் அது ஒரு புனித தலயாத்திரை சென்று வந்த பயனையும் தருவதாகும்.

இதனால் நாம் நிறையப் 'புண்ணியத்தைப்' பெறுகிறோம்." என்றாள் நசிகேதனின் தாயார்.

தாய் சொன்ன விஷயங்களை அவனால் புரிந்து கொள்ள முடியவில்லை. எல்லாமே அவனுக்குப் புதிராகத் தோன்றியது. தலயாத்திரை. புண்ணியம் என்பதெல்லாம் அவனுக்கு விளங்கவில்லை. உடனே அவன் "அம்மா புண்ணியம் என்றால் என்ன?" என்று கேட்டான்.

"நசிகேதா! புண்ணியம் என்பது சொர்க்கத்திற்கு நம்மை ஏற்றிவிடும் ஒரு படிக்கட்டுப் போலாகும். சொர்க்கம் என்பது கடவுளர் வாழுமிடம். அங்கே போனால் ஒருவர் தன் எல்லா விருப்பங்களையும் நிறைவேற்றிக் கொள்ள முடியும்" என்றாள் தாய்.

உடனே அவனுடைய மனம் அவன் நண்பனான சோமனைப் பற்றி எண்ணியது. சோமனும் ஒரு முனிவருடைய மகனே. சோமன் மிகவும் ஏழை. அவன் குடிசையில் எந்தப் பொருளுமே இல்லை. அவ்வளவு ஏழை அவன்.

"அம்மா, ஏழை சோமனுடைய வீட்டில் ஒரு பசு கூட இல்லை. நம்மிடமுள்ள பசுக்களுள் கிழப்பசு ஒன்றையேனும் அவனுக்குக் கொடுக்கலாமா? அவனும் பண்ணியம் பெற்றுச் சொர்க்கத்தை அடையட்டுமே!" என்றான் நசிகேதன்.

"நசிகேதா! கிழட்டுப் பசுவைத் தானமாகக் கொடுப்பது பாவம். கிழப்பசு பால் தராது; பயனற்றது. அதைக் கொடுத்தால் அந்தப் பாவத்திற்காக நாம் நரகத்திற்குத்தான் போக வேண்டி வரும்" என்றாள் தாய்.

"நரகம் என்றால்?"

"மனிதர் செய்த பாவத்துக்குத் தண்டனையாக அளவிலாத துன்பத்துக்கு ஆளாக வேண்டிய இடம் அது."

"அப்படியானால் நம்முடைய விருப்பங்களை நரகத்தில் பெற முடியாதா?"

"பாவம் செய்தவனுடைய விருப்பங்கள் எங்குமே நிறைவேறமாட்டா. பாவம் செய்த மக்களை எமன் தண்டிப்பான். இவற்றையெல்லாம் மேலும் நீ தெரிந்து கொள்ள விரும்பினால் நிறையப் படிக்க வேண்டும்."

"அம்மா! இந்த விஷயத்தில் தெளிவு பெற இப்பொழுது முதலே முயற்சி செய்கிறேன்" என்றான் நசிகேதன். சொன்ன வண்ணமே புண்ணியம் பாவம், சொர்க்கம் நரகம் போன்றவை

பற்றிய அறிவைப் பெறுவதற்கும் பலவாறு பாடுபடத் தொடங்கினான் நசிகேதன்.

## 'ஆத்மஞானமே எனக்கு வேண்டும்'

வாஜசிரவஸர் ஆத்மஞானம் பற்றிய விஷயங்களைத் தன் மகனுக்குப் போதிக்க ஆரம்பித்தார். தந்தையார் கூறுவதை அப்படியே ஏற்றுத் தன் அறிவில் அவன் அவற்றைப் பதிய வைத்துக் கொண்டான். விஷயங்களைப் புரிந்து கொள்வதில் அவனுக்கிருந்த சக்திவயக்கத் தக்கதாய் அமைந்திருந்தது.

ஒரு நாள் ஒரு முனிவர் வாஜசிரவஸரிடம் வந்தார். அவர் கையில் ஒரு மாம்பழம் இருந்தது. நசிகேதனுக்கென்றே அந்த மாம்பழத்தைக் கொண்டு வந்திருந்தார். அந்த முனிவரைப் பார்த்த மாத்திரத்திலேயே நசிகேதன் அவரை நெடுஞ்சாண் கிடையாக நமஸ்காரம் செய்து ஆசிபெற்று அவர் விருப்பப்படி அவர் மடியிலேயே அமர்ந்தான். முனிவர் தாம் கொண்டு வந்த பழத்தை அவனிடம் கொடுத்தார். அவன் மகிழ்வானென்று எதிர்பார்த்தார். ஆனால் அவன் மகிழவில்லை.

"இந்தப் பழம் எனக்கு வேண்டாம்" என்றான் நசிகேதன் அவரிடம்.

"பிறகு என்னதான் வேண்டும் உனக்கு?" என்று முனிவர் ஆர்வதொடு கேட்டார்.

நசிகேதன் சொன்னான்: "நான் ஆத்மஞானம் பெறவேண்டும்."

"ஆத்மாஞனமா? உனக்கா?" என்று கேட்டு வியந்து சிரித்து அவனைப் பார்த்தார் அந்த முனிவர்.

நசிகேதனின் பதிலைக் கேட்ட வாஜசிரவஸர் சினங்கொண்டு உரக்க, "முட்டாளே! பெரிய மகான்களிடம் இப்படியா பேசுவது மடையா!" என்று அதட்டினார். "உள்ளே போ" என்றார். நசிகேதனின் ஆர்வம் அடக்கப்பட்டது. அதனால் அவன் வாயடைத்தவனாய்த் தலை குனிந்து மெதுவாக முனிவரின் மடியிலிருந்து எழுந்து தாயிடம் சென்றான்.

வந்திருந்த முனிவர் இதுகண்டு வருந்தினார். உடனே வாஜசிரவஸரிடம் "ஐயா! பையனை ஏன் அதட்டினீர்கள்? அவன் நல்ல தின்பண்டம் கூட கேட்கவில்லை. ஞானத்தைத் தானே கேட்டான்; உண்மையில் அவனைப் பற்றி நீங்கள்

பெருமை கொள்ள வேண்டும். வனது முகப் பொலிவைக் கவனியுங்கள். எதிர்காலத்தில் மிகப் பெரிய ஞானியாவான் அவன்: தயவு செய்து சீக்கிரம் அவனுக்கு உபநயனத்தை (பூணூல் அணிவித்தல்) நிறைவேற்றிக் குருகுலத்திற்கு அனுப்புங்கள்" என்று சொன்னார். வாஜசிரவஸர் தன் தவற்றினை உணர்ந்தார். வந்தமுனிவரின் கருத்தை உடனே ஏற்றுக் கொண்டார்; அவரிடம் சொன்னார்;

"ஆனால் ஒரு வேண்டுகோள்."

"என்ன அது?"

"நீங்களே அவனை உங்கள் மாணவனாக ஏற்றுக் கொள்ள வேண்டும். வேதங்களை அவனுக்குக் கற்பிக்க வேண்டும்."

"நிச்சயமாக, மகிழ்ச்சியோடு கூட, இந்த மாதிரியான ஒரு மாணவனை எங்கே நான் பெற முடியும்? இவனுக்குக் கற்பிப்பதால் நிச்சயமாக என்னுடைய புகழ் பரவும்."

இவ்வாறு கூறி முனிவர் வாஜசிரவஸரிடம் விடை பெற்றுச் சென்றார்.

நசிகேதனுக்கு உபநயனம் செய்ய ஏற்பாடுகள் தொடங்கின. இது ஒரு மங்களகரமான சடங்கு. சிறுவர்களுக்கு வேதாப்பியாசம் தொடங்குவதற்கு முன்னால் இந்த உபநயனச் சடங்கைச் செய்தே ஆகவேண்டும்-என்பது நியதி.

நல்ல நாளில் நசிகேதன் புனிதமான பூணூல் அணிவிக்கப்பட்டான். பூணூல் அணிந்த நாளிலிருந்து அவன் 'வடு' ஆனான். வடு என்றால் பிரம்மச்சாரி; பிரம்மசாரி என்றால் பிரம்மவிசாரம் செய்பவன் என்பது கருத்து. (விசாரம் - ஆராய்ச்சி)

இப்போது நசிகேதன் தன் ஆசிரியர் இடத்திற்குச் செல்லத் தயாரானான். இதனைக் குரு குலவாசம் என்பர். அந்நேரத்தில் வாஜசிரவஸர் தன் மகனை ஆசீர்வதித்து "மகனே! வேதாப் பியாசம் செய்யப் புறப்படு; ஞானத்தைத் தேடு; அது பெற்ற பிறகு உன்னைத் திரும்பவும் வரவேற்கிறோம். ஆசிரியரோடு இருக்கும் வேளையில் அவரை ஏமாற்றாதே! தீய செயல்களில் ஈடுபட்டு அவர் உள்ளத்தை ஒரு போதும் புண்படுத்தாதே! பணிவுடைமையும் தொண்டு செய்யும் உள்ளமும், சேவையும் மட்டுமே உன்னை நல்வழிப்படுத்தும்" என்று அறிவுரை சொல்லி அனுப்பினார்.

அந்நாளில் கல்வி கற்கும் முறை இன்று போல் இல்லை. குருகுலவாசத்தில் மாணவர்கள் எப்போதும் தங்களுடைய ஆசிரியர்களோடு தான் தங்க வேண்டும். வேதங்களைக் கற்பிக்கும் ஆசிரியர் 'ஆசாரியர்' என்று அழைக்கப்பட்டார். அவர் வாழுமிடம் "ஆசிரமம்" எனப்படும். குருகுலம் என்றும் சொல்வர். ஆசாரியருடைய வார்த்தைகளை மீறாமல் மாணவர்கள் கீழ்ப்படிய வேண்டும். அவர்கள் ஆசிரமத்தின் கட்டுப்பாடுகளைத் தவறாமல் அவசியம் பின்பற்ற வேண்டும். பல்வேறு வீடுகளிலிருந்து பிக்ஷை என்று பெற்று வந்த உணவையே அவர்கள் உண்ண வேண்டும். (பிக்ஷை தான் பிச்சை ஆயிற்று) இவை போன்ற நியமங்கள் குருகுலத்தில் உண்டு.

நசிகேதன் குருகுலத்துக்குப் புறப்படு முன் தன் தாயின் பாதங்களில் விழுந்து வணங்கி "தாயே! ஆசி கூறி அனுப்புங்கள்" என்றான். விசுவவரதேவி தன்னுடைய மனத்தில் மகிழ்ச்சி கொண்டாள். கல்வி பயிலவே தன் மகன் புறப்பட்டுச் செல்கிறான் என்பது அவளுக்குத் தெரியும். ஆயினும் அவன் பிரிந்து தன்னை விட்டுப் போகிறானே என்று உள்ளம் கலங்கினாள். அது காரணமாகத் தன்னுடைய கண்களில் தோன்றிய கண்ணீரைத் துடைத்தபடி தம் மகனைத் தழுவி, "குழந்தாய்! குருகுலத்தில் ஆசிரியரையும், அவருடைய மனைவியையும் உன்னுடைய பெற்றோராகவே மதிப்பாயாக! இனி அவர்களுடைய இருப்பிடமே உன்னுடைய வீடு. உனக்கு அறிவைப் புகட்டும் ஆசிரியர் தான் உனக்கு உண்மையான கடவுள். அவருடைய கட்டளைகளை மரியாதையொடு ஏற்றுப் பின்பற்று" என்று அறிவுரையும் ஆசியும் கூறி அனுப்பினாள். நசிகேதன் தன்னுடைய வீட்டை விட்டுச் சென்று. நெடுநாட்களாகியும் அவனுடைய தாய் அவனையே எப்போதும் நினைத்துக் கொண்டிருந்தாள். புதிய சூழ்நிலையில் நசிகேதனக்கு ஏற்படும் கஷ்டங்களைக் கற்பனை செய்து பார்த்து வருந்துவாள். அப்போது ஏற்ற ஆறுதல் மொழிகளை வாஜசிரவஸர் எடுத்துச் சொல்லி அவளைத் தேற்றுவார்.

## குருகுலத்தில் சுடர்மணி

ஆரம்ப நாட்களில் குருகுலத்தில் எல்லாவிதக் கட்டுப்பாடுகளையும் பின்பற்றுவது நசிகேதனுக்குச் சிறிது துன்பமாக இருந்தது. ஆனாலும் மெதுவாகப் புதிய சூழ்நிலைகளுக்குத் தன்னை மாற்றிக் கொண்டு விட்டான். தன் வீட்டைப் பற்றிய நினைவு அவனுள்ளத்தில் மறையத்

தொடங்கியது. ஆசிரமம் - ஆசிரியர் - படிப்பு இவை மூன்றைப் பற்றிய எண்ணமே அவனுள்ளத்தில் நிரம்பியிருந்தது. அந்த ஆசிரமத்தில் வயதால் இவனுக்கு மூத்த வேறு சில மாணவர்களும் இருந்தார்கள். ஆனால் ஒழுக்க நெறியில் நசிகேதனே முதலிமல் வகித்தான்.

அதி காலையில் முதலில் துயில் எழுபவன் இவன்தான். பிறகு அருகில் உள்ள ஆற்றில் நீராடிக் காலை வழிபாடுகளை முடித்துவிட்டு வகுப்புக்கு வருவான் வகுப்பறையில் வேதபாடம் தொடங்கும். ஆசாரியர் உயர்ந்த பீடத்தில் அமர்ந்து போதிப்பார். கீழே தரையில் விரிக்கப்பட்ட தருப்பைப் பாயில் சீடர்களை அமர்ந்து வேதம் ஒருதுவார்கள். வகுப்பு முடிந்தவுடன் சீடர்கள் மற்ற குடில்களுக்கும் ஆசிரமங்களுக்கும் சென்று பிக்ஷை ஏற்று வருவர். ஏற்று வந்த உணவை உண்ணவும் சில நியமங்கள் உண்டு. எல்லா மாணவர்களும் ஒன்றாகக் கூடித் தங்கள் ஆசிரியர் முன்னே தாம் பெற்று வந்த பிக்ஷை உணவை வைத்து அவரை வணங்கி ஆசிர்வாதங்களைப் பெற்ற பிறகே உணவு கொள்ள வேண்டும். இந்த ஒழுங்கு முறைப்படி நசிகேதனும் பிக்ஷை பெற்று ஆசிரியர் முன் வைத்து வணங்கி எல்லா மாணவர்களொடும் சேர்ந்து உணவு அருந்துவான்.

மாணவர்களுக்குப் பகல் நேரத்தில் சில வேலைகளும் அளிக்கப்பட்டன. துணிகளைத் துவைப்பது. வகுப்பறைகளைச் சுத்தம் செய்வது. பூஜைக்கு மலர்களை எடுத்து வருவது. யாகங்களுக்கு வேண்டிய தருப்பை சமித்து போன்றவைகளை எடுத்து வருவது. மரம் செடி கொடிகளுக்குத் தண்ணீர் பாய்ச்சுவது. பசுக்களுக்கு உணவைத் தேடிக் கொண்டு வருவது, அவற்றை இடுவது இவை போன்றவை அந்தப் பணிகள்.

இந்த முறையில் நசிகேதன் தனக்கு அளிக்கப் பட்ட வேலைகளைச் செவ்வனே செய்து முடிப்பது வழக்கம். தன்னுடைய ஆசிரியரின் அழைப்புக் குரல் கேட்டவுடனேயே அவனுடைய கால்களில் வேகம் பிறக்கும். கூப்பிய கரங்களோடு, "ஐயா! கட்டளை யாது?" என்று கேட்பான். உண்மையில் வேலை செய்வதற்கான எந்தக் கட்டளையும் சொல்லளவில் அவனுக்குத் தேவைப்படாது. தன்னுடைய ஆசிரியரின் முகக்குறிப்பாலேயே அவருடைய மனத்தில் உள்ளது என்னவென்பதைப் புரிந்து கொண்டு அதை நிறைவேற்றுவான். இதனால் நசிகேதன் குருவின் விசேட அன்பிற்கு உரிய மாணவன் ஆனான்.

அவன் கல்வி பயின்றி முறை வியப்பானது. பாடங்களை ஒருமுறை கேட்டாலே அவனுக்குப் போதுமானது. அவனிடம் உள்ள அறிவுத்தாகம் என்றும் தணியாதது. ஒவ்வொரு நாளும் புதிய பாடங்கள் அவனுக்குக் கற்பிக்கப்பட்டன. அவன் கற்றதை ஒருபோதும் மறந்ததே இல்லை. அதனால் அவனுக்குக் கற்பிப்பதில் ஆசிரியருக்கு ஒரு மகிழ்ச்சி. அரகில் உள்ள ஆசிரமங்களில் இருந்து இங்கே வருபவர்கள் நசிகேதன் திறமையை மிகவும் புகழ்வார்கள். "யார் இந்தப் புத்திசாலியான மாணவன்? இவனைப் பெற்றோர்கள் யார்? அவர்கள் எவ்வளவு புண்ணியம் செய்தவர்களாக இருக்க வேண்டும்!" என்று வியந்து அவர்கள் சொல்லுவது வழக்கம்.

## எமனைப் பார்க்க ஆசை

ஒரு நாள் ஆசிரமத்தில் சோக நிகழ்ச்சி ஒன்று நடந்தது. அச்சமயத்தில் நசிகேதனுக்குப் பன்னிரண்டு வயதுதான். ஆசிரமத்தில் கறுப்புப் பசுவொன்று இருந்தது. அதை நசிகேதன் மிகவும் நேசித்தான். அது திடீரென்று இறந்துவிட்டது. அதனால் அவனுடைய கண்கள் நீரைப் பெருக்கின. உள்ளத்தில் பொங்கிய அளவிலாத துயரத்தை அவன் முகம் காட்டியது. அப்போது ஆசாரியர் அவனுக்கு ஆறுதல் சொல்லி, 'நசிகேதா! இறந்து போன பசுவுக்காகக் கண்ணீர் சிந்தி என்ன பயன்? இறந்தவர்கள் ஒரு போதும் திரும்ப மாட்டார்கள். ஒவ்வொரு உயிரும் ஏதாவதொரு நாளில் இறந்தேயாக வேண்டும்" என்று சொன்னார்.

"பசு இறக்கவில்லை ஐயா! நான் இதோ என் கண்களாலே அதைப் பார்த்துக் கொண்டிருக்கிறேனே! பசு மறைந்துவிடவில்லையே" என்று நசிகேதன் கேட்டான்.

"அப்படி இல்லை, நசிகேதா! பசுவினுடைய உடலை மட்டமே நீ பார்த்துக் கொண்டிருக்கிறாய். எமன் அதனுடைய உயிரை எடுத்துக் கொண்டு போய்விட்டான். எமன்தான் அரசன் இது உனக்குத் தெரியாதா?" என்று சொன்னார் ஆசாரியர்.

உடனே அவன் எதையோ ஞாபகப்படுத்திக் கொண்டிருந்தான். "ஆமாம் ஐயா, என்னுடைய தாய் ஒரு முறை இதுபோன்று சொன்னது ஞாபகத்திற்கு வருகிறது" என்றான். நசிகேதன். மேலம் சொன்னான்". "அப்பொழுது நான் மிகவும் சிறுவன். என் தாய் சொன்னதைக்

கேட்டதிலிருந்து எமனை எப்படியாவது சந்திக்க வேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது."

உடனே ஆசாரியர் சிரித்துக் கொண்டே சொன்னார்: "குழந்தாய்! அது எளிமையானதன்று. எமனைச் சந்திப்பது என்பதும் நாம் இறந்துபோவது என்பதும் ஒன்றுதான். இறந்த மனிதர்கள் ஒரு போதும் திரும்பமாட்டார்கள்."

நசிகேதன் ஏமாற்றமடைந்தான்; அறிவியல் தெளிவு பெறாமல் விழித்தான். "அப்படியானால் உயிரோடு எமனைச் சந்திக்க முடியாது என்கிறீர்களா ஐயா?" என்றான்.

'ஆமாம்' என்ற கருத்தில் ஆசாரியர் தலையை அசைத்து விட்டு "ஆனால் ஒன்று. சிறந்த முனிவர்களால் காலனைப் பார்க்க முடியும். அப்படி யாருமே துணியவில்லை இதுவரை. சரி; இப்போது இருட்டி விட்டது. நாம் போய் ஓய்வெடுப்போம்" என்று கூறி ஆசாரியர் ஆசிரமத்தின் உள்ளே சென்றார். ஆனால் நசிகேதனுக்குக் காலனைக் காண இயலும் என்ற நம்பிக்கை குறையவில்லை.

முடிவில் தீர்மானமாகத் தனக்குத்தானே அவன் சொல்லிக் கொண்டான். "என்ன வந்தாலும் சரி. என்றாவது ஒரு நாள் எமனை எப்படியேனும் நான் சந்தித்தே தீருவேன்."

**விசுவஜித் யாகம்:**

'விசுவஜித்' என்னும் ஒரு பெரிய யாகத்தைச் செய்ய வாஜசிரவஸர் விரிவான முன்னேற்பாடுகளைச் செய்து கொண்டிருந்தார்; அதற்கு எல்லா முனிவர்களுக்கும் அழைப்பிதழ் அனுப்பினார். பத்து நாட்களுக்கு முன்பாகவே நசிகேதனின் ஆசாரியருடைய குடிலுக்குத் தானே நேரில் வந்து நசிகேதன் உட்படத் தன்னுடைய எல்லா மாணவர்களோடும் யாகத்திற்கு வரும்படி அவரைக் கேட்டுக் கொண்டார்.

குறிப்பிட்ட நாளில் ஆசாரியர் தம் மாணவர்களோடு யாகத்திற்குப் புறப்பட்டார். அந்நாட்களில் எவரும் நடந்துதான் தாம் விரும்பும் இடங்களுக்குப் போக வேண்டும். குருவும் சீடர்களும் நடந்தே விசுவஜித் யாகத்திற்குப் போய்க் கொண்டிருந்தனர். நடக்கும் போது பேச்சுக்கள் தொடங்கின. நசிகேதன் தன் ஆசிரியரிடம், "ஐயா! என்னுடைய தந்தை விசுவஜித் யாகம் நடத்துவதற்கான காரணம் என்ன?" என்று கேட்டான்.

ஆசாரியர், "அருமைக் குழந்தாய்! விசுவாஜித் என்பதன் பொருள் உலகத்தை வெல்லுவது என்பதாகும். இந்த யாகம்

இந்த உலகத்தில் புகழைப் பெறவும் மறு உலகத்தில் மகிழ்ச்சியைப் பெறவும் நடத்தப்படுகிறது" என்றார்.

"ஆனால் சொர்க்கத்தை அடைவதற்கு ஒருவர் நற்காரியங்களைச் செய்ய வேண்டும் என்று என் தாய் எனக்கு ஒரு முறை சொல்லி இருக்கிறாள்."

"ஆம் ஒரு யாகத்தை நிறைவேற்றுவதும் நற்காரியங்களில் ஒன்றுதான். அதுவும் நன்மையையே பயக்கும். காரணம் யாகத்தில் மந்திரங்கள் ஓதி ஹோமம் செய்து எல்லாத் தேவர்களுக்கும் உணவளிப்பதோடு பெருமளவில் என்னைப் போன்றவர்களுக்கு ஆயிரக்கணக்கான பசுக்கள் முதலியவை தானமாகவும் அளிக்கப்படும். இந்த யாக விதியில் ஒரு தனிச்சிறப்பு என்னவென்றால் இந்த யாகம் செய்பவர் தம்மிடம் உள்ள அனைத்து உடைமைகளையும் பிறருக்குத் தானமாகக் கொடுத்துவிட வேண்டும்."

"அப்படியா? என்னென்ன பொருள்கள் அவ்வாறு தானளிக்கப்படும்?"

"தங்கம் உட்பட விலைமதிக்க முடியாத எதுவாகவும் இருக்கலாம். மேலும் யாகத்தை நிறைவேற்றுபவருக்கு மிகவும் விருப்பமாக உள்ள பொருள்கள், வாங்கிக் கொள்வருக்கு மகிழ்ச்சியையும், மிக்க பயனையும் தரத்தக்க பொருள்கள் எவையாகவும் இருக்கலாம். ஆனால் எல்லாம் தானமாகவே கொடுக்கப்பட வேண்டும்."

"அப்படியானால் என்னையும் அவர் தானமாக அளித்து விடுவாரா? நான் என் தந்தையால் மிகவும் விரும்பப் படுபவனாயிற்றே!"

இந்த வினாவைக் கேட்டு ஆசாரியர் வியப்புற்றுச் சொன்னார். "நசிகேதா! மிகவும் பொருத்தமான கேள்விதான் இது. ஆனால் உன்னைக் கொடுக்க வேண்டிய அவசியம் என்ன வந்தது? கவலைப்படாதே! யாருக்கும் உன் தந்தை உன்னைக் கொடுத்துவிட மாட்டார்."

இப்படிப் பலவாறு பேசிக் கொண்டே குருவும் சீடர்களும் நெடிய வழி சென்ற பிறகு வாஜசிரவஸரின் இருப்பிடத்தை வந்தடைந்தார்கள். நசிகேதன் வீட்டை யடைந்தவுடனேயே நேரே தாயிடம் ஓடி அவள் திருவடியில் விழுந்து வணங்கினான். நீண்டகால இடைவெளிக்குப்பிறகு தாய் விசுவவரதேவி தன் அன்பு மகனைச் சந்திக்கும் போது

எவ்வளவு மகிழ்ச்சியடைந்திருப்பாளென்று எண்ணிப் பாருங்கள்!

யாக சாலையில் குறிப்பிட்ட நேரத்தில் 'விசுவஜித்' என்ற யாகத்தின் சடங்குகள் தொடங்கின. வாத்தியங்கள் முழங்கின. ஒரு பெரிய இடத்தில் பரவலாக அமைந்த பந்தலை நூற்றுக்கணக்கான தூண்கள் தாங்கி நிற்ற அப்பந்தலின் கீழே பலதிறப்பட்ட மக்கள், முனிவர்கள் கூடி இருந்தனர். பந்தல் நடுவில் நூற்றுக்கணக்கான முனிவர்கள் கூடி ஒருமித்து ஓதிய மந்திர ஓல வானத்தை நிரப்பியது. வராஜசிரவஸர் ஓரிடத்தில் அமைதியாக யாக கர்த்தாவாக வீற்றிருந்தார். விசுவஜித் யாகத்தில் மேற்கொள்ளப்பட வேண்டிய நியமங்கள் மிகவும் கடுமையானவை. அதனால் மூத்த முனிவர்கள் வாஜசிரவஸரை எச்சரித்தார்கள்: "வாஜசிரவஸரே! உமக்குக் கோபம் எளிதில் வந்துவிடும். ஜாக்கிரதை! யாக காரியங்களில் எல்லோருமே மிக்க பொறுமையைக் கடைப்பிடிக்க வேண்டும். அதிலும் நீங்கள் கோபம் கொள்ளுதலை அறவே நீக்க வேண்டும். நீங்கள் சொல்லும் ஒவ்வொரு சொல்லும் செயலாக மாற்றப்பட வேண்டும். தவறினால் உங்களுடைய எல்லா முயற்சிகளும் பயனற்றுப் போகும். ஆதலனி எங்கும் சாந்தி; எதிலும் சாந்தி நிலைக்க வேண்டும்." பின்னர் யாகம் முறையாக நடக்கத் தொடங்கியது.

### வேண்டியது சுவர்க்கமா நரகமா ?

ஒரு நாள் மாலை நேரம். யாகத்தில் தானமாகக் கொடுக்கப்பட வேண்டிய பசுக்களை யாக சாலையில் அருகே கொண்டு வரும்படி சில முனிவிர்கள் சொன்னார்கள். அவ்வாறே வாஜசிரவஸர் பணியாட்களை அனுப்பிப் பசுக்களைக் கொண்டு வரச் சொன்னார். அப்படியே நூற்றுக் கணக்கில் பசுக்கள் கொண்டுவரப்பட்டன.

பசுக்களைப் பார்த்தனர் முனிவர். அவர்களுக்கு என்ன சொல்வதென்றே தோன்றவில்லை. ஏன் அப்படி? வந்த பசுக்களில் பல கிழத்தனம் கொண்டவை; பல மெலிந்து சாகும் நிலையில் இருந்தன. பல நாட்களாக அவை உணவு இன்றி வாடி எலும்பும் தோலுமாக இருந்தன. பசு தானம் செய்வது அதனை வாக்கிக் கொள்பவர் பால் கறந்து, ஓம காரியங்களுக்குப் பயன்படுத்தித் தாமும் பருகி சந்தோஷப்படுவதற்காக. இந்த மெலிந்த பசுக்களைத் தானம் பெற்றுச் செல்பவர்களுக்கு இவற்றால் என்ன பயன் ஏற்படப் போகிறது? இவற்றையெல்லாம் எண்ணி வாயடைத்து திகைத்த

நின்றனர். பசுக்களைப் பார்த்த முனிவர்கள். காரணம் வாஜசிரவஸரிடம் இதுபற்றிப் பேச அவர்களுக்குப் பயம்.

பசுக்களைப் பார்த்தான் நசிகேதன். தன் தந்தையின் கருத்து என்ன என்பது புரியாமல் விழித்தான். அவன் மனம் பின்வருமாறு எண்ணமிட்டது.

"இந்தப் பசுக்கள் ஏன் இப்படி உணவின்றி வாடி மெலிந்திருக்கின்றன? தந்தையிடம் நல்ல பசுக்களே இல்லையா? சாகும் நிலையிலுள்ள இந்தப் பசுக்களைத் தானமாகப் பெறுபவர் என்ன பயனையடையப் போகிறார்? இவற்றைக் கொடுப்பவரான என் தந்தையார் தான் என் புண்ணியத்தைப் பெறப் போகிறார்? புண்ணியமில்லை என்பதோடு பாவத்தையும் அல்லவா தேடிக் கொள்கிறார் அவர் இந்தப் பசுக்களைத் தானம் கொடுப்பதன் வழியாக! யாகத்தை நறைவேற்றிச் சுவர்க்கத்தைப் பெறுவதற்குப் பதிலாக கொடிய நரகத்திற்குப் போக அல்லவா வழி செய்கிறார்!"

இந்த எண்ணங்களால் நசிகேதன் குழம்பினான். எப்படியாவது தந்தை இந்தப் பசுக்களைத் தானம் செய்யாமல் தடுத்து அவரை நரகம் புகாமல் காக்க வேண்டும் என்று நிச்சயிதான். ஏனெனில் நரகத்தில் படும் வேதனைகளை அவன், தன் தாய் சொல்லிப் பலமுறை கேட்டிருக்கிறான். ஆகவே என்ன செய்து தந்தையைப் பாவங்களிலிருந்து விடுவிப்பது என்று யோசனை செய்தான்.

பசுக்களைத் தானம் வழங்கத் தொடங்கினார். வாஜசிரவஸர். அவர் தானமாகக் கொடுப்பதெல்லாம் பயனற்ற பொருள்களாகவே பெரும்பாலும் இருந்தன. இதைக் கண்டு நசிகேதன் துடித்தாள். தன் தந்தை இப்படித் தேடிக்கொள்ளும் பாவத்திலிருந்து காப்பாற்ற ஒரு வழிதான் உண்டு. அதுவே பிராயச்சித்தமும் ஆகும். அது என்ன? தன் தந்தைக்கு மிகவும் விருப்பமான ஒரு பொருளைத் தானமாக அவர் வழங்கும்படி செய்வதே, தந்தைக்கு மிகவும் விருப்பமான பொருள் தனயனாகிய நான் தானே! ஆகவே தன்னைத் தானமாக யாருக்கேனும் அவர் வழங்கி விட்டால் அவர் செய்த பாவங்கள் குறைந்துவிடும். ஆகவே தன்னைத் தானமாக யாருக்கேனும் வழங்கச் செய்ய வேண்டுமென்று தீர்மானித்தான்.

மெதுவாகத் தந்தையின் அருகில் சென்று கூப்பிட்டான்.

"அப்பா!"

"என்ன ?"

"என்னை யாருக்கப்பா தானமாக வழங்கப் போகிறீர்கள் ?"

திகைப்பொடு நசிகேதனைப் பார்த்தார் வாஜசிரவஸர். ஏதோ தெரியாமல் கேட்கிறான் என்று எண்ணிக் கொண்டு மறுபடியும் தான் செய்து கொண்டிருந்த தான காரியத்தில் ஈடுபடலானார்.

"என்னை யாருக்கப்பா தானமாகக் கொடுக்கப் போகிறீர்கள் ?" என்று மறுபடியும் கொஞ்சம் உரக்கக் கேட்டான்.

வாஜசிரவஸரின் கவனம் இப்போது மகனிடம் திரும்பியது. அவன் கேட்கும் வினாவும் பழைய வினாவாகவே இருப்பதையும் கவனித்தார். கோபம் வந்தது. ஒருவாறு அதை அடக்கிக் கொண்டு, கண்ணை உருட்டி விழித்து அவனை ஒரு பார்வை பார்த்துவிட்டுத் திரும்பி மீண்டும் பசுக்களைத் தானம் செய்வதில் ஈடுபட்டார்.

தந்தை கோபமடைகிறார் என்பதை நசிகேதன் அறிந்தான். என்றாலும் அவன் விடவில்லை. மறுபடியும் மேலும் ஒரு முறையாக சாலையில் இருந்த முனிவர்களும் கவனித்துத் திரும்பும்படி உரக்கக் கேட்டான்:

"அப்பா! என்னை யாருக்குத் தானமாக அளிக்கப் போகிறீர்கள் ?"

அவருக்குக் கோபம் பொங்கி எல்லையையும் கடந்து விட்டது. நசிகேதனைப் பார்த்து உரக்கக் கத்தினார். "போ! போ!! உன்னை இயமனுக்குத் தானமாக அளித்து விட்டேன். போ!" இந்தக் குரல் யாகசாலையில் எதிரொலித்தது.

திடீரென்று எங்கும் அமைதி நிலவியது. நசிகேதன் கேட்டதும், அதற்கு வாஜசிரவஸர் சொன்னதும் யாகசாலையில் இருந்த எல்லா முனிவர்களின் கவனத்தையும் திருப்பி அவர்களைத் திகைத்தச் செய்தன.

எல்லோரும் தாம் தாம் செய்து கொண்டிருந்த பணிகளை அப்படியே நிறுத்தினர். எழுந்து நின்று கைகளைக் குவித்துக் கொண்டு வாஜகிரவஸரிடம் கூறினர்:

"வாஜசிரவஸரே! யாகத்தின் கர்த்தா அல்லவா நீர்! கோபத்துக்கு அடிமையாகி விட்டீரே! அதனால் என்ன வார்த்தையும் வாயிலிருந்து வந்தது என்பதைச் சிந்தித்தீரா? யமனுக்கல்லவா உம் மகனைத் தானம் செய்வதாகச் சொல்லி

விட்டர்! அதன்படி இப்போது நடந்தாக வேண்டுமே! இல்லையெனில் யாகம் பயனற்றுப் போகுமே! இனிஅதை மேலும் தொடர்ந்து பயனில்லையே! இப்போது நாங்கள் என்ன செய்வது?"

முனிவர்களின் வார்த்தைகள் வாஜசிரவஸரைக் கோபம் தணிந்த நிலைக்கு திருப்பிக் கொண்டு வந்தன. தான் செய்த மிகப் பெரிய பிழையை எண்ணிப் பார்த்தார். கோபம் தன்னை நிலை குலைத்ததை எண்ணி எண்ணி வருந்தினார். துயரத்தால் கண்களிலிருந்து நீர் பெருகியது. அருகிலிருந்த விசுவவரதேவி செய்வதறியாமல் மனம் புழுங்கி அழுதாள். மேலே யாரும் எதுவும் பேசாமல் எல்லோருமே துயரத்தின் உருவமாகிவிட்டனர்.

இந்த நிலையைக் கண்டான் நசிகேதன். பெற்றோர்களின் அருகே மெதுவாக வந்தான். துயரத்தால் தாய் தந்தையர் இருவரும் கண்ணீர் பெருக்கிக் கொண்டிருப்பதைக் கண்டு அவன் மனமும் தடுமாறியது. ஒருவாறு தன்னைத் தைரியப்படுத்திக் கொண்டு தந்தையிடம் கேட்டான்:

"தந்தையே! எதற்காக இப்படி வருத்தமடைகிறீர்கள்? யமனுக்கு என்னை அளிப்பதாகச் சொன்னீர்கள். நான் அவனிடம் போகமாட்டேன் என்று மறுத்தால் அல்லவா நீங்கள் கலங்க வேண்டும்? கௌதமர், ஆருணி ஆகிய முனிசிரேஷ்டர் பரம்பரையினரல்லவா நாம்! வருந்தாதீர்கள்! நானே யமனிருப்பிடம் போய்ச் சேர்கிறேன்."

நசிகேதனின் சொற்கள் பெற்றோருக்கும், அங்கிருந்த மற்றவர்களுக்கும் மேலும் துயர்தைப் பெருகச் செய்தன.

வாஜசிரவஸர் அவனைத் தழுவிக் கொண்டு எழுது கொண்டே சொன்னார்:

"மகனே! யமனை அடைவது என்றால் என்னவென்று எண்ணினாய்! சாவது அல்லவா யமனை அடைவது. சாகாமல் அவனை அடைய முடியுமா?"

"ஏன் முடியாது" என்று திருப்பிக் கேட்டான் நசிகேதன் தந்தையிடம்.

தந்தையும், தாயும் அங்கிருந்த மற்றைய முனிவர்களும் அவன் எதிர்வினாவைக் கேட்டுத் திகைத்து அவனையே பார்த்தனர்.

"இதோ யமனிருப்பிடம் தேடி நானே போகிறேன். பாருங்கள்! "என்று சொல்லி அந்த இடத்திலேயே பத்மாஸனம்

இட்டுக் கீழே அமர்ந்தான். பத்மாஸனம் என்பது இரண்டு கால்களையும் மடித்து வலக்கால் தொடை மீது இடக்கால் பாதத்தையும் இடக்கால் தொடை மீது வலக்கால் பாதத்தையும் சேர்த்து உட்கார்வது. பின்னர் கைகளைக் குவித்து நெஞ்சுக்கு நேரே வைத்துக் கொண்டாள்; இரு கண்களையும் மூடிக் கொண்டான்; இப்படியே மெய், வாய், மூக்கு, செவி ஆகிய பொறிகளையும் அவற்றின் புலன்களையும், மனத்தையும் அடக்கி ஒரே நிலையில் நிறுத்தி யமனைத் தியானம் செய்து துதித்தான். இந்த மண்ணுலக்தைப் பற்றிய எண்ணமே நசிகேதனை விட்டு நீங்கி விட்டது. அவனுடைய தவவலிமையால் ஜீவான்மா அவன் உடம்பை விட்டுப் பிரிந்து யமனுலகத்தை நோக்கிப் போயிற்று. கொஞ்ச நேரத்தில் தன்னை யாரோ கூப்பிடுவது போல் நசிகேதனுக்குத் தோன்றியது. தன் அகக் கண்ணால் பார்த்தான். என்ன அதிசயக் காட்சி அவனுக்குத் தோன்றியது தெரியுமா?

இப்போது அவன் ஒரு புதிய உலகத்தில் இருந்தான். அவனுடைய தந்தையோ தாயோ, மற்றைய முனிவர்களோ, யாகசாலையோ அங்கே இல்லை. தங்கம் வேய்ந்த ஒரு பெரிய மாளிகை எதிரே தோன்றியது.

மாளிகையின் நுழைவாயிலில் இரண்டு வீரர்கள் வாளேந்திய கைகளொடு இருபுறங்களிலும் பயங்கர உருவம் கொண்டவர்களாய் நின்று கொண்டிருந்தார்கள்.

நசிகேதன் அவர்களின் அருகில் மெதுவாகச் சென்று "ஐயா, நீங்கள் யார்? நான் இப்போது எந்த இடத்தில் இருக்கிறேன்? தயை செய்து தெரிவிப்பீர்களா?" என்றான்.

"இந்த இடம் ஸம்யமனி நகரம்; யமதர்ம ராஜனுடைய மாளிகை இது. எப்படி நீ இங்கே வந்தாய்? உன்னை இங்கே அழைத்து வந்தவர் யார்?" என்றனர் அந்தக் காவலாளிகள்.

"உண்மையிலேயே யமன் மாளிகையருகே வந்து விட்டோமா" என்று எண்ணி ஆச்சரியம் கொண்டவனானான் நசிகேதன். பின்பு அந்தக் காவல் வீரர்களைப் பார்த்துச் சொன்னான்:

"வீரர்களே! நான் உத்தாலகர் என்ற வாஜசிரவஸ முனிவரின் புத்திரன். என் தந்தை என்னை யமனுக்குத் தானமாக வழங்கி அனுப்பியுள்ளார். செய்தியைச் சொல்லித் தயை செய்து என்னை அந்தத் தர்மராஜனிடம் அழைத்துச் செல்லுங்கள்."

காவலர்கள் அரண்மனையின் உள்ளே சென்று பின் சிறிது நேரம் கழித்துத் திரும்பி வந்து "முனிகுமாரா! தர்மராஜா் எங்கேயோ போயுள்ளாராம். திரும்பி வர மூன்று நாட்கள் ஆகுமாம்; அவர் வரும் வரை அரண்மனைக்குள் இருக்கும் விருந்தினர் விடுதிக்கு வந்து தங்கியிருக்குமாறு அரசியார் பணித்துள்ளார். அப்படியே செய்வாயாக! விருந்தினர் மாளிகையைக் காட்டுகிறேன். வா முனிகுமாரா!" என்று சொல்லி அழைத்தனர்.

"தர்மராஜனைப் பார்த்துச் செய்தியைச் சொல்லாமல் உள்ளே வந்து தங்கியிருப்பது தவறாகும். அவர் வரும் வரை நான் இங்கேயே தங்கியிருக்கிறேன்" என்று சொல்லி நசிகேதன் மான் தோலை அங்கேயே விரித்து அதன் மீது அமர்ந்து யமதர்மராஜனைத் தியானித்துத் தவமிருந்தான்.

இவ்வாறு மூன்று நாட்கள் உணவு எதுவும் கொள்ளாமல் அந்த வாசலிலேயே அமர்ந்து தியானம் செய்து கொண்டு யமதருமனின் வருகையை எதிர்நோக்கி இருந்தான். அவன் மனத்தில் உறுதிகை கண்டு அந்த உலகத்து வாழும் தேவர்கள் அவனை வியந்து புகழ்ந்தனர்.

மூன்றாம் நாள் இறுதியில் யமதருமன் வந்தான். அரசி அவனிடம் நசிகேதன் வருகை பற்றிய செய்திகளையும் அதிதியாத வந்துள்ள அவன் உண்ணாவிரதத்தோடு அரண்மனை வாசலில் காத்திருப்பதையும் எடுத்துச் சொன்னாள். உடனே யமதருமன் விரைந்து நசிகேதன் இருக்குமிடத்துக்கு வந்தான். நசிகேதனின் தியான நிலையையும், அவனது மன ஒருமை நிலையையும் கண்டு மகிழ்ந்து "நசிகேதா! என் இருப்பிடம் தேடி வந்த அதிதி நீ! இப்படிப்பட்டினியாயிருப்பது சரி யன்று. என்னைப் பார்! நான் தான் காலதேவன் - யமதருமன் வந்திருக்கிறேன்" என்றான், கூப்பிய கைகளோடு.

நசிகேதன் முனிகுமாரன்; தவம் நிறைந்தவன்! தன் இடம் நாடி வந்த அதிதி (விருந்தாளி) அவன். ஆகவேதான் யமன் அவனைக் கைகூப்பி வரவேற்றான். தவத்துக்கும், தேடி வரும் விருந்தாளிக்கும் அவ்வளவு பெருமை உண்டு!

நசிகேதன் பார்த்தான். உண்மையாகவே காலதேவன் தன் முன்னே மலர்ந்த முகத்தொடு நிற்பதைக் கண்டான்; தன் கண்களை முதலில் அவன் நம்பவில்லை. பின்னர் உணர்ந்த உடனே யமதருமராஜன் கால்களில் விழுந்து வணங்கினான்.

தன் தந்தையார் தன்னை அவனிடம் அளித்திருக்கும் செய்தியைச் சொன்னான்.

''சரி. எல்லாம் நான் அறிவேன். என்னொடு அரண்மனையின் உள்ளே வா! மூன்று நாட்களாக என் அரண்மனை வாசலிலே பட்டினியாய் இருந்து விட்டாயே! என்னைத் தேடி வந்த அதிதியல்லவா நீ!" என்று சொல்லிக் காலதேவன் நசிகேதனை அரண்மனையினுள்ளே அழைத்துச் சென்று விருந்தினரை வரவேற்கும் முறைகளான ஆசனம் அளித்தல், கைகால்களைக் கழுவ உதவுதல், பாலும் பழமும் அளித்தல் போன்ற அதிதி ஸத்காரங்களைச் செய்து நிறைவேற்றினான்; பின்னர் உணவளித்து அவன் பசியைத் தீர்த்தான்.

பின்னர் இருவரும் அமர்ந்து உரையாடினர்.

## மூன்று கேள்விகள்

காலதேவன்: "நசிகேதா! மூன்று நாட்கள் எனக்காகக் காத்திருந்தாய்! உணவு கொள்ளாமல் பட்டினி கிடந்தாய்! அதிதியாக வந்த நீ இப்படி எனக்காக வருந்த நேர்ந்தது மிகவும் வருத்தத்தைத் தருகிறது. அதற்குப் பரிகாரமாக மூன்று வரங்கள் உனக்கு அருள்கிறேன். கேள்!"

நசிகேதன்: தருமதேவா! என் தந்தை பணித்தபடி தான் நான் இங்கே வந்தேன். ஆகவே நான் தங்கள் பணியாள், வேலைக்காரன். தங்கள் ஏவற்படி நடக்க வேண்டியவன் நான்."

கா: "உண்மை. வந்தவனை உடனே கவனிக்காமல் இருந்தது என் தவறு. அந்தக் குற்றத்தை நீக்கிக் கொள்ள வேண்டியது என் கடமை. ஆகவே நான் சொன்னபடி மூன்று வரங்களைப் பெற்றுக் கொள்."

ந: "தருமதேவா! கோபம் கொடியது. அதன் விளைவாகவே நான் இங்கு வர வேண்டிதாயிற்று. என் தந்தையார் மகரிஷி தான்; என்றாலும் சினம் அவரை விட்டு நீங்கவில்லை. அது பற்றி நான் மிகவும் வருந்துகிறேன். அவரது சினமொழிகளால் இப்போது அவர் யாகம் தடைப்பட்டு விட்டது."

கா: "நசிகேதா! கோபம் பொல்லாதது தான் ஆனாலும் உன் தந்தையார் நிறைய தவம் செய்திருக்கிறார். ஆதலால் கோபத்தின் விளைவு அதிகமான தீமைகளாக இராது. அவர் கோபித்து உன்னை எனக்குத் தந்தார். ஆனால் நீ இங்கே மரணத்தின் வழியாக வரவில்லை; தியானத்தின் வழியாகவே

வந்திருக்கிறாய்! அந்த சக்தியை நானே தான் உனக்குத் தந்தேன். எல்லாம் சரியாகிவிடும். இப்போது நீ வரங்களைக் கேட்டுப் பெற்றுக்கொள்."

ந: "அப்படியா! இதோ நான் விரும்பும் முதல் வரம். என் தந்தையை விட்டுக் கோபம் அறவே விலகி விடவேண்டும். போதுமென்ற மனமும், அமைதியான வாழ்வும் அவர் பெறவேண்டும். நான் இங்கிருந்து திரும்பிச் செல்லும் போது அவர் கோபதாபமில்லாமல் அன்போடு என்னை ஏற்றுக் கொள்ள வேண்டும்."

கா: "அப்படியே நிறைவேறும் முனிகுமாரா! சாந்தம் நிறைந்த மனத்தொடு யாகத்தை முறையாக நிறைவேற்றுவார்; நீ செல்லம் காலத்தில் உன்னை ஆர்வத்தொடு வரவேற்று மகிழ்வார். சந்தேகமா வேண்டாம்."

## அக்னி வித்யை

கா: "இரண்டாம் வரத்தைக் கேட்பாயாக!"

ந: "சுவர்க்கலோகம் என்று ஒன்று உண்டு என்றும், அங்கே வாழ்பவர் தேவர்கள் என்றும் சொல்லப்படுகிறது. தேவர்களுக்கு முதுமையில்லை; சாவு இல்லை என்றும் சொல்லப்படுகிறது. அந்தத் தேவர்களைப் போல் மனிதர் ஆக வேண்டுமானால் அக்னி வித்யை பெற வேண்டும் என்கிறார்கள். அந்த அக்னி வித்யை போதித்து என்னை ஞானியாக்க வேண்டும்."

இப்பொழுது யமதர்மன் குழப்பத்திற்கு உள்ளானான். சிறுவனாயிருக்கும் நசிகேதனுக்கு உயர்ந்த அறிவை எப்படிச் சொல்வது என்று சிந்தித்தான். இருந்தும் அவன் பதில் சொன்னான்: "நசிகேதா! நீ சிரத்தையுள்ள ஒரு சிறுவன், சந்தேகம் இல்லை. ஞானத்தேட்டத்தில் தன்னை அர்ப்பணித்துக் கொண்ட ஒருவர் அறிவின் நுட்பங்களைப் புரிந்து கொள்வது எளிதானதாகும். ஆகவே கவனத்தோடு நான் சொல்லுவதைக் கேள்." என்று சொல்லி அக்கினி பற்றிய அறிவை அவனுக்குப் போதித்தான். அந்த முடிவில் அவன், 'நசிகேதா! இந்த அறிவை நல்ல ஞாபகசக்தி உள்ளவர்கள் மட்டுமே தக்கவைத்துக் கொள்ள முடியும். ஞாபகசக்தி இல்லாவிட்டால் அவ்வறிவை வைத்துக் கொள்வது மிகவும் கடினமானது. ஆகவே என்னுடைய போதனைகளை உன்னால் திருப்பிச் சொல்ல முடிகிறதா என்பதை நான் பார்க்கிறேன்" என்றாள். இதுபோன்ற பரிட்சைகளில் நசிகேதன் மிகவும் புத்திசாலியான ஒரு மாணவன். அவனுடைய கிரகிக்கும் சக்திதான் வியக்கத்தக்க தாயிற்றே! எந்தப் பாடத்தையும் ஒரு

தடவை மட்டும் சொல்லிக் கொடுத்தான் கூட அவனுடைய ஞாபகத்தில் எப்போதும் மறவாததாகவே அப்பாடம் இருக்கும். யமதர்மன் சொல்லிய அக்கினி பற்றிய அறிவில் ஒரு எழுத்தைக் கூட விட்டுவிடாமல் எல்லாவற்றையும் திருப்பிச் சொன்னான் நசிகேதன். யமராஜன் மகிழ்ச்சியால் பூரித்தான். எல்லாவகையிலும் நசிகேதனைப் போற்றினான். "போதும், போதும். இப்பொழுது அக்னி பற்றிய அறிவைக் கற்றவொரு மனிதனாக நீ மாறிவிட்டாய். உன்னுடைய இந்தத் திறமைக்காக என்னுடைய சொந்தப் பொறுப்பில் ஒரு வரத்தை அளிப்பேன். இன்று முதல் அக்கினியைப் பற்றி இந்த அறிவு உன்னுடைய பெயரால் 'நசிகேத அக்னி' என்று அழைக்கப்படும். யார் இந்த அறிவைப் பெற்றாலும் தானாகவே கடவுள் தன்மையை அடைந்து விடுவர். இயல்பாகவே நீயும் கடவுள் தன்மையை அடைந்து விடுவாய்" என்று கூறி அவன் கழுத்தில் அழகான ஒரு இரத்தன மாலையையும் அணிவித்தான்.

## ஆத்ம வித்யை

இப்பொழுது எஞ்சிய மூன்றாவது வரம் மட்டுமே கேட்கப்பட வேண்டியது. நசிகேதன் சிந்தனைக்கு உள்ளானான். குருகுல ஆசிரமத்தில் ஒருநாள் இறந்து போன ஒரு பசுவிற்காகத் தான் அழுது கொண்டிருந்ததை நினைவிற்குக் கொண்டு வந்தான். அவன் பின்னர், "அறக்கடவுளே! உலகத்தில் உயிர் வாழும் ஒவ்வொன்றும் அழியக்கூடியது. அவர்கள் தங்களுடைய புண்ணியச் செயல்களால் மகிழ்ச்சியும் பாவத்தால் துயரமும் பெறுவர், என்று திரும்பத் திரும்பச் சொல்லுகிறார்கள். உடல் இறந்தாலும் உயிர் அழிவற்றிருப்பதாகச் சொல்லப்படுகிறது. ஆகவே பிறப்பு இறப்புச் சுழற்சிகள் மாறி மாறி நிகழ்கின்றன. இதன் இரகசியம் என்ன? இந்தத் துயரத்தில் இருந்து விடுபட வழிவகைகள் இல்லையா? அப்படியொன்றிருந்தால் அதனை நான் தெரிந்து கொள்கிறேன். இதுவே நான் வேண்டும் மூன்றாவது வரம்" என்றான்.

இந்தக் கேள்வியைக் கேட்டதும் யமதர்மன் வியப்புடன் அதிர்ச்சியுமுற்றான். காரணம் குழந்தைகள் இதுபோன்ற வினாக்களைக் கேட்பது எளிதன்று. யமராஜன் சொன்னான்; "அன்புச் சிறுவா! இதுபோன்ற ஒரு வரத்தைக் கேட்டு வற்புறுத்தாதே! உனக்குச் சொத்து, பணம், பேரரசு, ஆட்சி அல்லது வேறு எதை நீ விரும்பினாலும் என்னால் உனக்கு அளிக்க முடியும். நீ கேட்கும் அறிவு 'ஆத்ம வித்யா' (ஆத்மாவைப் பற்றிய அறிவு) என்று சொல்லப்படும். இது

மூத்தோர்களே புரிந்து கொள்ள முடியாத கடினமான பாடம். ஆகவே இதை விட்டு விட்டு வேறு எதையாவது கேள். அதைத் தருகிறேன்.''

ஆனால் நசிகேதன் வித்தியாசமான முறையிலே உருவானவன் அல்லவா? அவனுடைய பாதையைக் கைவிடச் சம்மதிக்கச் செய்வது எளிதன்று.

அவன் ஏற்கெனவே அக்கினி பற்றிய அறிவைத் தெரிந்து வைத்திருக்கிறான். அது கடவுள் தன்மையை அவனுக்கு அளித்துவிட்டது. இதன் பின் இம்மை வாழ்விற்குரிய பொருளுக்காக அவன் ஏன் ஆசைப்பட வேண்டும்? 'அறிவிற்குப் பதிலாக வேறெதைப் பெற்றாலும் பயனில்லையே! இது போன்ற ஒரு சந்தர்ப்பத்தை இழப்பதில் என்ன ஞானம் இருக்கிறது?' என்று சிந்தித்துத் தன் வேண்டுகோளைப் பின்வருமாறு வற்புறுத்தினான். "காலதேவா! உங்களுடைய உறுதி மொழி இருக்கிறது. தயவு செய்து ஆத்ம வித்யையினையே எனக்குப் போதிக்கவும். நீங்களே மறுத்தால் உங்களைப் போன்ற ஆசிரியனை நான் இனி எங்கே போய்ப் பெறுவேன்?"

யமராஜனுக்கு இந்த இளைய முனிவனுக்குப் போதிப்பதைத் தவிர வேறு வழியில்லாததாயிற்று. ஆகவே அவனுக்கு ஆத்ம வித்யையொடு யோக அறிவையும் போதித்தான். மனிதகுல முழுமைக்கும் நன்மையை விரும்பி யமராஜன் சொன்னான்; "நசிகேதா! ஒருவர் மனிதராகப் பிறப்பதற்கு உண்மையில் அதிர்ஷ்டம் உள்ளவராக இருக்க வேண்டும். மேலும் அவர் நல்ல நண்பர்களைப் பெற வேண்டும். நல்லவைகளைக் கற்று மற்றவர்களுக்கு நல்லவைகளைச் செய்ய வேண்டும். இவைகளே பாராட்டிற்குரிய செயல்கள். பதிலாக ஒருவர் தீய ஒழுக்கத்தின்ரொடு சேர்வதும் அதனால் தீய சிந்தனைகளால் செயல்படுவதும் பாவமாகும். நம்மால் யாருக்கும் தீமை விளையக்கூடாது. பாவங்களே பெருகும் வகையில் செயல்பட்டால் துயரம் நம்மைச் சூழ்ந்து விடும் கற்ற நன்மக்கள் ஒருபோதும் பாவங்களைச் செய்ய மாட்டார்கள். கற்றும் ஞானம் பெறாதவனே பாவங்களைச் செய்கிறான். அவற்றை அனுபவிக்க மறுபிறப்புப் பெற்று தண்டனை அடைகிறான். அதனால்தான் உடல் மட்டுமே மடிகிறது. உயிர் மடிவதில்லை என்று சொல்லப்படுகிறது. துயரத்தைத் தவிர்க்க

முக்தி பெறுவதுதான் ஒரே வழி. முக்தி பெறுவதற்கான வழியோ கடவுளிடம் பக்தி செலுத்துவதுதான். கடவுளே அனைத்தினும் பெரியவர். எல்லையற்ற சக்தியுள்ளவராக எல்லாம் அறிந்தவராக - நாம் அவரை வணங்குகிறோம். சூரியன், சந்திரன், மனிதன் மற்றும் விலங்குகள் வழியாகக் கூட கடவுள் தம்மை நமக்குக் காட்டுகிறார். ஆகவே நம்மைச் சுற்றிலும் கடவுள் எங்கும் நிறைந்திருப்பதை நாம் உணர வேண்டும். நாம் ஒவ்வொருவரையும் நமக்குச் சமமாகக் கருத வேண்டும். உயர் பிறப்பு தாழ் பிறப்பு என்று எதுவுமே இல்லை. எல்லா உயிருக்கும் நன்மையே செய்ய வேண்டும். உள்ளபடியே இதுதான் கடவுளுக்குச் செய்யும் உண்மையான தொண்டு. இவ்விதத் தொண்டு செய்பவர்களே முக்தி அடைகிறார்கள். நசிகேதா! நீ ஒரு பக்தனாக மாறி எல்லாருக்கும் நன்மை செய்யலாம்."

இவ்வாறு யமதருமராஜன் தன் அறிவுரையை முடித்தான். நசிகேதன் இந்த ஞானம் பெற்றவுடன் அடியோடு மாறினான். அவனுடைய முகம் பொலிவுற்றுத் தேவர்களின் முகம் போல ஒளி வீசியது. உடனே மகிழ்ச்சி நிறப்பியவனாய் அவன் "நீதிக்கு அரசனே! உங்களிடம் நான் விடை பெறலாமா? இந்த உலகிலுள்ள அனைவருக்கும் என்னுடைய நன்றி; வணக்கம்" என்று சொன்னான். தேவலோகத்தில் மகிழ்ச்சி பொங்கியது. கடவுளர்கள் அவனை வாழ்த்திப் பூமாரி பொழிந்தனர்.

அப்போது யமராஜன் "நசிகேதா! நீ போய் மண்ணுலகத்தில் இந்த அறிவைப் பரப்பு. அங்கே சென்று சென்று உன் தந்தையோடு சேர்த்துகொள்." என்று சொல்லி நசிகேதன் வழியாக உலகத்தோர் எல்லோரும் கேட்கும்படி அவர்களை நோக்கி, "மண்ணுலக மக்களே, அறியாமையி லிருந்து விழித்து எழுங்கள். எச்சரிக்கையொடு வாழுங்கள்! ஞானிகள் காட்டிய நன்னெறியையே பின்பற்றுங்கள்!!" என்று சொல்லி ஆசி கூறினான்.

### மண்ணுலகிற்குத் திரும்பினான்

தேவலோகத்தில் யமராஜன் கொடுத்த குரல் முழக்கம் உலகம் முழுமையும் எதிரொலித்துக் கேட்டது. புனித பாரதத்தில் உள்ள எல்லாத் தவச் சாலைகளும் இச்செய்தியைப் பெற்றன. இந்த ஒலி வாஜசிரவஸரின்யாக மண்டபத்தையும் அடைந்து எதிரொலித்தது. வாஜசிரவஸரும் மற்ற முனிவர்களும் கேட்டு வியந்து வெளியில் ஓடி வந்து

வானத்தைப் பார்த்தார்கள். அப்போது ஒளியுள்ள ஓர் உருவம் மண்ணுலகத்தை நோக்கி இறங்குவதைக் கண்டார்கள். அது நேரே தங்கள் யாக மண்டபத்திற்கு அருகில் வந்து இறங்கியது. எல்லோரும் எதுவும் புரியாமல் யாக சாலைக்குள்ளே வந்தனர். அப்போது அங்கே அதுவரை தியானத்தில் வீற்றிரந்த நிலையிலிருந்து நசிகேதன் மெதுவாக எழுந்து நின்றான். கைகளைக் குவித்துக் கொண்டு வந்து முதலில் தந்தையையும் தாயையும் வணங்கிப் பின், பிற முனிவர்களையும் வணங்கினான்.

வாஜசிரவஸர் தன் மகனை ஆரத்தழுவி, “என் அருமை மகனே! தயவு செய்து என்னை மன்னித்துவிடு” என்று சொன்னார். தாய் விசுவவரதேவி மகிழ்ச்சியால் தன்னையே மறந்து “அருமைக் குழந்தாய்! ஒரு பேரொளி உன்னைச் சுற்றி வட்டமிடுகிறதே! இதனை எப்படிப் பெற்றாய்? உன் கழுத்தில் ஒரு மாலை உள்ளதே! இந்த இரத்தின மாலையை யார் கொடுத்தார்” என்று விசாரித்தார்.

உடனே நசிகேதன் அங்கே கூடியிருந்தவர்களுக்குத் தான் சென்றது முதல் நிகழ்ந்தவற்றையெல்லாம் சொன்னான். நசிகேதனின் சாதனையைக் கேட்டு எல்லோரும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துப் பிரமித்தனர். எதுவும் பேச முடியாமல் வியப்பினால் திக்குமுக்காடினர். பின்பு அவனை வியந்து வாழ்த்தினர். முனிவர்கள் வாஜசிரவஸரை நோக்கி, “வாஜசிரவஸரே! முனிபுங்கவரே! உண்மையில் உங்கள் மகன் சிறந்த தீரன்: எம்மினும் உயர்ந்தவன். யமதர்மனைக் கண்டு பேசி யாரும் பெறமுடியாத ஞானத்தைப் பெற்று வந்திருக்கிறான். அவன் பொற்றோர்களாகிய நீங்கள் இருவரும் பெரும் பேறு பெற்றவர்கள். அவனால் இந்த யாகத்தினுடைய பன் இரட்டிபபாகிவிட்டது. ஆகவே நீங்கள் கடவுள் தன்மை அடையலாம். இந்த உலகத்திற்கு, “நசிகேத அக்னி” என்னுடி அறிவோடு வந்துள்ளான். அவன் போற்றப்பட வேண்டும். அஃதோடு மட்டுமல்லாமல் ஆத்ம அறிவையும் (ஆத்ம வித்யா) கொண்டு வந்திருக்கிறான். அவன் சிறுவனாக இருந்தாலும் முனிவர் தன்மையை அடைந்து விட்டன. அவனுடைய பெயர் வேத நூல்களில் நிலை பெற்றுவிடும். ஆகவே அவன் அழிவற்றவனாக இருப்பான்” என்றனர். நசிகேதன் என்ற முனிகுமரான் எப்படி ஒரு பெரிய மகிரிஷியானான் எனப்படும் கதை இதுவே.

## கடோபநிஷதம்

நசிகேதனுடைய இந்தக் கதை புனித நூலான வேதத்தில் விவரிக்கப்பட்டிருக்கிறது. கிருஷ்ண யஜுர் வேதத்தில்

கடோபநிஷதம் என்னும் ஒரு பகுதி உள்ளது. இது விரிவாக நசிகேதன் யமராஜனைச் சந்தித்தது பற்றியும், அவன் நசிகேதனுக்கு வரங்கள் கொடுத்தது பற்றியும், அவனுக்கு யமராஜன் செய்த போதனைகள் பற்றியும், பிறவற்றையும் விளக்கிச் சொல்கிறது. இந்நூல் இன்றும் சான்றோர்களால் மிகுந்த பக்தியோடு வாசிக்கப்படுகிறது. இது உலகத்தின் பல்வேறு மொழிகளிலும் பெயர்க்கப்பட்டுள்ளது. பாரத நாட்டிற்கு வெளியில் இருக்கும் மக்கள் கூட இதுபற்றி விளக்கவுரை எழுதியுள்ளனர். இதன் கதாநாயகனான முனிவன் நசிகேதன் நம்முடைய பாரத நாட்டில் தோன்றியவன் என்பதால் பெருமைப்படுத்துகிறோம்.

ஆத்மஞான அறிவை தேவலோகத்திலிருந்து நசிகேதன் பூமிக்குக் கொண்டு வந்தான். அவன் வயதில் இளைஞனாயினும் அறிவிலே முனிவர் நிலையை அடைந்தான். யமராஜனிடம் அறிவு தான் தலைமையானது என்பதை விவாதித்தவன் அவன்தான். அவன் உலகுக்கு நன்மையைத் தவிர வேறெதையும் விரும்பவில்லை. தேவலோகத்தில் இருந்து ஞானதீபத்தை மண்ணுலகத்துக்குக் கொண்டு வந்து ஒளியூட்டிய பரமோபகாரி அவன். அவனைப் போற்றி அவன் பெற்ற ஞானத்தை நாமும் பெற விரும்புவோமாக!

கடோபநிஷத்தில் ஆசிரியரும் மாணவர்களும் சேர்ந்து செய்யும் பிரார்த்தனை. பின்வருமாறு உள்ளது.

**ஓம் ஸஹ நாவவது**
**ஸஹ நௌ புனக்து**
**ஸஹ வீர்யம் கரவா வஹை**
**தேஜஸ்வி நாவதீதம் அஸ்து**
**மா வித்விஷாவஹை**
**ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி:**

**இதன் பொருள்**

“கடவுள் நம்மைக் காத்தருளட்டும். அவர் நம்மைப் போஷிக்கட்டும். தைரியத்தோடு காரண காரியமுள்ள செயல்களில் நாம் ஈடுபடுவோமாக. நம்முடைய உன்னதமான படிப்பு ஒளி வீசட்டும். நம்மிடையே வெறுப்புணர்வுகள் அணுகாத வகையில் நாம் வாழ்வோம்.”

# ஓம் நமோ நாராயணாய

ஓம் நமோர் நாராயணாய என்று சொல்லும் பொழுது ஸ்ரீமன் நாராயணன் என்ற பரம்பொருளின் முன்னிலையில் பக்தி பூர்வமாக ஒருவன் பணிந்து விடுகிறான். பணிவுதான் ஒருவனை உயர்த்துகிறது.

– சுவாமி சின்மையானந்தா

'ஓம்' ,என்பது ஓரெழுத்தாகவும் "நம" என்பது இரண்டெழுத்தாகவும் "நாராயணாய" என்பது ஐந்தெழுத்தாகவும் ஆக மொத்தம் எட்டெழுத்தாகவும் சேர்ந்து நாராயண அஷ்டாக்ஷரம் அஷ்டாக்ஷரத்தை தியானிப்பவர்களுக்கு நிறைந்த ஆயுள், ஆபத்துக்கள் நீங்குதல் முகவசீகரம் தீமைகள் துன்பங்கள் தொடராது எல்லாச் செல்வங்களும் கிட்டும் என்று நாராயண உபநிஷத்தில் விவரிக்கப்பட்டுள்ளது.

"குலம் தரும் செல்வந்தந்திடும் அடியார்
படுதுயராயின வெல்லாம்
நிலந்தரச் செய்யுள் நீள்வீசும் பருளும்
அருளொடு பெருநில மளிக்கும்
வலந்தரும் மற்றுந் தந்திடும் பெற்ற
தாயினு மாயின செய்யும்
நலந்தருஞ் சொல்லை நான் கண்டு கொண்டேன்
நாராயணா வென்னும் நாமம்"

# குறை ஒன்றுமில்லை

குறை ஒன்றுமில்லை மறை மூர்த்தி கண்ணா
குறை ஒன்றுமில்லை கண்ணா
குறை ஒன்றுமில்லை கோவிந்தா!

கண்ணுக்குத் தெரியாமல் நிற்கின்றாய் கண்ணா!
கண்ணுக்குத் தெரியாமல் நின்றாலும் எனக்கு
குறை ஒன்றுமில்லை கண்ணா!

வேண்டியதைத் தந்திட வேங்கடேசன் நீ இருக்க,
வேண்டியது வேறு இல்லை, மறை மூர்த்தி
கண்ணா மணிவண்ணா மலையப்பா!
கோவிந்தா! கோவிந்தா!

சிலையின் பின் நிற்கின்றாய் கண்ணா! உன்னை
மறையோதும் ஞானியர் மட்டுமே காண்பார்:
என்றாலும் குறை ஒன்றும் எனக்கில்லை கண்ணா!

குன்றின் மேல் கல்லாகி நிற்கின்ற வரதா,
குறை ஒன்றுமில்லை மறை மூர்த்தி கண்ணா!
மணிவண்ணா, மலையப்பா, கோவிந்தா கோவிந்தா!

கலி நாளுக்கிரங்கி கல்லிலே இறங்கி
நிலையாக கோயிலில் நிற்கின்றாய் கேசவா,
குறை ஒன்றுமில்லை மறை மூர்த்தி கண்ணா
யாரும் மறுக்காத மலையப்பா உன் மார்பில்
ஏதும் தர நிற்கும் கருணைக் கடலன்னை
என்றும் இருந்திட ஏது குறை எனக்கு,
ஒன்றும் குறையில்லை மறை மூர்த்தி கண்ணா.
மணிவண்ணா மலையப்பா கோவிந்தா
கோவிந்தா கோவிந்தா கோவிந்தா கோவிந்தா.

The Above composition on Lord Venkateswara was composed by the eminent scholar statesman Rajaji. an incisive thinker and writer ofeminence. This composition has been sung by Srimathi M.S. Subbulakshmi.



சேஷவாகன சேவை
ஸ்ரீநிவாசப் பெருமாள், வஞ்சுளவல்லித் தாயார்
நாச்சியார் கோவில்

# ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம்

ஶுக்லாம்ப3ரத4ரம் விஷ்ணும் ஶஶிவர்ணம் சதுர்ப்பு4ஜம் |
ப்ரஸந்நவத3நம் த்4யாயேத் ஸர்வவிக்4நோபஶாந்தயே || 1

யஸ்ய த்விரத3வக்த்ராத்யா: பாரிஷத்3யா: பரஶ்ஶதம் |
விக்4நம் நிக்4நந்தி ஸததம் விஷ்வக்ஸேநம் தமாஶ்ரயே || 2

வ்யாஸம் வஸிஷ்ட2நப்தாரம் ஶக்தே: பௌத்ரமகல்மஷம் |
பராஶராத்மஜம் வந்தே3 ஶுகதாதம் தபோநிதி4ம் || 3

வ்யாஸாய விஷ்ணுரூபாய வ்யாஸரூபாய விஷ்ணவே |
நமோ வை ப்3ரஹ்மநித4யே வாஸிஷ்டா2ய நமோ நம: || 4

அவிகாராய ஶுத்தா4ய நித்யாய பரமாத்மநே |
ஸதைகரூபரூபாய விஷ்ணவே ஸர்வ ஜிஷ்ணவே || 5

யஸ்ய ஸ்மரணமாத்ரேண ஜன்மஸம்ஸாரபந்த4நாத் |
விமுச்யதே நமஸ்தஸ்மை விஷ்ணவே ப்ரப4விஷ்ணவே || 6

ஓம் நமோ விஷ்ணவே ப்ரப4விஷ்ணவே ||

ஸ்ரீ வைஶம்பாயந உவாச—

ஶ்ருத்வா த4ர்மாநஶேஷேண பாவநாநி ச ஸர்வஶ: |
யுதிஷ்டி2ர: ஶாந்தநவம் புநரேவாப்4யபா4ஷத || 1

யுதிஷ்டிர உவாச—

கிமேகம் தை3வதம் லோகே கிம் வாப்யேகம் பராயணம் |
ஸ்துவந்த: கம் கமர்ச்சந்த: ப்ராப்நுயுர் மாநவாஶ்ஶுப4ம் || 2

கோ த4ர்ம: ஸர்வ த4ர்மாணாம் ப4வத: பரமோ மத: |
கிம் ஜபந் முச்யதே ஜந்துர்ஜந்மஸம்ஸார ப3ந்த4நாத் || 3

ஸ்ரீ பீ4ஷ்ம உவாச—

ஜக3த்ப்ரபு4ம் தே3வதே3வம் அநந்தம் புருஷோத்தமம் |
ஸ்துவந்நாமஸஹஸ்ரேண புருஷ: ஸததோத்தி2த: || 4

தமேவ சார்ச்சயந்நித்யம் ப4க்த்யா புருஷமவ்யயம் |
த்யாயந் ஸ்துவந்நமஸ்யம்ஶ்ச யஜமாநஸ்தமேவ ச || 5

அநாதி நித4நம் விஷ்ணும் ஸர்வலோகமஹேஶ்வரம் |
லோகாத்4யக்ஷம் ஸ்துவந்நித்யம் ஸர்வது3க்கா2தி4கோ ப4வேத் || 6

ப்3ரஹ்மண்யம் ஸர்வத4ர்மஜ்ஞம் லோகாநாம் கீர்த்திவர்த்த4நம் |
லோகநாத2ம் மஹத்பூ4தம் ஸர்வபூ4தப4வோத்ப4வம் || 7

ஏஷ மே ஸர்வத4ர்மாணாம் த4ர்மோதி4கதமோ மத: |
யத் ப4க்த்யா புண்டரீகாக்ஷம் ஸ்தவைரர்ச்சேந்நர: ஸதா3 || 8

பரமம் யோ மஹத்தேஜ: பரமம் யோ மஹத்தப: |
பரமம் யோ மஹத்ப்3ரஹ்ம பரமம் ய: பராயணம் || 9

பவித்ராணாம் பவத்ரம் யோ மங்களாநாம் ச மங்களம் |
தை3வதம் தே3வதாநாம் ச பூ3தாநாம் யோSவ்யய: பிதா || 10

யத: ஸர்வாணி`பூ4தானி ப4வந்த்யாதியுகா3கமே |
யஸ்மிம்ஶ்ச ப்ரளயம் யாந்தி புநரேவ யுக3க்ஷயே || 11

தஸ்ய லோகப்ரதா4நஸ்ய ஜகந்நாத2ஸ்ய பூ4பதே |
விஷ்ணோர் நாமஸஹஸ்ரம் மே ஶ்ருணு பாபப4யாபஹம்: || 12

யானி நாமானி கௌ3ணானி விக்2யாதானி மஹாத்மந: |
ரிஷிபி4: பரிகீ3தானி தானி வக்ஷ்யாமி பூ4தயே || 13

ருஷிர்நாம் நாம் ஸஹஸ்ரஸ்ய வேத3வ்யாஸோ மஹாமுனி: |
ச2ந்தோSநுஷ்டுப் ததா2 தே3வோ ப4க3வாந் தே3வகீஸுத: || 14

அம்ருதாம்ஶூத்ப4வோ பீ3ஜம் ஶக்திர்தே3வகிநந்த3ந: |
த்ரிஸாமா ஹ்ருதயம் தஸ்ய ஶாந்த்யர்த்தே2 விநியுஜ்யதே || 15

விஷ்ணும் ஜிஷ்ணும் மஹாவிஷ்ணும் ப்ரப4விஷ்ணும் மஹேஶ்வரம் |
அநேகரூபதை3த்யாந்தம் நமாமி புருஷோத்தமம் | 16

அஸ்ய ஸ்ரீ விஷ்ணோர் தி3வ்ய ஸஹஸ்ரநாம ஸ்தோத்ர மஹாமந்த்ரஸ்ய, ஸ்ரீ வேத3 வ்யாஸோ ப4கவாந் ரிஷி:, அநுஷ்டுப்ச2ந்த; ஸ்ரீ மஹாவிஷ்ணு: பரமாத்மா ஸ்ரீ மந் நாராயணோ தே3வதா | அம்ருதாம்ஶூத்ப4வோ பா4நுரிதி பீஜம்; தே3வகீநந்த3ந: ஸ்ரஷ்டேதி ஶக்தி: ; உத்ப4வ : க்ஷோப4ணோ தே3வ இதி பரமோ மந்த்ர:; சங்க2ப்3ருந்நந்த3கீ சக்ரீதி கீலகம்; சார்ங்கத4ந்வா கதா3தர4 இத்யஸ்த்ரம்; ரதாங்கபாணிரக்ஷோப்4ய இதி நேத்ரம்; த்ரிஸாமா ஸாமக3: ஸாமேதி கவசம்; ஆநந்த3ம் பரப்3ரஹ்மேதி யோநி: ; ருது: ஸுத3ர்ஶந: கால இதி தி3க்பந்த: ; ஸ்ரீ விஶ்வரூப இதி த்4யாநம்; ஸ்ரீ மஹாவிஷ்ணு ப்ரீத்யர்த்தே2 ஸ்ரீ ஸஹஸ்ரநாம ஜபே விநியோக3: ||

## த்$^{4}$யாநம்

க்ஷீரோத$^{3}$ந்வத்ப்ரதே$^{3}$ஶே ஶுசிமணிவிலஸத்
ஸைகதே மௌக்திகாநாம்
மாலாக்லுப்தாஸநஸ்த$^{2}$: ஸ்படிகமணி நிபை$^{4}$ர்
மௌக்திகைர்மண்டி$^{3}$தாங்க$^{3}$: |
ஶுப்$^{4}$ரைரப்$^{4}$ரை ரத$^{3}$ப்ரை—
ருபரி விரசிதைர் முக்தபீயூஷவர்ஷை:
ஆநந்தீ$^{3}$ ந: புநீயா த$^{3}$ரிநளிந க$^{3}$தா$^{3}$
ஶங்க$^{2}$பாணிர் முகுந்த$^{3}$: || 1

பூ$^{4}$: பாதௌ$^{4}$ யஸ்ய நாபி$^{4}$ர் வியத$^{3}$ஸூரநிலஶ்
சந்த்ரஸூர்யௌ ச நேத்ரே
கர்ணாவாஶா: ஶிரோ த்$^{3}$யௌர்முக$^{2}$மபி த$^{3}$ஹநோ
யஸ்ய வாஸ்தேऽயமப்தி$^{4}$: |
அந்தஸ்த$^{2}$ம் யஸ்ய விஶ்வம் ஸூர நர க$^{2}$க$^{3}$கோ$^{3}$
போகிக$^{3}$ந்த$^{4}$ர்வ தை$^{3}$த்யை:
சித்ரம் ரம்ரம்யதே தம் த்ரிபு$^{4}$வந வபுஷம்
விஷ்ணுமீஶம் நமாமி || 2

## ஓம் நமோ பகவதே வாசுதேவாய

ஶாந்தாரம் பு$^{4}$ஜக$^{3}$ஶயநம் பத்ம$^{3}$நாப$^{4}$ம் ஸூரேஶம்
விஶ்வாதா$^{4}$ரம் க$^{3}$க$^{3}$நஸத்ருஶம் மேகவர்ணம் ஶூபா$^{4}$ங்கம் |

லக்ஷ்மீகாந்தம் கமலநயநம்
யோகி$^{3}$ஹ்ரு$^{3}$த் த்$^{4}$யாநக$^{3}$ம்யம்
வந்தே விஷ்ணும் ப$^{4}$வப$^{4}$யஹரம்
ஸர்வலோகைக நாத$^{4}$ம் || 3

மேக$^{4}$ஶ்யாமம் பீதகௌஶேயவாஸம்
ஸ்ரீவத்ஸாங்கம் கொஸ்துபோ$^{4}$த்பா$^{4}$ஸிதாங்கம் |
புண்யோபேதம் புண்ட$^{3}$ரீகாயதாக்ஷம்
விஷ்ணும் வந்தே$^{3}$ ஸர்வலோகைகநாத$^{2}$ம் || 4

ஸஶங்க சக்ரம் ஸகிரீட குண்டலம்
ஸபீதவஸ்த்ரம் ஸரஸீருஹேக்ஷணம் |
ஸஹாரவக்ஷஸ் ஸ்த$^{2}$ல ஶோபி$^{4}$கௌஸ்துப$^{4}$ம்
நமாமி விஷ்ணும் ஶிரஸா சதுர்ப்புஜம் || 5

சா2யாயாம் பாரிஜாதஸ்ய ஹேமஸிம்ஹாஸநோபரி |
ஆஸீநமம்பு3தஶ்யாமம், ஆயதாக்ஷமலங்க்ருதம் || 6
சந்த்3ராநநம் சதுர்பா3ஹும் ஶ்ரீவத்ஸாங்கித வக்ஷஸம் |
ருக்மிணீ ஸத்யபா4மாப்4யாம் ஸஹிதம் க்ருஷ்ணமாஶ்ரயே || 7

## ஹரி: ஓம்

விஶ்வம் விஷ்ணுர் வஷட்காரோ பூ4தப4வ்ய ப4வத்ப்ரபு4: |
பூ4தக்ருத் பூ4தப்4ருத் பா4வோ பூ4தாத்மா பூ4தபா4வந: || 1
பூதாத்மா பரமாத்மா ச முக்தாநாம் பரமா க3தி: |
அவ்யய: புருஷஸ்ஸாக்ஷீ க்ஷேத்ரஜ்ஞோऽக்ஷர ஏவ ச || 2
யோகோ3 யோகவிதா3ம் நேதா ப்ரதா4நபுருஷேஶ்வர: |
நாரஸிம்ஹவபு: ஶ்ரீமாந் கேஶவ: புருஷோத்தம: || 3
ஸர்வஸ் ஶர்வஶ் ஶிவஸ்தா2ணுர் பூதாதிர் நிதி4ரவ்யய: |
ஸம்ப4வோ பா4வநோ ப4ர்த்தா ப்ரப4வ: ப்ரபு4ரீஶ்வர: || 4
ஸ்வயம்பூ4ஶ் ஶம்பு4ராதித்ய: புஷ்கராக்ஷோ மஹாஸ்வந: |
அநாதி3நிதநோ தா4தா விதா4தா தா4துருத்தம: || 5
அப்ரமேயோ ஹ்ருஷீகேஶ: பத்மநாபோऽமரப்ரபு: |
விஶ்வகர்மா மநுஸ்த்வஷ்டா ஸ்த2விஷ்ட: ஸ்த2விரோ த்4ருவ: || 6
அக்3ராஹ்யஶ் ஶாஶ்வத: க்ருஷ்ணோ லோஹிதாக்ஷ: ப்ரதர்த3ந: |
ப்ரபூ4தஸ் த்ரிககுத்தா4ம பவித்ரம் மங்களம் பரம்: || 7
ஈஶாந: ப்ராணத3: ப்ராணோ ஜ்யேஷ்டஸ் ஶ்ரேஷ்ட: ப்ரஜாபதி: |
ஹிரண்யகர்ப்போ4 பூகர்ப்போ4 மாத4வோ மது4ஸூத4ந: || 8
ஈஶ்வரோ விக்ரமீ த4ந்வீ மேதா4வீ விக்ரம: க்ரம: |
அநுத்தமோ து4ராத4ர்ஷ: க்ருதஜ்ஞ: க்ருதிராத்மவாந்: || 9
ஸுரேஶஶ் ஶரணம் ஶர்ம விஶ்வரேதா: ப்ரஜாப4வ: |
அஹஸ் ஸம்வத்ஸரோ வ்யாள: ப்ரத்யயஸ் ஸர்வத3ர்ஶந: || 10
அஜஸ் ஸர்வேஶ்வரஸ் வித்த4ஸ் ஸித்திஸ் ஸர்வாதிரச்யுத: |
வ்ருஷாகபிரமேயாத்மா ஸர்வயோக விநிஸ்ருத: || 11
வஸுர்ம வஸுமநாஸ் ஸத்யஸ் ஸமாத்மா ஸம்மிதஸ் ஸம: |
அமோக4: புண்ட3ரீகாக்ஷோ வ்ருஷகர்மா வ்ருஷாக்ருதி: || 12
ருத்ரோ ப3ஹுஶிரா ப3ப்4ருர் விஶ்வயோநிஶ் ஶுசிஶ்ரவா: |
அம்ருதஶ் ஶாஶ்வதஸ் ஸ்தா2ணுர் வராரோஹோ மஹாதபா: || 13

ஸர்வக3ஶ் ஸர்வித்3பா4நுர் விஷ்வக்ஸேநோ ஜநார்த்த3ந: |
வேதோ3 வேத3வித3வ்யங்கோ3 வேதா3ங்கோ3 வேத3வித் கவி: || 14

லோகாத்4யக்ஷஸ் ஸூராத்4யக்ஷோ த4ர்மாத்யக்ஷ: க்ருதாக்ருத: |
சதுராத்மா சதுர்வ்யூஹஶ் சதுர்தம்ஷ்ட்ரஶ் சதுர்புஜ: || 15

ப்ராஜிஷ்ணுர் போஜநம் போக்தா ஸஹிஷ்ணுர்: ஜகதாதிஜ4: |
அநகோ4 விஜயோ ஜேதா விஶ்வயோநி: புநர்வஸு: || 16

உபேந்த்3ரோ வாமந: ப்ராம்ஶு: அமோக4ஶ் ஶுசிரூர்ஜித: |
அதீந்த்3ரஸ் ஸங்க்3ரஹஸ் ஸர்கோ3 த்4ருதாத்மா நியமோ யம: || 17

வேத்யோ வைத்3யஸ் ஸதா3யோகீ3 வீரஹாம மாத3வோ மது4: |
அதீந்த்3ரியோ மஹாமாயோ மஹோத்ஸாஹோ மஹாப3ல: || 18

மஹாபுத்தி4ர் மஹாவீர்யோ மஹாஶக்திர் மஹாத்3யுதி: |
அநிர்தே3ஶ்யவபு: ஸ்ரீமாநமேயாத்மா மஹாத்3ரி த்4ருத்(க்): || 19

மஹேஷ்வாஸோ மஹீப4ர்த்தா ஸ்ரீநிவாஸஸ் ஸதாம் க3தி: |
அநிருத்த4ஸ் ஸூராநந்தோ3 கோ3விந்தோ3 கோ3விதாம் பதி: || 20

மரீசிர் த3மநோ ஹம்ஸஸ் ஸூபர்ணோ புஜகோத்தம: |
ஹிரண்யநாப4ஸ் ஸூதபா: பத்மநாப4: ப்ரஜாபதி: || 21

அம்ருத்யுஸ் ஸர்வத்3ருக் ஸிம்ஹஸ் ஸந்தா4தா ஸந்தி4மாந்
ஸ்தி2ர: |
அஜோ துர்மர்ஷணஶ் ஶாஸ்தா விஶ்ருதாத்மா ஸூராரிஹா: || 22

கு3ருர் கு3ருதமோ தா4ம ஸத்யஸ் ஸத்யபராக்ரம: |
நிமிஷோsநிமிஷஸ் ஸ்ரக்3வீ வாசஸ்பதி ருதா3ரதீ4: || 23

அக்3ரணீர் க்3ராமணீ: ஸ்ரீமாந் ந்யாயோ நேதா ஸமீரண: |
ஸஹஸ்ரமூர்த்தா4 விஶ்வாத்மா ஸஹஸ்ராக்ஷஸ் ஸஹஸ்ரபாத்: || 24

ஆவர்த்தநோ நிவ்ருத்தாத்மா ஸம்வ்ருதஸ் ஸம்ப்ரமர்த3ந: |
அஹஸ்ஸம்வர்த்தகோ வஹ்நி ரநிலோ த4ரணீத4ர: || 25

ஸூப்ரஸாத3: ப்ரஸந்நாத்மா விஶ்வஸ்(த்)ருக் விஶ்வபு4க் விபு4: |
ஸத்கர்த்தா ஸத்க்ருதஸ் ஸாது4ர் ஜஹ்நுர் நாராயணோ நர: || 26

அஸங்க்யேயோऽப்ரமேயாத்மா விஶிஷ்டஶ் ஶிஷ்டக்ருச் சுசி: |
ஸித்தா4ர்த்த2ஸ் ஸித்த4ஸங்கல்பஸ் ஸித்தி4த3ஸ் ஸித்தி4ஸாத4ந: || 27

வ்ருஷாஹீ வ்ருஷபோ4 விஷ்ணுர் வ்ருஷபர்வா வ்ருஷோத3ர: |
வர்த்த4நோ வர்த்த4மாநஶ்ச விவிக்தஶ் ஶ்ருதிஸாக3ர: || 28

ஸுபு3ஜோ து3ர்த்த4ரோ வாக்3மீ மஹேந்த்ரோ வஸுதோ3 வஸு: |
நைகரூபோ ப்3ருஹத்3ரூபஶ் ஶிபிவிஷ்ட: ப்ரகாஶந: || 29

ஓஜஸ்தேஜோ த்3யுதிதர: ப்ரகாஶாத்மா ப்ரதாபந: |
ருத்த4ஸ் ஸ்பஷ்டாக்ஷரோ மந்த்ரஸ் சந்த்ராம்ஶுர் பா4ஸ்கரத்3யுதி: || 30

அம்ருதாம்ஶூத்ப4வோ பா4நு: ஶஶபி3ந்து3ஸ் ஸுரேஶ்வர: |
ஔஷத4ம் ஜக3தஸ்ஸேதுஸ் ஸத்யத4ர்ம பராக்ரம: || 31

பூ4தப4வ்ய ப4வந்நாத2: பவந: பாவநோऽநல: |
காமஹா காமக்ருத் காந்த: காம: காமப்ரத3:ம ப்ரபு4: || 32

யுகா3தி3க்ருத் யுகா3வர்த்தோ நைகமாயோ மஹாஶந: |
அத்3ருஶ்யோ வ்யக்தரூபஶ்ச ஸஹஸ்ரஜித3நந்தஜித்: || 33

இஷ்டோऽவிஶிஷ்டஸ் ஶிஷ்டேஷ்ட: ஶிகண்டீ3 நஹுஷோ வ்ருஷ: |
க்ரோத3ஹா க்ரோத3க்ருத் கர்த்தா விஶ்வபா3ஹுர் மஹீத4ர: || 34

அச்யுத: ப்ரதி2த: ப்ராண: ப்ராணதோ3 வாஸவாநுஜ: |
அபாம் நிதிரதிஷ்டா2நம் அப்ரமத்த: ப்ரதிஷ்டி2த: || 35

ஸ்கந்தஸ் ஸ்கந்த3த4ரோ து4ர்யோம வரதோ3 வாயுவாஹந: |
வாஸுதே3வோ ப்ருஹத்பா4நு ராதி3தே3வ: புரந்த3ர: || 36

அஶோகஸ் தாரணஸ் தாரஶ் ஶூர: ஶௌரிர் ஜநேஶ்வர: |
அநுகூலஶ் ஶதாவர்த்த: பத்3மீ பத்3மநிபே4க்ஷண: || 37

பத்3மநாபோ4ऽரவிந்தா3க்ஷ: பத்3மகர்ப்ப4ஶ் ஶரீரப்4ருத் |
மஹர்த்தி4ர் ருத்தோ4 வ்ருத்தா4த்மா மஹாக்ஷோ கருட3த்3வஜ: || 38

அதுலஶ் ஶரபோ4 பீ4மஸ் ஸமயஜ்ஞோ ஹவிர்ஹரி: |
ஸர்வலக்ஷண லக்ஷண்யோ லக்ஷ்மீவாந் ஸமிதிஞ்ஜய: || 39

விக்ஷரோ ரோஹிதோ மார்கோ3 ஹேதுர் தா3மோத3ரஸ் ஸஹ: |
மஹீத4ரோ மஹாபா4கோ3 வேக3வாநமிதாஶந: || 40

உத்ப4வ: க்ஷோப4ணோ தே3வ: ஸ்ரீ கர்ப்ப4: பரமேஶ்வர: |
கரணம் காரணம் கர்த்தா விகர்த்தா க3ஹநோ கு3ஹ: || 41

வ்யவஸாயோ வ்யவஸ்தா2நஸ் ஸம்ஸ்தா2நஸ் ஸ்தா2நதோ3 த்4ருவ:|
பரர்த்தி: பரமஸ்பஷ்ட: துஷ்ட: புஷ்ட: ஶுபே4க்ஷண: || 42

ராமோ விராமோ விரதோ(ஜோ) மார்கோ3 நேயோ நயோऽநய: |
வீரஶ் ஶக்திமதாம் ஶ்ரேஷ்டோ2 த4ர்மோ த4ர்ம விது3த்தம: || 43

வைகுண்ட2: புருஷ ப்ராண:ப்ராணத3: ப்ரணம: ப்ருது2: |
ஹிரண்யகர்ப்ப4ஶ் ஶத்ருக்நோ வ்யாப்தோ வாயுரதோ4க்ஷஜ: || 44

ருதுஸ் ஸுத3ர்ஶந: கால: பரமேஷ்டீ2 பரிக்3ரஹ: |
உக்3ரஸ் ஸம்வத்ஸரோ த3க்ஷோ விஶ்ராமோ விஶ்வத3க்ஷிண: ||45

விஸ்தாரஸ் ஸ்தா2வரஸ்தாணு: ப்ரமாணம் பீ3ஜமவ்யயம் |
அர்த்தோ2ऽநர்த்தோ2 மஹாகோஶோ மஹாபோ4கோ3 மஹாத4ந: ||
46

அநிர்விண்ணஸ் ஸ்த2விஷ்டோ பூ4ர் த4ர்மயூபோ மஹாமக2: |
நக்ஷத்ரநேமிர் நக்ஷத்ரீ க்ஷம: க்ஷாமஸ் ஸமீஹந: || 47

யஜ்ஞ இஜ்யோ மஹேஜ்யஶ்ச க்ரதுஸ் ஸத்ரம் ஸதாம் க3தி: |
ஸர்வத3ர்ஶீ நிவ்ருத்தாத்மா ஸர்வஜ்ஞோ ஜ்ஞாநமுத்தமம்: || 48

ஸுவ்ரத2ஸ் ஸுமுகஸ் ஸூக்ஷ்மஸ் ஸுகோ4ஷஸ் ஸுக2தஸ் ஸுஹ்ருத்|
மநோஹரோ ஜிதக்ரோதோ4 வீரபா3ஹுர் விதா3ரண: || 49

ஸ்வாபந: ஸ்வவஶோ வ்யாபீ நைகாத்மா நைககர்மக்ருத் |
வத்ஸரோ வத்ஸலோ வத்ஸீ ரத்நகர்ப்போ4 த4நேஶ்வர: || 50

த4ர்மகு3ப் த4ர்மக்ருத் த4ர்மீ ஸதக்ஷரமஸத்க்ஷரம் |
அவிஜ்ஞாதா ஸஹஸ்ராம்ஶுர் விதா4தா க்ருதலக்ஷண: || 51

க3ப4ஸ்திநேமிஸ் ஸத்வஸ்த2ஸ் ஸிம்ஹோ பூ4தமஹே(ஸி)ஶ்வர: |
ஆதி3தே3வோ மஹாதே3வோ தேவேஶோ தே3வப்4ருத்கு3ரு: || 52

உத்த்ரோ கோ3பதிர் கோ3ப்தா ஜ்ஞாநக3ம்ய: புராதந: |
ஶரீரபூ4தப்4ருத் போ4க்தா கபீந்த்ரோ பூ4ரித3க்ஷிண: || 53

ஸோமபோऽம்ருதபஸ் ஸோம: புருஜித் புருஸத்தம: |
விநயோ ஜயஸ் ஸத்யஸந்தோ4 தாஶார்ஹஸ் ஸாத்வதாம் பதி: ||
54

ஜீவோ விநயிதா ஸாக்ஷீ முகுந்தோ3ऽமிதவிக்ரம: |
அம்போ4நிதி4 ரநந்தாத்மா மஹோத3தி4ஶயோऽந்தக:: || 55

அஜோ மஹார்ஹஸ் ஸ்வாபா4வ்யோ ஜிதாமித்ர: ப்ரமோத3ந: |
ஆநந்தோ3 நந்த3நோ நந்த3ஸ் ஸத்யத4ர்மா த்ரிவிக்ரம:: || 56

மஹர்ஷி: கபிலாசார்ய: க்ருதஜ்ஞோ மேதி3நீபதி: |
த்ரிபத3ஸ் த்ரித3ஶாத்4யக்ஷோ மஹாஶ்ருங்க: க்ருதாந்தக்ருத்: || 57

மஹாவராஹோ கோவிந்த3ஸ் ஸுஷேண: கநகாங்க3தீ |
குஹ்யோ கபீ4ரோ க3ஹநோ கு3ப்தஶ் சக்ரகதா3த4ர: || 58

வேதா3ஸ் ஸவாங்கோऽஜித: க்ருஷ்ணோ த்ருட4ஸ்
ஸங்கர்ஷணோऽச்யுத:|
வருணோ வாருணோத வ்ருக்ஷ: புஷ்கராக்ஷோ மஹாமநா: || 59

ப4கவாந் ப4கஹா நந்தீ3 வநமாலீ ஹலாயுத4: |
ஆதி3த்யோ ஜ்யோதிராதி3த்யஸ் ஸஹிஷ்ணுர் க3திஸத்தம: || 60

ஸுத4ந்வா க2ண்ட3பரஶுர் தா3ருணோ த்3ரவிணப்ரத3: |
தி3விஸ்ப்ருக் ஸர்வத்3ருக் வ்யாஸோ வாசஸ்பதி ரயோநிஜ: || 61

த்ரிஸாமா ஸாமக3ஸ் ஸாம நிர்வாணம் பே4ஷஜம் பி4ஷக் |
ஸந்யாஸக்ருச் சமஶ் ஶாந்தோ நிஷ்டா2ம ஶாந்தி: பராயணம்: || 62

ஶுபாங்க3ஸ் ஶாந்தித3ஸ் ஸ்ரஷ்டா குமுத3: குவலேஶய: |
கோ3ஹிதோ கோ3பதிர் கோ3ப்தா வ்ருஷபா4க்ஷோ வ்ருஷப்ரிய: ||
63

அநிவர்த்தீ நிவ்ருத்தாத்மா ஸம்க்ஷேப்தா க்ஷேமக்ருச்சி2வ: |
ஸ்ரீவத்ஸவக்ஷாஸ் ஸ்ரீவாஸ: ஸ்ரீபதிஸ் ஸ்ரீமதாம்வர: || 64

ஸ்ரீத3ஸ் ஸ்ரீஶஸ் ஸ்ரீநிவாஸஸ் ஸ்ரீநிதி4ஸ் ஸ்ரீவிபா4வந: |
ஸ்ரீத4ரஸ் ஸ்ரீகரஸ் ஶ்ரேயஸ் ஸ்ரீமாந் லோகத்ரயாஶ்ரய: || 65

ஸ்வக்ஷஸ் ஸ்வங்க3ஸ் ஶதாநந்தோ3 நந்தி3ர் ஜ்யோதிர்
க3ணேஶ்வர:|
விஜிதாத்மா விதே4யாத்மா ஸத்கீர்த்திஶ்ச்சி2ந்நஸம்ஶய: || 66

உதீ3ர்ணஸ் ஸர்வதஸ்சக்ஷு ரநீஶஸ் ஶாஶ்வதஸ்தி2ர: |
பூ4ஶயோ பூ4ஷணோ பூ4திர(வி)ஶோகஶ் ஶோகநாஶந: || 67

அர்ச்சிஷ்மா நர்ச்சித: கும்போ4 விஶுத்தா4த்மா விஶோத4ந: |
அநிருத்தோ4ऽப்ரதிரத2: ப்ரத்3யும்நோऽமிதவிக்ரம: || 68

காலநேமிநிஹா ஶௌஸ்ரி: ஶூரஶ் ஶூரஜநேஶ்வர: |
த்ரிலோகாத்மா த்ரிலோகேஶ: கேஶவ: கேஶிஹா ஹரி: || 69

காமதே3வ: காமபால: காமீ காந்த: க்ருதாக3ம: |
அநிர்தே3ஶ்யவபுர் விஷ்ணுர் வீரோऽநந்தோ த4நஞ்ஜய: || 70

ப்3ரஹ்மண்யோ ப்3ரஹ்மக்ருத் ப்3ரஹ்மா ப்3ரஹ்ம ப்3ரஹ்ம
விவர்த்த4ந: |
ப்3ரஹ்மவித் ப்3ராஹ்மணோ ப்3ரஹ்மீ ப்3ரஹ்மஜ்ஞோ
ப்3ராஹ்மணப்ரிய:|| 71

மஹாக்ரமோ மஹாகர்மா மஹாதேஜா மஹோரக3: |
மஹாக்ரதுர் மஹாயஜ்வா மஹாயஜ்ஞோ மஹாஹவி: || 72

ஸ்தவ்யஸ் ஸ்தவப்ரியஸ் ஸ்தோத்ரம் ஸதுதஸ் ஸ்தோதா ரணப்ரிய: |
பூர்ண: பூரயிதா புண்ய: புண்யகீர்த்தி ரநாமய:: || 73

மநோஜவஸ் தீர்த்த2கரோ வஸுரேதா வஸுப்ரத3: |
வஸுப்ரதோ3ம வாஸுதே3வோ வஸுர் வஸுமநா ஹவி: || 74

ஸத்கதி3ஸ் ஸத்க்ருதிஸ் ஸத்தா ஸத்பூ4திஸ் ஸத்பராயண: |
ஶூரஸேநோ யது3ஶ்ரேஷ்ட2ஸ் ஸந்நிவாஸஸ்ம ஸுயாமுந: || 75

பூ4தாவாஸோ வாஸுதேவஸ் ஸர்வாஸுநிலயோऽநல: |
த3ர்ப்பஹா த3ர்ப்பதோऽத்3ருப்தோ துர்த4ரோऽதாऽபராஜித: || 76

விஶ்வமூர்த்திர் மஹாமூர்த்திர் தீ3ப்தமூர்த்தி ரமூர்த்திமாந் |
அநேகமூர்த்தி ரவ்யக்தஸ் ஶதமூர்த்திஸ் ஶதாநந: || 77

ஏகோ நைகஸ் ஸவ: க: கிம் யத் தத் பத3மநுத்தமம் |
லோகப3ந்து4ர் லோகநாதோ2 மாத4வோ ப4க்தவத்ஸல: || 78

ஸுவர்ணவர்ணோ ஹேமாங்கோ3 வராங்கஶ் சந்தநாங்க3தீ |
வீரஹா விஷமஶ் ஶூந்யோ க்ருதாஶீ ரசலஶ்சல: || 79

அமாநீ மாநதோ3 மாந்யோ லோகஸ்வாமீ த்ரிலோகத்4ருத் |
ஸுமேதா4 மேத4ஜோ த4ந்யஸ் ஸத்யமேதா4 த4ராதர: || 80

தேஜோவ்ருஷோ த்3யுதித4ரஸ் ஸர்வஶஸ்த்ரப்4ருதாம் வர: |
ப்ரக்3ரஹோ நிக்3ரஹோ வ்யக்3ரோ நைகஶ்ருங்கோ3 க3தா3க்ரஜ:||
81

சதுர்மூர்த்திஶ் சதுர்பா3ஹுஶ் சதுர்வ்யூஹஶ் சதுர்க3தி: |
சதுராத்மா சதுர்ப்பா4வஶ் சதுர்வேத3விதே3கபாத்: || 82

ஸமாவர்த்தோ நிவ்ருத்தாத்மா து3ர்ஜயோ து3ரதிக்ரம: |
து3ர்லபோ து3ர்கமோ து3ர்கோ து3ராவாஸோ து3ராரிஹா: || 83

ஶுபா4ங்கோ லோகஸாரங்க3: ஸுதந்துஸ் தந்துவர்த்த4ந: |
இந்த்ரகர்மா மஹாகர்மா க்ருதகர்மா க்ருதாக3ம: || 84

உத்ப4வஸ் ஸுந்த3ரஸ் ஸுந்தோ3 ரத்நநாப4ஸ் ஸுலோசந: |
அர்க்கோ வாஜஸநிஸ் ஶ்ருங்கீ ஜயந்தஸ் ஸர்வவிஜ்ஜயீ: || 85

ஸுவர்ணபிந்து3 ரக்ஷோப்4யஸ் ஸர்வவாகீ3ஶ்வரேஶ்வர: |
மஹாஹ்ரதோ3 மஹாக3ர்த்தோ மஹாபூ4தோ மஹாநிதி: || 86

குமுத3: குந்த3ர: குந்த3: பர்ஜந்ய: பவநோऽநில: |
அம்ருதாஶோऽம்ருதவபு: ஸர்வஜ்ஞஸ் ஸர்வதோமுக2: || 87

ஸுலப4ஸ் ஸுவ்ரதஸ் ஸித்த4ஸ் ஶத்ருஜிச் சத்ருதாபந: |
ந்யக்3ரோதோ3து3ம்ப3ரோऽஶ்வத்தஶ் சாணூராந்த்ர நிஷூத3ந: || 88

ஸஹஸ்ரார்ச்சிஸ் ஸப்தஜிஹ்வஸ் ஸப்தைதா4ஸ் ஸப்தவாஹந: |
அமூர்த்தி ரநகோ4ऽசிந்த்யோ ப4யக்ருத் ப4யநாஶந: || 89

அணுர் ப்3ருஹத் க்ருஶஸ் ஸ்தூ2லோ கு3ணப்4ருந் நிர்கு3ணோ மஹாந் |
அத்4ருதஸ் ஸ்வத்4ருதஸ் ஸ்வாஸ்ய: ப்ராக்வம்ஶோ வம்ஶவர்த்த4ந: || 90

பா4ரப்3ருத் கதி2தோ யோகீ3 யோகீ3ஶஸ் ஸர்வகாமத3: |
ஆஶ்ரமஸ் ஶ்ரமண: க்ஷாம: ஸுபர்ணோ வாயுவாஹந: || 91

த4நுர்த்த4ரோ த4நுர்வேதோ4 த3ண்டோ த3மயிதாऽத3ம: |
அபராஜிதஸ் ஸர்வஸஹோ நியந்தா நியமோ யம: || 92

ஸத்வவாந் ஸாத்விகஸ் ஸத்யஸ் ஸத்யத4ர்மபராயண: |
அபிப்ராய: ப்ரியார்ஹோऽர்ஹ: ப்ரியக்ருத் ப்ரீதிவர்த்த4ந: || 93

விஹாயஸக3திர் ஜ்யோதிஸ் ஸுருசிர் ஹுதபு4க் விபு4: |
ரவிர்விரோசநஸ் ஸூர்யஸ் ஸவிதா ரவிலோசந: || 94

அநந்தஹுதபு4க் போ4க்தா ஸுக2தோ நைகதோऽக்3ரஜ: |
அநிர்விண்ண: ஸதா3மர்ஷீ லோகாதி4ஷ்டா2ந மத்பு4த: || 95

ஸநாத் ஸநாதநதம: கபில: கபிரவ்யய: |
ஸ்வஸ்திதெ3ஸ் ஸ்வஸ்திக்ருத் ஸ்வஸ்தி ஸ்வஸ்திபு4க் ஸ்வஸ்தி த3க்ஷிண:|| 96

அரௌத்ர: குண்டலீ சக்ரீ விக்ரம்யூர் ஜிதஶாஸந: |
ஶப்தாதிக3ஶ் ஶப்த3ஸஹ: ஶிஶிரஸ் ஶர்வரீ: || 97

அக்ரூர: பேஶலோ த3க்ஷோ த3க்ஷிண: க்ஷமிணாம்வர: |
வித்3வத்தமோ வீதப4ய: புண்யஶ்ரவணகீர்த்தந: || 98

உத்தாரணோ துஷ்க்ருதிஹா புண்யோ து3ஸ்ஸ்வப்ந நாஶந: |
வீரஹா ரக்ஷணஸ் ஸந்தோ ஜீவந: பர்யவஸ்தித: || 99

அநந்தரூபோऽநந்தஶ்ரீ: ஜிதமந்யுர் ப4யாபஹ: |
சதுரஶ்ரோ கபீ4ராத்மா விதி2ஶோ வ்யாதி3ஶோ தி3ஶ:: || 100

அநாதி3ர் பூ4ர்பு4வோ லக்ஷ்மீஸ்ஸுவீரோ ருசிராங்க3த: |
ஜநநோ ஜநஜந்மாதிர் பீ4மோ பீ4மபராக்ரம: || 101

ஆதா4ரநிலயோ தா4தா4 புஷ்பஹாஸ: ப்ரஜாக3ர: |
ஊர்த்4வக3ஸ் ஸத்பதா2சார: ப்ராணத3: ப்ரணவ: பண: || 102

ப்ரமாணம் ப்ராணநிலய: ப்ராணத்4ருத் ப்ராணஜீவந: |
தத்வம் தத்வவிதே3காத்மா ஜந்மம்ருத்யுஜராதிக3: || 103

பூ4ர்பு4வ: ஸ்வஸ்தருஸ்தாரஸ் ஸவிதா ப்ரபிதாமஹ: |
யஜ்ஞோ யஜ்ஞபதிர் யஜ்வா யஜ்ஞாங்கோ3 யஜ்ஞவாஹந: || 104

யஜ்ஞப்4ருத் யஜ்ஞக்ருத் யஜ்ஞீ யஜ்ஞபு4க் யஜ்ஞஸாத4ந: |
யஜ்ஞாந்தக்ருத் யஜ்ஞகுஹ்யம் அந்நமந்நாத3 ஏவ ச: || 105

ஆத்மயோநிஸ் ஸ்வயஞ்ஜாதோ வைகா2நஸ் ஸாமகா3யந: |
தேவகீநந்த3நஸ் ஸ்ரஷ்டா க்ஷிதீஶ: பாபநாஶந: || 106

ஶங்கப்4ருந் நந்த3கீ சக்ரீ ஶார்ங்கத4ந்வா கதா3த4ர: |
ரதா2ங்கபாணி ரக்ஷோப்4யஸ் ஸர்வப்ரஹரணாயுத4: || 107

ஸ்ரீ ஸர்வப்ரஹரணாயுத4 ஓம் நம இதி ||

வநமாலீ க3தீ3 ஶார்ங்கீ ஶங்கீ2 சக்ரீ ச நந்தகீ
ஸ்ரீமாந் நாராயணோ விஷ்ணுர் வாஸுதேவோऽபி4ரக்ஷது 108

## பலஶ்ருதி

இதீத3ம் கீர்த்தநீயஸ்ய கேஶவஸ்ய மஹாத்மந: |
நாம்நாம் ஸஹஸ்ரம் தி3வ்யாநாம் அஶேஷேண ப்ரகீர்த்திதம்: || 109

ய இத3ம் ஶ்ருணுயாந்நித்யம் யஶ்சாபி பரிகீர்த்தயேத் |
நாஶுப4ம் ப்ராப்நுயாத் கிஞ்சித் ஸோऽமுத்ரேஹ ச மாநவ: || 110

வேதாந்தகோ3 ப்ராஹ்மணஸ் ஸ்யாத் க்ஷத்ரியோ விஜயீ ப4வேத் |
வைஶ்யோ த4நஸம்ருத்த4ஸ் ஸ்யாத் ஶூத்3ரஸ் ஸுக2ம்
அவாப்நுயாத்:|| 111

த4ர்மார்த்2தீ ப்ராப்நுயாத் த4ர்மம் அர்த்தா2ர்த்தீ2 சார்த்த2
மாப்நுயாத் |
காமாநவாப்நுயாத் காமீ ப்ரஜார்த்தீ2 ப்ராப்நுயாத் ப்ரஜா: || 112

ப4க்திமாந் யஸ் ஸதோ3த்தா2ய ஶுசிஸ் தத்க3தமாநஸ: |
ஸஹஸ்ரம் வாஸுதே3வஸ்ய நாம்நாமேதத் ப்ரகீர்த்தயேத்: || 113

யஶ: ப்ராப்நோதி விபுலம் யாதி ப்ராதா4ந்யமேவ ச |
அசலாம் ஶ்ரியமாப்நோதி ஶ்ரேய: ப்ராப்நோத்யநுத்தமம்: || 114

ந ப4யம் க்வசிதாப்நோதி வீர்யம் தேஜஶ்ச விந்த3தி |
ப4வத்யரோகோ3 த்3யுதிமாந் ப3லரூப கு3ணாந்வித: || 115

ரோகார்த்தோ2 முச்யதே ரோகா3த் ப3த்தோ முச்யேத ப3ந்த4நாத் |
ப4யாந்முச்யேத பீ4தஸ்து முச்யேதாபந்ந ஆபத: || 116

துர்கா3ண்யதிதரத்யாஶு புருஷ: புருஷோத்தமம் |
ஸ்துவந் நாமஸஹஸ்ரேண நித்யம் ப4க்திஸமந்வித: || 117

வாஸுதே3வாஶ்ரயோ மர்த்யோ வாஸுதே3வபராயண: |
ஸர்வபாப விஶுத்தா4த்மா யாதி ப்3ரஹ்ம ஸநாதநம்: || 118

ந வாஸுதே3வ ப4க்தாநாம் அஶுப4ம் வித்3யதே க்வசித் |
ஜந்ம ம்ருத்யு ஜரா வ்யாதி4 ப4யம் நைவோபஜாயதே: || 119

இமம் ஸ்தவமதீ4யாந: ஶ்ரத்தா4ப4க்தி ஸமந்வித: |
யுஜ்யேதாத்ம ஸுகக்ஷாந்தி ஸ்ரீ த்4ருதி ஸ்ம்ருதி – கீர்த்திபி4: || 120

ந க்ரோதோ4 ந ச மாத்ஸர்யம் ந லோபோ4 நாஶுபா4 மதி: |
ப4வந்தி க்ருதபுண்யாநாம் பக்தாநாம் புருஷோத்தமே || 121

த்3யௌஸ் ஸந்த்ரார்க்க நக்ஷத்ரா க2ம் திஶோ பூ4ர்
மஹோத3தி4: |
வாஸுதே3வஸ்ய வீர்யேண வித்4ருதாநி மஹாத்மந: || 122

ஸஸுராஸுரகந்த4ர்வம் ஸயக்ஷோரக3 ராக்ஷஸம் |
ஜகத்வஶே வர்த்ததேத3ம் க்ருஷ்ணஸ்ய ஸசராசரம்: || 123

இந்த்ரியாணி மநோ பு3த்தி4ஸ் ஸத்வம் தேஜோ ப3லம் த்4ருதி: |
வாஸுதேவாத்மகாந்யாஸு: க்ஷேத்ரம் க்ஷேத்ரஜ்ஞ ஏவ ச: || 124

ஸர்வாக2மாநாமாசார: ப்ரத2மம் பரிகல்பித: |
ஆசாரப்ரத2மோ த4ர்மோ தர்மஸ்ய ப்ரபு4ரச்யுத: || 125

ரிஷய: பிதரோ தே3வா மஹாபூ4தாநி தா4தவ: |
ஜங்க3மா ஜங்க3மஞ்சேத3ம் ஜகந்நாராயணோத்3ப4வம்: || 126

யோக3ஜ்ஞானம் ததா2 ஸாங்க்2யம் வித்3யாஶ் ஶில்பாதிகர்ம ச |
வேதாஶ் ஶாஸ்த்ராணி விஜ்ஞானம் ஏதத் ஸர்வம் ஜனார்தநாத் || 127

ஏகோ விஷ்ணுர் மஹத்பூ4தம் ப்ருத2க்பூ4தாந்யநேகஶ: |
த்ரீந்லோகாந் வ்யாப்ய பூ4தாத்மா பு4ங்க்தே விஶ்வபு4கவ்யய: || 128

இமம் ஸ்தவம் ப4கவதோ விஷ்ணோர் வ்யாஸேந கீர்த்திதம் |
படேத்ய இச்சேத் புருஷ: ஶ்ரேய: ப்ராப்தும் ஸுகா2நி ச || 129

விஶ்வேஶ்வர மஜம் தே3வம் ஜக3த: ப்4ரபவாப்யயம் |
ப4ஜந்தி யே புஷ்கராக்ஷம் ந தே யாந்தி பராப4வம்: || 130

'ந தே யாந்தி பராப4வம்' ஓம் நம இதி

அர்ஜுந உவாச—

பத்3மபத்ர விஶாலாக்ஷ பத்3மநாப4 ஸுரோத்தம |
ப4க்தாநா மநுரக்தாநாம் த்ராதா ப4வ ஜநார்த3ந!: || 131

ஸ்ரீ ப3கவாநுவாச—

யோ மாம் நாமஸஹஸ்ரேண ஸ்தோதுமிச்சதி பாண்டவ |
ஸோऽஹமேகேந ஶ்லோகேந ஸ்துத ஏவ ந ஸம்ஶய: ||

ஸ்துத ஏவ ந ஸம்ஶய ஓம் நம இதி || 132

வ்யாஸ உவாச—

வாஸநாத் வாஸுதே3வஸ்ய வாஸிதம் தே ஜக3த்த்ரயம் |
ஸர்வபூ4த நிவாஸோऽஸி வாஸுதேவ நமோऽஸ்து தே: ||

ஸ்ரீ வாஸுதேவ நமோஸ்து த ஓம் நம இதி 133

பார்வத்யுவாச—

கேநோபாயேந லகு4நா விஷ்ணோர் நாம ஸஹஸ்ரகம் |
பட்2யதே பாண்டி3தை3ர் நித்யம் ஶ்ரோதுமிச்சாம்யஹம் ப்ரபோ4: ||
134

ஈஶ்வர உவாச—

ஸ்ரீராம ராமராமேதி ரமே ராமே மநோரமே |
ஸஹஸ்ரநாம தத்துல்யம் ராமநாம வராநநே: ||

'ஸ்ரீராமநாம வராநந' ஓம் நம இதி 135

ப்ரஹ்மோவாச—

நமோsஸ்த்வநந்தாய ஸஹஸ்ரமூர்த்தயே
ஸஹஸ்ர பாதா3க்ஷி ஶிரோரு பா3ஹவே
ஸஹஸ்ரநாம்நே புருஷாய ஶாஶ்வதே
ஸஹஸ்ரகோடி யுக3தா4ரிணே நம:
'ஸ்ரீ ஸஹஸ்ரகோடி யுக3தா4ரிண' ஓம் நம இதி 136

ஸஞ்ஜய உவாச—

யத்ர யோகே3ஶ்வர: க்ருஷ்ணோ யத்ர பார்த்தோ2 த4நுர்த4ர: |
தத்ர ஸ்ரீர்விஜயோ பூ4தி: த்4ருவா நீதிர்மதிர்மம ||

ஸ்ரீ ப4கவாநுவாச—

அநந்யாஶ் சிந்தயந்தோ மாம் யே ஜநா: பர்யுபாஸதே
தேஷாம் நித்யாபி4யுக்தாநாம் யோகக்ஷேமம் வஹாம்யஹம்
பரித்ராணாய ஸாதூ4நாம் விநாஶாய ச து3ஷ்க்ருதாம்
தர்ம ஸம்ஸ்தா2பநார்த்தா2ய ஸம்பவாமி யுகே3 யுகே3
ஆர்த்தா விஷ்ண்ணா: ஶிதி2லாஶ்ச பீ4தா:
கோ4ரேஷு ச வ்யாதி4ஷு வர்த்தமாநா: |
ஸங்கீர்த்ய நாராயண ஶப்3தமாத்ரம்
விமுக்த துக்கா2ஸ் ஸுகி2நோ பவந்து ||

காயேன வாசா மனஸேந்த்ரியைர்வா
புத்யாத்மனாவா ப்ரக்ருதே: ஸ்வபாவாத் |
கரோமி யத்யத் ஸகலம் பரஸ்மை
நாராயணாயேதி ஸமர்ப்பயாமி ||

•

## அருள்மிகு
## சினிவாசப்பெருமாள் திருக்கோயில்
## கல்கருடபகவான் திருத்தலம்



**நாச்சியார்கோயில் கும்பகோணம் .**

கவலைகள் நீங்கிட கல்கருடபகவான் அருள்பெருக!

# "அத (ஸம்க்ஷேப) த்வாதஸ ஸூர்ய நமஸ்கார:

ஸ்ரீ குருப்யேப நம: || அத்யபூர்வோச்சரித ஏவங்குண விஸேஷண விஸிஷ்டாயாம், சுபதிதௌ, ஸர்வரோக பரிஹார, ஸர்வாபீஷ்ட ஸித்தித்வாரா, பாரதி ரமண முக்ய ப்ராணாந்தர்கத, சூர்யாந்தர்கத ஸ்ரீ லக்ஷ்மீ நாராயண ப்ரேரணயா, ஸ்ரீ லக்ஷ்மீ நாராயண ப்ரீயர்த்தம், த்வாதஸ ஸங்க்யா நமஸ்காரான் கரிஷ்யே:- த்யானம் த்யே: ஸதா ஸவித்ர மண்டல மத்ய் வர்த்தி, நாராயண: ஸரஸிஜாஸந ஸன்னிவிஷ்ட: | கேயூரவான் மகரகுண்டலவான், க்ரீடி ஹாரி, ஹிரண்மய வபு: த்ருத சங்க சக்ர: | தேஜோ ராசிம் ஸிரியாயுக்தம் தப்தகாஞ்சன ஸன்னிபம், | கிரீடினே பத்மநேத்ரம் பத்மராக விபூஷ்தம் | பத்மாஸனம் பத்மகரம் பத்ம கர்பம தளைர்யுதம் | ஸப்தாஸ்வ ரதமாரூடம் த்விபுஜம் வரதம் ரவீம் || ... இனி நமஸ்காரங்கள்:- *(1)* ஓம் மித்ராய நம: ஓம், ஓம் ரவயே நம: ஓம், *(2)* , *(3)* ஸுர்யாய நம: ஓம், *(4)* ஓம் பாநவே நம: ஓம் *(5)* ஓம் ககாய நம: ஓம் *(6)* பூஷ்ணே நம: ஓம், ஓம் ஹிரண்யகர்பாய நம: ஓம் *(7)* ஓம் மரீசியே நம: ஓம் *(8)* , ஓம் ஆதித்யாய நம: ஓம் *(9)* , ஓம் ஸவித்ரே நம: ஓம், *(10)* ஓம் அர்க்காய நம: ஓம், *(11)* ஓம் பாஸ்கராய நம: ஓம் *(12)*

ஆதித்யஸ்ய நமஸ்காரம் ஏ குர்வந்து தினே, தினே | ஜன்மாந்தர ஸஹஸ்ரேஷு தாரித்யம் நோபஜாயதே || யஸ்யஸமித்ராச... நேன த்வாதஸ நமஸ்காரஸ்ய பகவான் சூர்யாந்தர்கத பாரதீரமண முக்யப் ப்ராணாந்தர்கத ஸ்ரீ லக்ஷ்மீ நாராயண ப்ரீயதாம்... க்ருஷ்ணார்பண மஸது..... இதி ஸம்க்ஷேப த்வாதஸ சூர்ய நமஸ்காரம் ஸமாப்தா.

தகவல்: N. வெங்கடாச்சார் (நாச்சியார் கோவில்)

